# வடமொழி இலக்கிய வரலாறு

இலங்கை சாகித்ய அகாடமியின்
பரிசு பெற்றது

டாக்டர்
கா. கைலாசநாதக் குருக்கள்
சம்ஸ்கிருத பேராசிரியர்,
இலங்கைப் பல்கலைக் கழகம்




நர்மதா பதிப்பகம்
நல்ல நூல் வெளியீட்டாளர்கள்
1, வியாசராவ் தெரு, தி. நகர்
சென்னை—600 017

விரைவில் வெளிவர இருக்கும்
ஆசிரியரது மற்றொரு அரிய நூல்

"சைவத் திருக்கோயிற் கிரியை நெறி"

**Price Rs: 12-00**

Pages XVI + 208


● 'VADAMOZHI ILAKKIA VARALARU'- (A History of Sanskrit Literature-Vedic Period) by Doctor K. KAILASANATHA KURUKKAL © ● First Edition: (in Srilanka 1962) in India December 1981 ● Published by T. S. RAAMALINGAM, NARMADHA PATHIPPAKAM, T' Nagar, Madras-600 017. ● Printed at: M/s PRABHU PRINTING HOUSE, Madras-600 017. ●


## பேராசிரியர் கா. கைலாசநாதக் குருக்கள்

சம்ஸ்கிருதக் கல்வியில் கடந்த நாற்பதாண்டு காலமாக ஈடுபட்டுவருகிற இவர் சம்ஸ்கிருதத்தில் மட்டுமின்றித் தமிழ், ஆங்கிலம், இலத்தீன், பாளி ஆகிய மொழிகளிலும் பயிற்சி பெற்றவர். சம்ஸ்கிருதத்தைச் சிறப்புப் பாடமாகக்கொண்டு இலங்கைப் பல்கலைக் கழகத்தில் 1947-ம் ஆண்டு பி. ஏ. பட்டத்தையும் 1950ல் எம். ஏ. பட்டத்தையும் பெற்றார்.

இந்தியாவில் பூனாப் பல்கலைக்கழகத்தில் சம்ஸ்கிருதத் துறையில் இரண்டு ஆண்டுகள் இதிகாச புராணங்கள் காட்டும் சைவம் பற்றித் தென் பாரதத்திலும் இலங்கையிலும் நிலவி வரும் சைவக் கிரியை மரபுகளுடன் தொடர்புபடுத்தி இவர் நிகழ்த்திய ஆராய்ச்சிக்காக 1961ம் ஆண்டில் பூனாப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கிற்று.

1947ம் ஆண்டு முதல் இலங்கைப் பல்கலைக்கழகத்தில் சம்ஸ்கிருத விரிவுரையாளராகக் கடமையாற்றி வந்த பேராசிரியர் 1975ம் ஆண்டு இலங்கைப் பல்கலைக்கழகத்தின் யாழ்ப்பாண வளாகத்தில் இந்து நாகரிகப் பேராசிரியராகவும் (Professor of Hindu civilisation) இந்து நாகரிகத் துறைத் தலைவராகவும் நியமனம் பெற்றார்.

பாரத நாட்டிலும் காணற்கரியவாறு இந்து நாகரிகப் பேராசிரியரையும் இந்து நாகரிகத்துறையையும் எம். ஏ, Ph. D. முதலிய பயிற்சி நெறிகளுட்பட்ட உயர்மட்டத்தில் வளர்த்துவரும் தனிச் சிறப்புவாய்ந்த யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்திலேயே இவர் தொடர்ந்து பேராசிரியராகவும் துறைத் தலைவராகவும் கடமையாற்றி வருகிறார்.

யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தின் ஓர் அங்கமாக விளங்கும் இராமநாதன் நுண்கலைக் கல்லூரியின் (Ramanathan College of Fine Arts) தலைவராகவும் 1976ம் ஆண்டு முதல் பணியாற்றி வருகிறார்.

● ●

Prof. K. KAILASANATHA KURUKKAL
M. A. (Ceylon) Ph. D. (India)
Head of the Department
Department of Hindu Civilization
University of Jaffna,
Thirunelvely, JAFFNA.

'வடமொழி இலக்கிய வரலாறு' சம்ஸ்கிருதம் கற்கும் மாணவர்களின் தேவை கருதி உருவாயிற்று. இனிய தமிழ் நடையில் தானே அமைந்த காரணத்தாலும் வேத இலக்கியம் பற்றித் தெளிவாக அறியத்தரும் நூலாக விளங்குவதனாலும் மாணவர்கள் மட்டுமின்றி வைதிக இலக்கியம் பற்றி அறிய விழையும் இரசிகர்களும் சுவைத்துப் படிக்கும் சூழ்நிலை ஏற்பட்டதை உணரலானேன்.

இந்நூலின் இரண்டாம் பதிப்பு வெளிவருவதை அறிந்து மட்டிலா மகிழ்ச்சி யடைகிறேன். இந்நூலின் தேவையை நன்குணர்ந்து இரண்டாம் பதிப்பை வெளியிட முன் வந்த நர்மதா பதிப்பக உரிமையாளர் திரு டி. எஸ் இராமலிங்கம் அவர்களுக்கும் இதற்காக பெரிதும் துணை நின்ற திரு ஆர். பத்மனாப ஐயர் அவர்களுக்கும் என் நன்றி கலந்த பாராட்டுக்கள் உரித்தாகுக.

7—12—1981
யாழ்ப்பாணம். கா. கைலாசநாதக் குருக்கள்

# முன்னுரை...

வடமொழி இலக்கிய வரலாறு பற்றி நூலொன்றைத் தமிழில் எழுதும்படி என் நண்பர்கள் பலர் என்னை ஊக்குவித்து இப் பணியில் ஈடுபடச் செய்தனர். சூழ்நிலையும் இதற்குப் பெரிதும் உதவிற்று.

இலண்டன் பல்கலைக்கழகப் பாடத் திட்டத்திலும் இலங்கைப் பல்கலைக் கழகப் பாடத் திட்டத்திலும் சம்ஸ்கிருதம் முக்கிய பாடங்களி லொன்றாக இருந்து வருகின்றது. இப் பல்கலைக் கழகத் தேர்வுகளுக்காகப் படிப்பவர்களின் தேவைக்கேற்ற நூல்கள் பல ஆங்கிலத்தில் இருக்கின்றன. தமிழிலும் சிங்களத்திலும் அறிவுறுத்தும் முறையை இலங்கைப் பல்கலைக் கழகம் சென்ற இரண்டு ஆண்டுகளாக மேற்கொள்ளலாயிற்று. தமிழில் உயர்தரக் கல்வி கற்பிக்கும் இச் சூழ்நிலை தோன்றியதன் பின், பல்கலைக் கழகத் தொடக்கத் தேர்வை நாடி நிற்பவர்களுக்கும் பல்கலைக் கழகத்திற் கற்போருக்கும் இன்றியமையாத நூல்கள் பல தமிழில் வெளியாக வேண்டிய நிலை ஏற்பட்டது.

இச் சூழ்நிலையில் இவ்வரலாற்று நூலை நான் எழுதத் தொடங்கிய பொழுது, இது சம்ஸ்கிருதம் கற்கும் மாணவர்களுக்கு மட்டுமின்றி இம் மொழியையும் இதன் இலக்கியச் சிறப்பினையும்பற்றி அறிய அவாவும் ஏனையோருக்கும் பயன்படும் வகை அமைதல் சாலச் சிறந்தது என்னும் எண்ணம் உண்டாயிற்று. எனவே, மாணவரும் ஏனையோரும் சுவைத்து வாசிக்கும் வண்ணம் இவ்வரலாற்றை உருவாக்க முனைந்தேன். இந்நூலில் சம்ஸ்கிருதச் சொற்களெல்லாம் தமிழெழுத்திலேயே காணப்படுகின்றன. ஆகவே, சம்ஸ்கிருதம் சிறிதும் அறியாத வாசகர்களும் இடர்ப்பாடெதுவும் இன்றி இந்நூலைத் தொடர்ச்சியாக வாசிக்கலாம்.

இந்நூல் உருவாகும் பொழுது மாணவர்களின் நலங் கருதி ஒவ்வொரு பக்கத்தின் அடியிலும் விளக்கக் குறிப்புக் களைத் தந்து விஷயங்களை விரிவாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூற எண்ணியிருந்தேன். இவ்வடிக் குறிப்புக்களில் மட்டும் நாகரி எழுத்து இன்றியமையாது இடம்பெற நேரிட்டது. நாகரியை அச்சிடும் வசதி இங்கு கிடையாமையால் குறிப்பெழுதும் நோக்கம் கைவிடப்பட்டது. அச்சிடும் வசதி பின்னொருகால் நேரிடின் இக்குறிப்புக்களையும் சேர்த்து வெளியிடலாம் என எண்ணுகிறேன். சம்ஸ்கிருதச் சொற்களைத் தமிழில் எழுதும் பொழுதும், தமிழில் வழங்கி வரும் சம்ஸ்கிருதச் சொற்களை நாகரியில் எழுதும் பொழுதும் மாணவர்கள் பெருங் கஷ்டத்திற்குள்ளாகின்றனர். இதை நீக்க, இந்நூலில் காணப்படும் முக்கியமான தமிழ்ச் சொற்களுக்கு நேரிடையான சம்ஸ்கிருதச் சொற்களை அகர வசைப்படுத்தி ஈற்றில் இணைக்க எண்ணி இருந்தேன். இதுவும் அச்சடிக்கும் வசதி இன்மையால் இங்கு இடம் பெறவில்லை. அகர வரிசைப்படுத்தப்பட்ட பொருளகராதி மட்டும் ஈற்றில் சேர்க்கப்பெற்றுள்ளது.

இப்புத்தகம் இலங்கைப் பல்கலைக் கழகம் நடத்தும் தொடக்கத் தேர்வுக்கும் [University Entrance and H. S. C.] பொதுக் கலைத் தகுதித் தேர்வுக்கும், [General Arts Qualifying Examination] கலைமானித் தேர்வுக்கும், B. A. Genera சம்ஸ்கிருதத்தை ஒரு பாடமாகக் கொண்டு பரீட்சை எழுது பவர்களுக்குப் பயன்படும்.

யாழ்ப்பாணம், பரமேஸ்வரக் கல்லூரியின் தலைமை தாங்கி அதிபராகக் கடமையாற்றிய பொழுது அங்கு கல்வி கற்ற எனக்குப் பிற்கால உயர்தரக் கல்விக்கு அடிப்படையாய் வேண்டிய அறிவு புகட்டிய பேராசிரியரும், முன்னை நாள் தபால் ஒலிபரப்பு மந்திரியாக விளங்கியவருமான உயர்திரு சு. நடேச பிள்ளை, [B. A. B. L. F. R. E. S.] அவர்கள் அணிந்துரை நல்கி இந் நூலைப் பெருமைப்படுத்தியுள்ளார்கள்.



அதற்காக அவருக்கு நான் செய்யக்கூடிய கைம்மாறு யாது உளது?

இந் நூலை உருவாக்கத் துணை புரிந்தோர் பலர். இவர்க்கு என் நன்றி என்றும் உரியது. என்னுடன் பல்கலைக் கழகத்தில் சம்ஸ்கிருதத் துறையில் விரிவுரையாளராய்க் கடமை ஆற்றிவரும் G. சுந்தரமூர்த்தி எம். ஏ. அவர்கள், நான் இந் நூலை உருவாகும் வேளை உடனிருந்து பல திருத்தங்களைச் செய்யும் பேருதவி புரிந்தார். அச்சேறும் வேளை பிழைகளைக் களைய அவர் மேற்கொண்ட முயற்சி இந்நூல் இவ்வாறு உருவாக இன்றியமையாததாயிற்று இலங்கைப் பல்கலைக் கழகத்தின் நூல் நிலையத்தில் துணை அதிபராகக் கடமையாற்றும் சி. முருகவேள் [B. A. Hons.] அவர்கள் இந்நூல் முழுவதையும் நமக்கு வாசித்துப் பல திருத்தங்களைச் செய்வதற்குச் சிரமம் சிறிதும் பாராது தம் ஓய்வு நேரம் முழுவதையும் பல நாட்களாகச் செலவிட்டார். குறிப்பகராதியைத் தாமே உருவாக்கப் பெரிதும் விரும்பியும், உயர்தரப் பயிற்சிக்காக மேல்நாடு செல்ல நேரிட்டதால், அது முடியாதுபோயிற்று. நூலின் இறுதியில் இடம் பெற்றுள்ள பொருளகராதியைத் தொகுத்தும், அச்சாகும் வேளை அச்சு நிலையத்திலேயே பெரும் பொழுதைச் செலவிட்டுப் 'புரூப்' பார்த்தும், புத்தகத்தை உருவாக்கியவரான என் மருகர் ப. சர்வேஸ்வர ஐயர் [B. A. Hons.] என் பாராட்டிற்குரியவர். என்னிடம் சம்ஸ்கிருதம் பயின்று வரும் ஆசிரியர் ஆ. நவரத்தினம் அவர்கள் கையெழுத்துப் பிரதியை அழகாக எழுதியும், 'புரூப்' பார்த்தும் பெரிதும் உதவினர். இவர்களனைவருக்கும் மிகவும் கடப்பாடுடையேன்.

நூல்களை உருவாக்குவதிலும் அவற்றை வெளியிடுதலே அரும் பெருங் கைங்கரியம். பலனெதையும் எதிர்பாராது அறிவைப் பரப்புதல் ஒன்றையே தனி நோக்காகக் கொண்டு, மட்டக்களப்பு மான்மியம், விபுலானந்த அமுதம், சம்ஸ்கிருத இலகு போதம், திருமுருகாற்றுப்படை, சுப்பிரமணிய

பராக்கிரமம் முதலிய நூல்களையும், இன்னும் எண்ணிறந்த நூல்களையும் தரங்குன்றாது அச்சிட்டு வெளிபிட்டு அறிவொளி பரப்பி வரும் கலா நிலையத்தின் சேவை என்றென்றும் மறக்கற்பாற்றன்று.

மெய்கண்டான் அச்சக நிலையத்தில் அதிக வேலையுள்ள இச்சமயத்திலும், இந்நூலை மிகக் குறுகிய ஒருமாத காலத்துள் அழகுற அச்சிட்டுதவ முன்வந்த மெய்கண்டான் அதிபர் திரு என். இரத்தினசபாபதி அவர்களது பரோபகாரமும், இந்நூலின் அச்சு வேலையை நேரே முன்னின்று ஊக்குவித்த மெய்கண்டான் மானேஜர் திரு. ந. நமசிவாயம் அவர்களது சேவையும், வெகுவிரைவில் இந்நூல் முற்றுப் பெற ஒத்துழைத்த மெய்கண்டான் அச்சுயந்திரத் தொழிலாளரது சேவையும் மிகவும் பாராட்டற்குரியன.

இதைத் தொடர்ந்து, இதிகாசம், புராணங்கள் ஆகிய இரண்டினையும் பற்றிய வரலாற்றை இவ் வடமொழி வரலாற்று வரிசையில் இரண்டாவது நூலாகவும், சம்ஸ்கிருத காவியங்களின் வரலாற்றை மூன்றாவது நாலாகவும் நாடகங்களின் வரலாற்றை நான்காவது நூலாகவும் எழுதி உருவாக்கலாம் என எண்ணி இருக்கிறேன்.

அறிஞருலகம் இதனை மனமுவந்து ஏற்று, இந்நூலிற் காணப்படும் குறைகளனைத்தையுங் களைந்து, இந்நூலைப்பயன்படுத்துவது மட்டுமன்றி அக்குற்றங்களை எனக்கு எடுத்துக்காட்டி அடுத்த பதிப்பில் அவற்றை நீக்க வழி செய்து நான் இப்பணியைத் தளராது தொடர்ந்து செய்துவரும் வண்ணம் ஊக்கம் அளிக்கும் என்பது எனது முழு நம்பிக்கை.

இலங்கைப்
பல்கலைக் கழகம்,
பேராதனை.

கா. கைலாசநாதக் குருக்கள்

(முதற்பதிப்புக்குரிய முன்னுரை)

# அணிந்துரை

திரு. சு. நடேசப்பிள்ளை, B.A., B.L., F.R.E.S.
அவர்கள் அளித்தது

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வடமொழியுடன் தொடர்புகொண்ட தமிழில் வடமொழி இலக்கிய வரலாற்றைப்பற்றி அறிந்துகொள்வதற்கு நூல்கள் இல்லாதிருப்பது பெருங் குறையாகும். சில ஆண்டுகளுக்கு முன் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினின்று 'வடமொழி வரலாறு' என்ற பெயருடன் ஒரு நூல் வெளிவந்தது. அதன் பிரதிகள் இப்பொழுது கிடைப்பதில்லை. இந்நிலையில் திரு. கா. கைலாசநாதக் குருக்கள், "வடமொழி இலக்கிய வரலாறு" என்ற நூலை இயற்றி வெளியிடுவது பாராட்டத்தக்க செயலாகும். இலங்கைப் பல்கலைக் கழகத்தில் வடமொழி விரிவுரையாளராகக் கடமையாற்றும் இவர்கள் வடமொழியில் சிறந்த விற்பத்தியுள்ளவர்கள்; பூனாப் பல்கலைக் கழகத்தின் வடமொழி ஆராய்ச்சித்துறையில் பயின்று கலாநிதிப் பட்டம் பெற்றவர்கள்; தமிழ் மொழியிலும் பாண்டித்தியம் படைத்தவர்கள். இவர்கள் வடமொழி வரலாற்றைப்பற்றி எழுதியுள்ள நூல் மிகவும் பயனளிக்கும் முறையில் அமைந்திருக்கிறது.

இந்நூலின் முதற்பாகம் இப்பொழுது வெளியிடப்படுகின்றது. இப்பகுதி 'வைதிக இலக்கியத்தை'ப் பற்றியதாகும். பாணினி முனிவர் வடமொழி இலக்கணத்தை வரையறுப்பதற்கு முன் தோன்றிய வைதிக இலக்கியத்துக்கும், அம்முனிவர் காலத்துக்குப் பின் தோன்றிய வடமொழி இலக்கியத்துக்கும் இலக்கண அமைப்பில் சில வேறுபாடுகள் உண்டு. இங்கு வைதிக இலக்கியம் என்பது வேதங்களையும், அவற்றின் வழிவந்த பிராமணங்களையும், ஆரணியகங்களையும், வேதங்களின் முடி

யாக அமைந்த உபநிடதங்களையும், வேதங்களைச் சார்ந்த ஆறங்கங்களையும் குறிப்பிடுகின்றது. இவ் விலக்கியத்தின் அகன்ற பரப்பைத் திரு. கைலாச நாதக் குருக்களின் நூல், ஒரு பெரிய உருவத்தின் பிரதிபிம்பத்தைச் சிறிய அளவில் ஒரு கண்ணாடி காட்டுவதுபோல், சுருக்கமாக விளக்கிக் காட்டுகின்றது. இவ்விலக்கியத்தைப்பற்றி மாணவர்கள் முக்கியமாக அறிய வேண்டுவனவற்றை இந்நூல் திரட்டித் தருகிறது. வேதங்களைப்பற்றி மேற்றிசை நாட்டறிஞர்கள் கொண்ட கருத்துக்களும் இந் நூலில் இடம் பெறுகின்றன. வேதகாலத்தைப் பற்றி இவ்வாராய்ச்சியாளர் கூறும் முடிபுகளும், இந்திய நாட்டு விற்பன்னர்களாகிய பாலகங்காதர திலகர் முதலியோரின் கொள்கைகளும் இதில் விளக்கப்பட்டுள்ளன.

வேதங்கள் பல தெய்வங்களைப் புகழ்ந்து பாடுவதால், அவற்றின் அந்தரங்கக் கருத்தை அறியாது சில ஆராய்ச்சியாளர்கள் இடர்ப்படுகின்றனர். 'பரதெய்வம் ஒன்றே' என்பது வேதங்களின் முடிபாகும். ''ஏகம் சத்: விப்ரா பகுதா வதந்தி'' என்ற வேத வாக்கியம் இவ்வுண்மையை உணர்த்துகின்றது. 'அக்கினி, வாயு, இந்திரன் முதலிய தெய்வங்களை வேதங்கள் போற்றும்போது, அவற்றின் வழியாக அப்பர தெய்வமே அருள்புரிகின்ற படியால், அதன் புகழை அத்தெய்வங்களின்மீது வேதமந்திரங்கள் ஏற்றித் துதிக்கின்றன' என்ற கருத்தை இந் நூலாசிரியர் விளக்கியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

இந்நூலின் தூய தமிழ்நடை இதற்கு ஒரு தனிச் சிறப்பை அளிக்கின்றது.

இராமநாதன் கல்லூரி,
சுன்னாகம். 4-10-62. சு. நடேச பிள்ளை

## இந்நூலின்
## முதற் பதிப்பிற்கான
## சில மதிப்புரைகள்

● தமிழில் ஸம்ஸ்கிருத வரலாற்றைப் பற்றிய நூல் வெளிவராத நிலையைக் கவனித்து இவ்வாசிரியர் இந்நூலை வெளியிட்டுள்ளார். இம்முயற்சி புகழ்ச்சிக்குரியதாகும். வேத இலக்கியத்தைப் பற்றிய இந்நூலில் நான்கு வேதங்கள், பிராம்மணங்கள், ஆரண்யகங்கள், உபநிஷதங்கள், சூத்திரங்கள் ஆகியவற்றைப் பற்றிய வரலாறு விவரமாகத் தரப்பட்டுள்ளது.

ஆசிரியர் இலங்கைப் பல்கலைக்கழக ஸம்ஸ்கிருத விரிவுரையாளர்; ஆராய்ச்சியில் பட்டம் பெற்றவர். ஆகவே தக்க முறையில் இதை எழுதியுள்ளார். நல்ல தாளில் அழகாக அச்சிட்டுள்ள இப்புத்தகம் நன்கு வரவேற்கத் தக்கது.

எஸ். என். ஸ்ரீ ராமதேசிகன், சுதேசமித்திரன், சென்னை
ஏப்ரல் 7, 1963

● திரு. கைலாசநாதக் குருக்களின் ஆழ்ந்த அறிவையும், புலமையையும் நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் காணக் கூடியதாக இருக்கிறது.........

வேத நூல்களைப் பற்றி விரிவாகவும், இனிய, எளிய நடையிலும் வடமொழி அறியாதவர்கள் கூட படித்துப் பயன் பெறும் முறையிலும் திரு. கைலாச நாதக் குருக்கள் இயற்றியுள்ள இந்நூல் மதிப்பு மிக்கதொரு இலக்கியப் பொக்கிஷம்.

ரஜனி, வீரகேசரி, இலங்கை 4 - 11 - 1962

● நூலாசிரியர் பண்டிதரும் பாமரரும் படித்தின்புற சரளமானஇனியநடையில் புதுமைநலமெருகிட்டு, தான் பெற்ற இன்பம் இவ்வையகமெல்லாம் பெறவேண்டும் என்ற பெருநோக்கால் தமிழுலகுக்கு அளித்துள்ளார். நூலில் தொட்ட தொட்ட இடமெல்லாம் கலை ஞாயிறு கதிர் வீசுகிறது. புலமையுள்ளம் நிழலாடுகிறது. செந்தமிழ்ப் பெருமக்கள் ஒவ்வொருவரும் படித்தின்புற வேண்டிய நூல்.

செ. தனபாலசிங்கன், தினகரன், இலங்கை 9 - 12 - 1962

● ● ●

# பொருளடக்கம்



● ●

## வடமொழி

## இலக்கிய வரலாறு

உலக மொழிகள் பலவற்றுள், இலத்தின், கிரேக்கம், இரேபியம், சம்ஸ்கிருதம் என்பனவும், ஜர்மனியம், பிரெஞ்சு, ஆங்கிலம், தமிழ் என்பவையும் முக்கியமானவை களாம். இம்மொழிகளுள் ஒன்ருகிய சம்ஸ்கிருத மொழியின் இலக்கியத்தைப் ீயே இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

சம்ஸ்கிருதம் ..னினும் வடமொழி எனினும் அமையும். சம்ஸ்கிருதத்தை வடமொழி என்று குறிப்பிடும் மரபு தென்ஞட்டில் உண்டு. வடமொழி என்னும் இச்சொல் எதைக் குறிப்பாக உணர்த்துகின்றது என்பதைச் சிறிது பின்னர் கவனிப்போம்.

வடமொழி பல வளங்களைப் பெற்றுள்ளது; சமயக் கருத்துக்கள் நிரம்பிய நூல்கள் விரவப்பெற்று விளங்குவது. இது பற்றி உலகெங்கணும் அறிஞர் இதனைப் பெரிதும் விருப்புடன் படிக்கின்றனர். இம்மொழியுடன் தொடர்பு படாத பகுதி உலகில் பெரும்பாலும் இல்லையெனவே கூற லாம். ஒருகாலத்தில் இது கிழக்கே சீனுவரை சென்று ஜப்பானையும் எட்டிற்று. வட மொழியிற் காணப்படும் மகாயானப் பௌத்த நூல்கள் ஒரு கால் சீன மொழியிற் பெயர்த்தெழுதப்பட்டன. வடக்கே திபெத்தியரும் இவ்வழியே தம் மொழியில் நூல்கள் பல இயற்றினர். மேலும் ருஷியர் இன்றுவரை வடமொழி மீது காட்டி வரும் ஆர்வம் குறிப்பிடத்தக்கது. தெற்கே யாவா, சுமத்திரா, பாலித்தீவுகள் முதலிய இடங்களில் வடமொழி நூற் கருத்துக்களின் சாயல்களை அந்நாட்டில் விளங்கும் ஓவியங்களிலும் சிற்பங்களிலும் காணலாம். ஐரோப்பாவில், இங்கிலாந்து, ஜர்மனி முதலிய நாடுகள் உட்படப் பல இடங்களிலும், அமெரிக்காவிலும் இம்மொழி விழைந்து கற்கப்படுகின்றது. இவ்வுண்மையை அவ்வத் தேயத்தில் உள்ள சிறந்த கல்வி நிலையங்களான பல்கலைக்

கழகங்களில் சம்ஸ்கிருதம் போதிக்கப்படும் வகையினை உற்று நோக்கின் எளிதில் அறியலாம். தனிச் சிறப்பு வாய்ந்தும், பலவகை விஷயங்களைத் தன்னகத்தே கொண்டும் விரிந்து விளங்கும் இம்மொழி உலகிற் பல இடங்களில் பரந்து காணப்படுவதில் வியப்பொன்றுமில்லை.

இம் மொழியை இவ்வாறு உலகிற் பல இடங்களில் ஏன் விரும்பிக் கற்று வருகிறார்கள்? இதற்குப் பல காரணங்கள் உளவெனினும் இதன் பழமையே முதற் காரணம் என்பர். உலகிற் கிடைக்கக்கூடிய நூல்கள் யாவற்றுள்ளும் வேதங்களே பழமை மிக்கவை. இவற்றுள்ளும் மிகப் பழமை சான்றது 'இருக்கு வேதம்' என ஆராய்ச்சி வல்லவர்கள் ஒரு முகமாகத் துணிந்து முடிவு கூறியுள்ளார்கள். எழுத்துக் கலை தோன்றுவதற்குப் பன்னெடுங் காலத்திற்கு முந்தியது வேத காலம். இருக்கு வேதத்தின் அமைப்பு முறையும் பிற்கால இலக்கியங்களில் சிறிது சிறிதாக அருகி ஈற்றில் அறவே மறைந்து போன பல உருவங்களும், எடுத்தல், படுத்தல், நலிதல் என்ற முறையைப் பெரிதும் நிகர்த்து அமைந்து காணப்படும் ஒலி வேறுபாடுகளும், இம் மொழியின் தொன்மையையே பெரிதும் எடுத்துக்காட்டுகின்றன.

வடமொழியின் தொன்மையை இன்னொரு வழியாகவும் குறிப்பாக உணரலாம். வேதங்கள் தெய்விகம் வாய்ந்தவை. இவற்றிற்கு 'அபௌருஷேயங்கள்' என்னும் அடைமொழியை ஈந்து வேதநூல்கள் மக்களால் ஆக்கப்படாத தெய்விக நூல்கள் என ஆஸ்திகர்கள் போற்றுவார்கள். இதுபற்றியே இன்று வரை சமய நூல்கள் எல்லாம் வேதங்களை முதல் நூலாகக் கொள்ளுகின்றன. சாங்கியம், யோகம், நியாயம், வைசேஷிகம், பூர்வமீமாம்சை, உத்தரமீமாம்சை எனப்படும் ஆறு தரிசனங்களுக்கும் வேதங்களே பிரமாண நூல்கள். காணபத்தியம், சௌரவம், கௌமாரம், வைணவம், சாக்தம், சைவம் முதலிய ஆறு மதங்களுக்கும் வேதங்கள் முதல் நூல்களாக விளங்குகின்றன. வடமொழியின் தோற்றுவாயைக் கூறும் வரலாறொன்று இம்மொழியின் தெய்விகத் தன்மையை மேலும் தெளிவாகச் சுட்டிக்காட்டுகின்றது. அது பின் வருமாறு:



ஒருகால் கூத்தப் பிரானாகிய சிவபெருமான் கூத்தாடினான். கூத்தின் இறுதியில் அவன் தன் வலக்கையில் விளங்கும் உடுக்கை அசைத்தான். அவ்வசைவு ஒலித் திரள்களைத் தோற்றுவித்தது. பதினான்கு அசைவுகளினால் வெளிப்போந்த அவ்வொலி அலைகள் பதினான்கு சூத்திரங்களாக அமைந்தன. மகேஸ்வரன் என ஏத்தி வணங்கப்படும் சிவபெருமான் இவ்வாறு இச் சூத்திரங்கள் தோன்றுவதற்குக் காரணமாய்இருந்தமைபற்றி இச் சூத்திரங்கள் 'மகேஸ்வர சூத்திரங்கள்' எனப் பெயர் பெற்றன. இப்பதினான்கு சூத்திரங்களிலேயே சம்ஸ்கிருத மொழிக்கு இன்றியமையாது வேண்டப்படும் எழுத்துக்கள்எல்லாவற்றையும் காண்கிறோம். இவ்வெழுத்துக்களின் மேற்கூறிய வரலாறு இம் மொழி இறைவனைத் தோற்றுவாயாகக் கொண்டமைந்து தெய்வீக மொழியாய்த் திகழுகின்றதென்பதையே தெளிவாக்குகின்றது.

வடமொழியை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். காலத்தினால் மிகவும் முற்பட்ட வைதிகமொழி ஒன்று, பாணினி ஆசிரியர் காலத்தையடுத்து அவராலே மிகவுஞ் செப்பனிடப்பட்டதாய்த் தோன்றி விளங்கும் சம்ஸ்கிருதமொழி மற்றொன்று. பாணினியின் கைவண்ணத்தாலேயே சம்ஸ்கிருதம் மெருகிடப்பட்டது என்ற உண்மையைச் சுட்டிக்காட்டிய மேனாட்டறிஞர்கள் கூடப் 'பாணினி, சம்ஸ்கிருதத்தின் தந்தை' எனக் கூறியுள்ளார்கள். பிராகிருதம் முந்தியது; இதனைச்சீர்படுத்தி அமைத்ததின் விளைவே சமஸ்கிருதம். பண்படுத்தப்பட்ட மொழி, செம்மொழி என்னுங் கருத்துக்களை உணர்த்தும் சம்ஸ்கிருதம் பாணினிக்குப் பிந்தி விளங்கிய மொழியையே குறிக்கும் என மேனாட்டு மொழி வல்லுனர் குறிப்பிட்டுள்ளனர். மேலும், ஸ்வரங்களை அமைத்து உச்சரிக்கும் முறை வேதங்களுக்கே சிறப்பாக உடையது. இது ஏற்கனவே கூறியபடி அருகி அருகி உபநிமிடதங்களிற் பெரும்பாலும் மறைந்து சம்ஸ்கிருதத்தில் அறவே ஒழிந்து விடுகின்றது. மொழி வளமும், கருத்து வளமும் உச்சரிப்பதில் தமக்கென ஒரு தனி முறையினையுடையவையுமான வேதநூல்கள் இவ்வியல்புகளினாலேயே பழமை மிக்கவை எனச் சுட்டிக்காட்

டப்படுகின்றன. இங்கு காணப்படுவது போன்று ஸ்வரங்களை ஏற்றவாறு அமைத்து ஒலிக்கும் முறை கிரேக்க மொழியிலும் காணப்படுகின்றது. வைதிக இலக்கியம் பெரும்பாலும் சமயத் தொடர்பு உள்ளது. சம்ஸ்கிருதமோ முற்றிலும் அங்ஙனமன்று. சமயத் தொடர்பற்றவையும், உலகத் தொடர்பு மட்டும் கொண்டுள்ளவையுமான நூல்கள் பல சமஸ்கிருத இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.

பெரும்பாலான இந்திய நூல்களெல்லாவற்றிற்கும் அடிப்படையாகவிளங்கும் வடமொழியில் இதுவரைஇயற்றப்பட்ட நூல்களின் பரப்பை இன்னும் ஒருவரும் சரிவர மட்டிட்டுக் கூறவில்லை. அச்சில் வராது, ஏட்டுச்சுவடி வடிவில் கீழ்நாட்டிலும் மேல்நாட்டிலும் உள்ள புத்தக நிலையங்களில் இன்றுங் காணப்படும் நூல்கள் எண்ணிலடங்கா. முக்கியமான வடமொழி நூல்களின் பரப்பை ஆராயும்போது இந்நூல்கள் பல்வேறு துறைகளைப் பற்றியவையாய்ப் பல்வகைப் பண்பு வாய்ந்தவையாய் விளங்குவதாகக் காண்கின்றோம். இவற்றுள் சமய அடிப்படையில் எழுந்த நூல்களே எண்ணில்லாதவை. வேத மந்திரங்கள், ஆக்கவும் அழிக்கவும் ஆற்றல் வாய்ந்த அதர்வ மந்திரங்கள், சமய அறிவை யூட்டும் வரலாறுகள், கதைகள், சமய விரிவுரைகள், கிரியைகள் இயற்ற வேண்டும் முறையினை விரிக்கும் விளக்கங்கள் எல்லாம் வடமொழியில் விரிந்தது போன்றுவேறெரு மொழியிலும் விரிந்து காணப்படுவதில்லை என்பதைத் திடமாகக் கூறலாம். வீரச்சுவை செறிந்து பல்வேறு பண்புகளை ஒருங்கு பெற்று விளங்கும் பாரதமும், இலக்கியம் அமைய வேண்டும் வழியை வகுத்துக்காட்டும் இராமாயணமும் உலகிலே தலை சிறந்த இரு இதிகாச நூல்கள். உலகிலுள்ள இதிகாசங்களிலெல்லாம் மிகப் பெரியதாகக் கருதப்படுவது மகாபாரதமே. இவ்விதிகாசங்களை அடிப்படையாகக் கொண்டெழுந்த காப்பியங்கள் பலப்பல அவ்வக்காலங்களில் எழுதப்பட்டுவந்தன. பெரும்பாலும் இவை செய்யுளுருவத்தில் உருபெற்றுள்ளன. உரைநடையில் எழுதப்பட்ட நூல்களும் காவியப் பண்புகளை ஏற்றுத் தாமும் காவியங்களாகத் திகழுகின்றன.



"காவியங்கள் செய்யுள் வடிவத்தில்தான் அமைய வேண்டுவதில்லை; உரை நடையிலும் அமையலாம்" என்ற கருத்து வடமொழியிலுள்ள அலங்கார நூல்களில் தான் முதன் முதலில் தோன்றியது எனத் துணிவாககூறலாம். உரையுஞ் செய்யுளுங் கலந்த நடையும் காவியங்கள் சிலவற்றிற் பயின்று வந்திருப்பதையும் காணக் கூடியதாக இருக்கின்றது. இவை 'சம்பூகாவியங்கள்' எனப்பெயர் பெறும். இச்சம்பூ காவியங்கள் நூற்றுக்கணக்காக வடமொழி நூல்களுள் விரவிக்கிடக்கின்றன. வடமொழியில் நாடகங்களும் பல இருக்கின்றன. இங்கு நாடகக் கலை மிகவும் சிறந்தோங்கி வளர்ந்து வந்திருக்கின்றது. மேலும், புனைகதைகள், நீதிபுகட்டுங் கதைகள் எனக் கதைஇலக்கியம் வடமொழியிற் பரந்து விரிந்துள்ளது. உலகில் ஏனைய மொழிகளில் கதையிலக்கியங்களுக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளது பாரதத்தில் தோன்றிய கதையமைக்குங் கலையுணர்வே என ஆராய்ச்சியாளர் கூறுவர். செய்யுள் வடிவிலேயே சிறந்த நூல்களமைதல் வேண்டும் என்னுங் கருத்து மனத்தில் ஆழப்பதிந்தமையாற் போலும் அக்காலத்து நூலாசிரியர்கள் படிப்போர் மனத்தில் எளிதிற் பதியவைத்தல் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு எளிதில் மட்டிட்டு அளவு கூற முடியாதவாறு பல நூல்களைச் செய்யுள் வடிவில் யாத்தனர். இது பற்றியே வைத்தியம், வானசாத்திரம், சிற்பம், அறநூல், இலக்கண நூல், அகராதி நூல், தத்துவநூல், அணிநூல், அரசியல்நூல், கணிதநூல், சோதிட நூல், சங்கீதநூல், நாட்டியநூல், நாடகக்கலைநூல், மந்திர நூல் எனப் பலவகைப்பட்ட நூல்களெல்லாம் வரையின்றிப் பெருவாரியாக எழுந்தன. இவற்றுட் சில சூத்திரங்களாலமைந்துள்ளன. இவை படிப்போர் மனத்திற் பசுமரத்தாணி போல் இலகுவாகவும் ஆழமாகவும் பதிய வல்லவை. இனிமேற் சுருக்கிக் கூறமுடியாத அளவிற்குச் சுருக்கம் பெறும் சூத்திரங்களை அமைத்த ஆசிரியர்கள், தம் ஆற்றலையிட்டுப் பெருமை எய்தினர். ஓர் இலக்கண நூலாசிரியரொருவரை அணுகி, "நீங்கள் அமைத்த சூத்திரத்தை இன்னும் அரை மாத்திரை குறுக்கி அமைக்கலாமே. அவ்விதம் அமைப்பினும் அதன் கருத்துச் சிறிதும் வேறுபடாது அப்படி

யேதான் அமையுமே" எனக் கூறி அவ்வாறே அமைத்துக் காட்டுவோமேயாயின் அவ்வாசிரியர் ஆண் மகவு பிறந்தால் எழும் மகிழ்வை எய்துவர். இக்கருத்தைக் கூறும் பழமொழி ஒன்று வடமொழி வல்லுநரிடை இன்றும் வழங்கி வரக் காண்கின்றோம். சூத்திரங்களின் சிறந்த அமைப்பு முறைக்குப் பாணினியின் இலக்கண நூலே உயரிய எடுத்துக் காட்டு. இதுமட்டுமா? வடமொழி இலக்கியத்தில் தனி இடம்பெற்ற காமநூல் கூட சூத்திரங்களாலமைந்துள்ளது. "இத் துறையில் இன்று முறைப்படி எழுதப்பட்டு வரும் தலைசிறந்த நூல்களை இயற்றிய மேனாட்டவர்கள் கூட வியந்து போற்றும் வண்ணம் வாத்சாயனர் இயற்றிய காம சூத்திரம் வடமொழிக் காவியங்களின் கருத்துக்களை மிக வளம்படச் செய்துள்ளது" என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. சரித்திர இலக்கியம், இந்தியாவில், வடமொழியுட்பட எந்தமொழியிலும் பூரணமாக வளர்ச்சி அடையாதிருப்பினும் இவ்வகை நூல் சமஸ்கிருதத்தில் இல்லாமல் அறவே அற்றுப் போகவில்லை. காலவரையறையை ஏற்றவாறேமைத்து வரலாற்று நூல்களை அமைக்கும் முறை மேனாட்டவரிடை ஓங்கி வளர்ந்தவாறு வடமொழியில் அமையாத இடத்தும் சரித்திர இலக்கியங்கள் என ஓரளவுக்குக் குறிப்பிடக் கூடிய நூல்கள் சிலவற்றை இவ்விலக்கியப் பரப்பிற் காண்கிறோம். இந் நூலை ஆக்கியோர் கவிளானமையால் இவர் நூல்களில் சரித்திர நூலுக்கு ஏற்ற பண்புகளைக் காட்டிலும் கற்பனைக்கும் வருணனைக்கும் முதலிடம் அளிக்கப்பட்டிருக்கின்றது, இத்தன்மை வாய்ந்த இதிகாசங்களும் புராணங்களும், ராஜ தரங்கிணி போன்ற வரலாற்று நூல்களும் வடமொழி இலக்கியப் பரப்பின் பெரும்பகுதியைத் தமவாக்கிக் கொண்டன. உரை நூல்கள் வடமொழி இலக்கியத்தைப் பெரிதும் வளப்படுத்துகின்றன. வடமொழியில் உரைநடை கையாளப்பட்ட வகையே தனிப்பட்டது. உரைநடையிலமைந்த காவியங்களைத் தவிர ஏனைய உரைநடை நூல்களெல்லாம் உரை நூல்களே. இவை ஏற்கனவே செய்யுளாகவோ, சூத்திரங்களாகவோ அமைந்த மூலநூல்களின் புலப்படாத நுண்ணிய கருத்துக்களை எடுத்துரைப்பன. இவற்றை வடமொழியாளர்



வியாக்கியானங்கள் என்பர். சாயனர், மல்லிநாதர், சங்கரர் இராமானுஜர் முதலியோர் அறிஞருலகம் போற்றும் அறிவிற் சிறந்த உரையாசிரியர்கள். இவர்களின் உரைகள், இவ்வுரைகளை விளக்கும் உரைகள் இவ்வுரைகளை விளக்க மேலும் எழுந்த உரைகள் என வரைவில்லாது வளர்ந்து வந்த உரை நூல்களும் வடமொழி இலக்கியத்தின் பெரும்பகுதியையுடையவை. அன்று வழக்கொழிந்ததாகக் கூறப்படும் வடமொழி இன்று வளர்ந்து உலகெங்கணும் படர்ந்து பரவிநிற்கும் ஆங்கில மொழியை இத்தன்மைகளில் நிகர்த்து விளங்குகின்றது. இரு மொழிகளிலும் பெருகி காணப்படும். நூல்கள் எண்ணிறந்தவை. இருமொழிகளிலும் எழுதப்படாத விஷயங்களும் அநேகமாகக் கிடையா எனலாம். வடமொழி வழக்கில் இன்று இருந்திருந்தால் அதன் பரப்பு இன்னும் அகன்று இன்றைய விஞ்ஞான அறிவு நூல்களையும் தன்னகத்தே கொண்டு, எல்லாவகையாலும் ஆங்கிலத்தை விஞ்சியிருக்கும் என்பது தெளிவாகப் புலனாகின்றது.

தொன்மை பற்றியும், இதன் பரந்த இயல்பு காரணமாகவும், இது பல வளங்கள் வாய்க்கப் பெற்றதனாலும், அழகுக் கலையுணர்வு மிகுந்து விளங்குவதனாலும், வடமொழி மனித சமூகத்தின் பண்பாட்டு வரலாற்றைத் தொகுத்தமைப்பதற்கு வேண்டிய ஆதாரங்களைத் தரவல்ல அடிப்படைக் கருவூலமாகத் திகழ்கின்றது. மனிதனது மண்டையோடுகள், எலும்புகள் ஆகியவற்றையும் அவன் உபயோகித்த மட்கலங்கள் கற் கருவிகள் முதலியவற்றையும் துணைக்கொண்டே அவனுடைய பழைய வரலாற்றைச் சித்திரிக்க வல்ல இன்றைய அறிஞர்க்கு மனிதனுடைய நடையுடை, பாவனைகளைக் கூறாமற் கூறும் இலக்கியங்கள் இவ்வரலாற்றினைக் கோத்து வரைதற்கு எத்துணைப் பயனுள்ளதாயிருக்கும்! இதனாலேயே மேனாட்டவர் இம்மொழி கற்றதில் விசேட ஆர்வம் காட்டி வந்தனர். இவர்களிற் தலைசிறந்தவர் ஜர்மனியர்கள். இம்மொழியில் அமைந்துள்ள நூல்களைப் பல கோணங்களிலிருந்து துருவித் துருவி ஆராய முற்பட்ட இவ்வறிஞர்கள் மொழிகளின் ஒப்பியல் கண்டு, இந்தோயூரோபிய மொழி என்

ரொரு மொழி தொடக்கத்தில் இருந்திருத்தல் கூடும் என்றும் அதிலிருந்தே வடமொழியும், அதன் சாயல் பதிந்துள்ள ஏனைய கிரேக்க இலத்தின், ஜர்மானியம், முதலிய மொழிகளும் தோன்றி இருக்கலாம் என்றும் துணிந்தனர். இவ்வாதி மொழியை இந்தோ ஜர்மனியமொழி என முதலிற் பெயரிட்டழைத்தனர். மொழிகளை ஒப்பு முறை பற்றி ஆராய்ந்து கூறும் மொழி இயல் நூல்கள் முதலில் வெளிவந்தன. இதைத் தொடர்ந்து இம்முறையினைக் கொண்டே பழைய வரலாறுகள், சமய நிலைகள் முதலியன ஒப்பிட்டு ஆராயப்பட்டன. ஒரே தன்மைத்தான பல அம்சங்களைக் கொண்டிருப்பதனுல் இவை ஆதியில் ஒரே தோற்றுவாயைக் கொண்டிருந்திருக்கலாம் என ஊகிக்கின்றனர்.

இந்திய மொழிகளுட் சில வடக்கே வழங்கி வருவன. இந்தி, மராட்டி, குஜராத்தி, அஸ்ஸாமி, ஒரியா, காஷ்மீரி பஞ்சாபி, வங்காளி, முதலிய இம்மொழிகளில் வடமொழிச் சாயல் பெரிதுங் காணப்படுகின்றது. வடவேங்கடத்தை எல்லையாகக் கொண்டு பாரதத்தின் தெற்கே பெரும்பாலும் பயின்று வருவது தமிழ். இதன் இனத்தைச் சார்ந்தவை கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளு என்பன. இந் நான்கு மொழிகளும் பல பொதுத் தன்மைகளைக் கொண்டு ஒரே இன மொழிகளாக இன்றும் விளங்குகின்றன. எனினும் இவை வடமொழித் தொடர்பின் விளைவாக அதன் தன்மைகளை வரைவின்றி ஏற்று, "இவை தமிழினம் சார்ந்த மொழிகள் தாமோ?" என ஐயுறும் வண்ணம் மாற்றங்கள் பெற்றுள்ளன. எப்பொழுதும் தானே தனித்தியங்கவல்ல தமிழும் இதே வடமொழித்தொடர்பின் விளைவால் மாற்றங்கள் பலவற்றைப் பலவாறு ஏற்று வடமொழிக் கலப்பை மிகவும் பெற்றுக் காணப்படுகிறது. இந் நிலையைச் சங்க காலத்துக்குப் பின் எழுந்த நூல்களிற் பெரிதுங் காணலாம். இதிலிருந்து இந்தியமொழிகள் எல்லாவற்றிலும் வடமொழியின் சாயல் வெவ்வேறளவில் பதிந்திருக்கிறதென்னும் உண்மையை ஒரளவிற்கு உணரலாம். மேலும், வடமொழி ஒரு காலத்தில் பாரததேசம் முழுவதற்கும் பொது மொழியாக



விளங்கியதாலும், தெய்விக மொழியாகிச் சமய நூல்களை மிகுதியாகக் கொண்டமைந்திருப்பதனுலும், அரசியலில் ஒரு காலத்தில் முக்கியத்துவம் பெற்றுச் சிலாசாசனங்கள் அமைக்கவும் எடுத்தாளப்பட்டதாலும், இத்துறைகளிலெல்லாம் வடமொழித் தொடர்பு மற்றைய மொழிகளுக்குப் பெரிதும் வேண்டப்படலாயிற்று.

இனி எழுத்துக் கலை இம்மொழி வல்லுனர் நடுவில் எவ்வாறு உருவெடுத்து வளர்ந்தது என்பதைக் கவனிப்போம். கற்றறிந்த பண்டிதனைக் கல்வி கேள்விகளிற் சிறந்தவனெனக் குறிப்பிடும் வழக்கம் இன்றும் இருந்து வருகின்றது. கேள்வி முறைக்குக் கல்வித் துறையில் நெடுங்காலமாகத் தனி இடம் உண்டு. நன்கு கற்றறிந்தவனை வடமொழியில் 'பஹுசுருத' என்று குறிப்பிடுவர். இது நன்கு கேட்டவன் எனக் கருத்துப்படும். எனவே கேட்டல் அறிவைக் கொடுக்கின்றது என்பதும், கேட்டல், அறிதல் எல்லாம் ஒன்றையே குறித்து நிற்பன என்பதும், கல்வியறிவென்பது கேள்வியினுல் ஏற்படும் அறிவென்பதும், தெளிவாகின்றன. வேதங்களுக்கு வேறொரு பெயரான 'சுருதி' என்பதும் கேட்டல் என்னுங் கருத்தையே சுட்டுகின்றது. காதாற் கேட்டு ஓத வேண்டிய நூல்களே அன்றிக் கண்களால் பார்த்துப் படிக்க வேண்டிய பனுவல்களல்ல வேதங்கள் என்பது இதனுற் பெறப்படுகின்றது. இக் கருத்தினை வற்புறுத்தியும், எழுத்துக்களைப் பற்றி எதுவும் தெளிவாகக் கூறப்படாமையைச் சுட்டியும், வேத காலத்தில் 'எழுதும் முறை' பயில்வில்லை என அறிஞர் ஊகித்துக் கூறுவர்.

'வசிஷ்ட தர்ம சூத்திரத்திலே' தான் வடமொழி எழுத்துக்களைப் பற்றிய தெளிவான குறிப்புக்கள் முதன் முதலிற் காணப்படுகின்றன. இந்நூல் கி. பி. எட்டாம் நூற்ருண்டில் எழுந்ததாகப் பீலர் என்னும் அறிஞர் காட்டியுள்ளார். சிலர், இது கி. மு. நான்காம் நூற்ருண்டில் தோன்றியதென்பர். பாணினியின் 'அஷ்டாத்தியாயியில் லிபிகார' என்னும் சொல் எழுத்தையே குறிக்கும் வகையில் அமைந்திருப்பதைக்

கவனித்தல் வேண்டும். பாணினியின் காலம் கி. மு. எட்டாம் நூற்றூண்டு என்பது கோல்ட்ஸ்டுக்கர் என்பவரது கருத்து. பெரும்பாலான ஆராய்ச்சியாளர் இவர் கி. மு. நான்காம் நூற்றூண்டைச் சார்ந்தவர் எனக் கொள்வர். அக்ஷர, காண்ட, படல, கிரந்த என்னும் சொற்கள் பிற்கால வேதங்களில் வருவதனுல் அக்காலத்திலேயே எழுத்து முறை வழக்கிலிருந்த தென்பர் ஒரு சாரார். இதை முற்றிலும் மறுத்துக் கூறுவர் இன்னொரு சாரார். இதிகாசங்கள், புராணங்கள், காவியங்கள் முதலியன கூறுவதிலிருந்து இந்தியாவில் எழுத்துக் கலை வளர்ந்த வரலாற்றைக் கால வரையறையுடன் உறுதியாகக் கூறுதல் முடியாது. இவற்றுள் இதிகாசங்கள் பழையவை. இந்நூல்களில் அவ்வக் காலங்களிற் புகுத்தப்பட்ட இடைச்செருல்கள் உள்ளமையினுல் இங்கு கால வரையறைவுக்கு இடமில்லாமற் போய்விட்டது. லேகன, லேகக முதலிய சொற்கள் இங்கு காணப்படுகின்றன. இருந்தும் இவை வடமொழியிற் புகுத்தப்பட்ட சொற்கள் என்பது சிலரது கருத்து. எனினும் இதனுல் இதிகாசகாலத்தில் எழுத்து முறை நன்கு பயிற்சியிலிருந்த தென்ற உண்மை தெளிவாகின்றது.

பௌத்த நூல்களில் எழுத்துக் கலையைப்பற்றி நேரடியான குறிப்புக்களெதுவும் இல்லை. கேட்டலும் கேட்டதை மனனம் பண்ணுதலுமே வழக்கிலிருந்து வந்ததாக அறியக்கிடக்கின்றது. கி. மு. 240 வரை எழுத்தைப்பற்றி இந்நூல்களில் தெளிவான குறிப்புக்கள் எதுவும் இல்லை. அறிகுறிகளை மட்டும் அங்கும் இங்கும் காண்கின்றோம்.

லேக, லேகக என்ற பதங்கள் பிக்கு பாசியத்திலும், பிக்குணி பாசியத்திலும் வருவதாகச் சுட்டிக்காட்டப்படுகின்றன. பிக்கு பாசித்தியம் எழுத்தைப் போற்றிக் கூறுகின்றது. ஜாதகக் கதைகளிலும் எழுத்தைப் பற்றி அடிக்கடி குறிப்புக்கள் வருகின்றன. புத்த பிக்குக்கள், அக்ஷரிகா என்னும் விளையாட்டில் பங்குபற்றக் கூடாதென்று இங்கு விவாதிக்கப்பட்டிருக்கின்றது. இது எழுத்துக்களை ஊகித்துக் கூறும் ஒருவகை விளையாட்டாக இருந்திருக்கலாம். மேலும்,



ஒருவன் குற்றவாளியாகக் காணப்பட்டு அரசனுடைய ஆசார வாயிலில் அவனது பெயர் எழுதப்பட்டிருப்பின் அவன் புத்த பிக்குவாகச் சங்கத்திற் சேரமுடியாதென்று கூறப்பட்டிருக்கின்றது. எழுதுவது ஒரு முக்கிய தொழிலாக இந்நூல்கள் குறிப்பிட்டுள்ளன. இவை எல்லாம், எழுத்துக் கலை புத்தர் காலத்துக்கு முன்னரே உருவெடுத்துவிட்டதென்ற கொள்கையை உறுதிப்படுத்துகின்றன. அசோகர் காலத்துக்கு அரை நூற்றூண்டு முந்திய சோகளரா செப்புப் பட்டயமும், அசோக மன்னனது சாசனங்களும், நாசிக் என்னுமிடத்தில் காணப்பட்ட நஹபாணனின் சாஸனமும், காலமுறை பற்றி அப்படியே வரிசையாக வைத்துக் கணக்கிடப்படலாம்.

எழுத்தின் அமைப்பையும் சிறிது கவனிப்போம்: எழுத்து பிராமி, கரோஷ்டி என இரு வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவற்றுள் கரோஷ்டி பினீஷியர்களது எழுத்து முறையைப் பின்பற்றி எழுந்தது. இது பீலர் என்னும் ஆராய்ச்சி நிபுணர் கருத்து. இது பாரசீகம் மூலம் இந்தியா வந்தது. பாரசீகரது ஆட்சி நிகழ்ந்த கி.மு. ஆரும் நூற்றூண்டில் வழங்கிய நாணயங்களிலும், சிலா சாசனங்களிலும் இவ்வகை எழுத்துக்களே காணப்படுவன. கரோஷ்டி வகை எழுத்துக்கள் அது உணர்த்தும் கருத்திற்கேற்பக் கழுதையின் உதடுகள் போன்ற அமைப்புள்ள எழுத்துக்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றின என்று ஒரு சிலர் கூறுவர். மத்திய ஆசியாவிலிருந்த கரோஷ்டர் என்பவராலே உருவாக்கப்பட்ட இவ்வெழுத்துக்களுக்கு அவர்களுடைய பெயரே சூட்டப்பட்டதென்பர் இன்னொரு சாரார்.

பிராமி எழுத்தின் தோற்றத்தைப் பற்றிப் பல அபிப்பிராயங்கள் நிலவுகின்றன. டாக்டர் டயிலர் என்னுமறிஞரும் அவரைச் சார்ந்த ஒரு சிலரும் பிராமி தெற்கு அராபியரிடமிருந்து பெறப்பட்டதாகக் கூறுவர். இக்கொள்கை அவ்வளவு பிரபலமடையவில்லை. டாக்டர் வீபரும், பின்னர் பீலரும் விரித்துக்கூறிய கொள்கையையே பொதுவாக எல்

லோரும் இன்று ஏற்றுக் கொள்ளுகிறார்கள். அசீரியாவில் காணப்பட்ட கல்வெட்டுக்களிற் பொறிக்கப்பட்டிருக்கும் எழுத்துக்கள் இந்திய எழுத்துக்களுடன் ஒற்றுமையுடையவை என்ற உண்மையை முதன் முதலில் எடுத்துக்காட்டிய பெருமை வீபர் என்னும் அறிஞரைச் சாரும். டாக்டர் பீலர் இந்தக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு பல உண்மைகளை வெளிப்படுத்தினார். இந்திய வணிகர்கள்—சிறப்பாகத் தமிழர்கள்—பபிலோனியர்களுடன் கி. மு. எட்டாம் ஏழாம் நூற்றாண்டுகளில் தொடர்பு பூண்டு அதன் விளைவாக அசீரியர்களது—எழுத்து முறையை இந்தியாவுக்குக் கொண்டு வந்தனர். இது இந்தியாவின் தேவைக்கேற்ப மாற்றி அமைக்கப்பட்டது.பல ஆண்டுகளுக்குப் பின் இது பிராமி எழுத்தாக உருவெடுத்தது. தொடக்கத்தில் எழுத்துக்கள் வலமிருந்து இடமாக எழுதப்பட்டன. இவ்வுண்மையை நாணயங்களில் காணப்படும் எழுத்து முறை நிருபிக்கின்றது. வலம் வருதலையே சீரிய முறையாகக் கருதும் பண்பாடு மிக்க பாரத நாட்டில் நாளடைவில் எழுத்துக்கள் இடமிருந்து வலமாக எழுதப்படத் தொடங்கின.

ரிஸ்டேவிட்ஸ் என்பவருடைய கருத்து இயூபிரேறிஸ் பள்ளத்தாக்கு நாகரிகத்திலிருந்து எழுத்து முறை இந்தியாவிற்கு வந்ததென்பதாம். ஹிபரகிளிபிக் முறை இந்தியாவிலேயே தோன்றி வளர்ந்திருக்கலாம் என்பது கன்னிங்காம் என்பவரின் அபிப்பிராயம். இவை இரண்டையும் இற்றைய அறிஞர்கள் ஏற்றுக்கொள்ளுகின்றார்களில்லை.

உலகில் உள்ள மொழிகளுள் சிறந்த மேனாட்டு மொழிகளில் அமைந்து விளங்கும் இலக்கியங்களுக்கு வரலாற்று நூல்கள் பல இதுவரை வெளிவந்திருக்கின்றன இவ்வழியைப் பின்பற்றி வடமொழி இலக்கிய வரலாற்று நூல்களும் எழுதப்பட்டுள்ளன. வேத இலக்கிய வரலாற்று நூல்களும் எழுதப்பட்டுள்ளன. வேத இலக்கிய வரலாற்றை வேறாகவும் சம்ஸ்கிருத இலக்கிய வரலாற்றை வேறாகவும் வெவ்வேறாசிரியர்கள் தனித்தனி எழுதியிருக்கிறார்கள். சிலர் ஒரே நூலில் இவ்விரு வரலாறுகளையும் இணைத்துத் தொடர்ச்சியாக எழுதி



யிருக்கிறார்கள். இலக்கிய வரலாற்று நூல்களெல்லாம் கவிகளைப் பற்றியும், அவர்கள் எழுதிய காவியங்களின் நயங்களைப் பற்றியும், அவர்கள் வாழ்ந்த கால ஒழுங்கிற் கேற்ப வரிசைப்படுத்தித் தொடர்ச்சியான வரலாறாக அமைத்துத் தருவன. மேனாட்டிலேயே இவ்வகையாக வரலாற்று நூலமைக்கும் முறை எழுந்தது. இம்முறையினைக் கடைப்பிடித்து ஏனையோரும் தத்தம் மொழிகளில் இலக்கிய வரலாற்று நூல்கள் எழுதி வந்துள்ளார்கள். நூல்களை அவ்வவற்றின் கால ஒழுங்கிற் கேற்ப வரிசைப்படுத்தி வைத்துத் தொடர்ச்சியாக அவதானித்து வந்தால் மொழியின் வளர்ச்சியையும், நடை, கவிநயம், முதலியன எப்படிக் காலம் செல்லச் செல்ல மாற்றம் பெற்றன என்பதையும் நுணுகிக் கவனிக்கப் பெரிதும் பயன்படும். வடமொழியைப் பற்றியும், இம்மொழி நூல் வரலாற்றினையும் அலசி ஆராய்ந்து அழகிய வரலாற்று நூல்களை அமைத்து நமக்கு வழங்கியவர்கள் ஜர்மானியர்கள். காலங்களை உறுதியாகத் துணிந்து நிறுவுவதில் இவர்கள் ஈடு இணையற்றவர்கள். இவர்கள் இத்துறையில் ஆற்றிய தொண்டு மட்டிடற்கரியது. மேனாட்டு மொழிகளில் எண்ணிறந்த வடமொழி இலக்கிய வரலாற்று நூல்கள் வெளிவந்துள்ளன. முன்னாளில் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியராயிருந்த பிரம்மஸ்ரீ P. S. சுப்பிரமண்ய சாஸ்திரி அவர்கள் எழுதிய வடமொழி வரலாறே முதன் முதலில் தமிழில் எழுதப்பட்ட வடமொழி வரலாற்று நூலாகும்.

வேதங்கள் அறிவின் இருப்பிடம். அறிதல் என்னும் கருத்தை உணர்த்தும் வித் என்னும் வினையடியில் பிறந்ததே வேத என்னும் சொல். வேத இலக்கியம் மிகவும் அகன்ற பரப்பினை உடைய பகுதிகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. சங்கிதைகள், பிராமணங்கள், ஆரணியகங்கள், உபநிடதங்கள் என்னும் பகுதிகளால் அமைந்து விளங்கும் வேதங்கள் இருக்கு, யசுர், சாமம், அதர்வம் என நான்கு பிரிவுகளையுடையன. மொழியமைப்பைப் பற்றிய அளவில் வேதங்கள் பாணினி ஆசிரியர் கூறும் சம்ஸ்கிருதத்தின் நின்றும் வேறுயது. வேதம், சம்ஸ்கிருதம் ஆகிய இரு மொழிகளில் உள்ள இலக்கியங்களின் ஒற்றுமை வேற்றுமைகளை இந்நூலின் இடையிடையே எடுத்துக்காட்டுவதற்கு அடிக்கடி இருவகை மொழிகளையும் வெவ்வேறாகத் தனித் தனிப் பெயரிட்டு அழைக்க நேரிடுகின்றது. இதுபற்றி வேதங்களின் மொழியை வைதிக மொழி என்றும், பாணினியின் இலக்கண விதிகளாற் செப்பனிடப்பட்ட மொழியைச் சம்ஸ்கிருத மொழி என்றும், தனித்தனியாகக் குறிப்பிட்டு வேறுபடுத்திக் கூறுவோம். வேதங்கள் சம்ஸ்கிருத நூல்கள் எனப்படுவதில்லை. வேதங்களுக்குப் பின் பாணினி தோற்றுவித்த மொழியில் இயற்றப்பட்டெழுந்த நூல்கள்தாம் சம்ஸ்கிருத நூல்களென்று பெயர் பெற்றுள்ளன. இவ்வாறு பிரித்துக் கூறும் மரபு பாணினியின் காலத்திலேயே தோன்றி வளர்ந்து நாளடைவில் ஆங்கிலத்தில் வெளிவந்த இலக்கிய வரலாற்று நூல்களிலும் வேரூன்றிவிட்டது. எனவே இவ்விருவகை நூல்களை வைதிக நூல்கள், சம்ஸ்கிருத நூல்கள் எனப் பெயரிட்டு இங்கு கூறுவதிற் தவறொன்றுமில்லை.

வேத மொழி சம்ஸ்கிருதத்தின் நின்றும் எவ்வாறு வேறுபடுகின்றது? இவ்வினாவுக்குத் தொடக்கத்திலேயே விடை

விரித்துக் கூறுதல் அவசியம். பாணினி சூத்திரங்களில், வேதம், சம்ஸ்கிருதம் எனப் பிரித்துத் தனித்தனி சுட்டும் முறையே இவையிரண்டும் வேறானவை என்பதை உணர்த்துகின்றது. இவ்விரண்டும் இவ்வாறு வெவ்வேறான தன்மைகளை ஏற்று ஒன்றிலிருந்து மற்றது வேறாயிருப்பினும், இரண்டுக்கும் பொதுவான சில பண்புகள் தெளிவாகத் தெரிகின்றன. இவை, வேதம் சம்ஸ்கிருதம் ஆகிய இரண்டும் ஒரே அடிப் படையில் தோன்றி வளரும் பொழுது காணப்படும் ஒரே மொழி படிப்படியாகத் திரிந்து தோன்றியபொழுது எய்திய இரு நிலைகளே என்பதைச் சுட்டி நிற்கின்றன. இதை ஓர் உவமை கூறி விளக்கலாம். தமிழிற் சங்க நூல்கள் இருக்கின்றன. பிற்காலத்தில் தோன்றி இன்றுவரை விரிந்து வளர்ந்து வரும் வேறு நூல்களும் உள்ளன. இவ்விருவகை நூல்களையும் ஒப்பிட்டு நோக்கி மொழியமைப்பில் இவை இரண்டும் தம்முள் வேறுபட்டுக் காணப்படுவதை உணர்கின்றோமல்லவா? பிற்காலத் தமிழில் நல்ல பயிற்சியுடையவர்கள் எல்லோரும் இப் பயிற்சியின் விளைவாகத் தாம் பெற்றுள்ள ஆற்றலை மட்டும் கொண்டு சங்க நூல்களை விளங்குதல் எளிதன்று. இதேபோன்றது தான் சம்ஸ்கிருத நூற்பயிற்சி மட்டும் உள்ளவர்களின் நிலையும். சம்ஸ்கிருத நூல்களை விளங்குவதற்கு இவர்களுக்கிருக்கும் ஆற்றல் வைதிக நூல்களை விளங்கப் பயன்படாது. சங்கத் தமிழுக்கும் பிற்காலத் தமிழுக்கும் இடையே உள்ள வேறுபாட்டைப் போன்றதுதான் வேதத்திற்கும் சம்ஸ்கிருதத்திற்கும் இடையே உள்ள வேறுபாடு. வைதிக நூல்களிற் காணப்படும் சொற்கள் பல வழக்கிறந்து சம்ஸ்கிருதத்தில் இடம்பெறுமலே மறைந்துவிட்டன. இதைவிட வேதத்தில் இடம்பெறுத பல புதுச் சொற்கள் சம்ஸ்கிருதத்தில் மட்டும் காணப்படுபவை. மேலும், சம்ஸ்கிருதத்தில் வருஞ் சில சொற்கள் வேதத்தில் தாம் உணர்த்திய கருத்திற்கு நேர்மாறான கருத்தை உணர்த்துகின்றன. 'அசுர' என்னுஞ் சொல்லை உதாரணமாக எடுத்துக்கொள்ளலாம். இது சம்ஸ்கிருதத்தில் தேவர்களின் பகைவரான அரக்கர்களைக் குறிக்கும். வேதத்திலோ இதே சொல் தெய்வத்தன்மை வாய்ந்த என்னும் கருத்தை உணர்த்தி அடைமொழியாக அமைந்து



சம்ஸ்கிருதங் குறிக்கும் கருத்துக்கு நேர் முரணான பொருளைக் காட்டி நிற்கும். இவ்வேறுபாடும் வைதிக மொழியின் தொன்மையையே சுட்டுமென்பர்.

வேதங்களில் எடுத்தாளப்பட்டுள்ள வினையுருவங்கள், பெயருருவங்கள், வினையடியினின்றும் பிரித்துத் தனிச் சொற்களாக அமைக்கப்பட்டுள்ள உபசர்க்கங்கள் எல்லாம் இதே பழைமையை மேலும் வலியுறுத்துகின்றன. வினையுருவங்கள் வேதத்தில் விரிந்து பெருகியமாதிரி வேறெந்த மொழியிலும் விரிந்ததில்லை என்பது மொழிநூலில் புலமை மிக்கவர்கள் எடுத்துக் கூறிய முடிபு. நாளடைவில் இவ்வுருவங்கள் பல மறைந்துவிட்டன; சில சிறிது மாற்றங்களைப் பெற்றன. இதைத் தொடர்ந்து சம்ஸ்கிருத மொழி சிறிது சிறிதாக இற்றைய உருப்பெறலாயிற்று. இவ்வுண்மையை மொழியமைப்பில் அங்கங்கே காணப்படும் சான்றுகளை எடுத்துக்காட்டி முறையாக விளக்குதல் மொழிவல்லுநர்க்கு மட்டுமே முடியும். இவ் விளக்கம் மொழிநூல் விரித்தெழுதப்படும் பொழுது விளக்க வேண்டுவதொன்றாகும். இலக்கிய வரலாற்றினைச் சரிவர அறிதற்கு இதுபற்றித் தெரிந்துகொள்ள வேண்டிய உண்மைகளை மட்டும் பின்னர் சம்ஸ்கிருத மொழியின் எழுச்சியும் வளர்ச்சியும் பற்றிக் கூறும்பொழுது விரிவாகக் கவனிப்போம். வைதிக நூல்கள், சம்ஸ்கிருத நூல்கள் என்னும் இருவகை நூல்கள் உள. இவை வெவ்வேறான மொழியமைப்பையுடையவை என்பதே இச் சந்தர்ப்பத்தில் நாம் தெளிவாக மனதிற் பதிக்க வேண்டுவது. இரண்டும் ஒரே அடிப்படையில் அமைந்துள்ளவை. ஒரு மொழியின் வளர்ச்சி நிகழும் பொழுது காணப்படும் இருதனி நிலைகளே வைதிக மொழியினதும் சம்ஸ்கிருத மொழியினதும் நிலைகள் என்னும் கருத்தே இங்கு திரும்பவும் வற்புறுத்தப்படுகின்றது. வைதிக, சம்ஸ்கிருத மொழிகள் தமக்குள் வேறுபட்டு நிற்கும் நிலையை இன்னொரு வகையாகவும் உணரலாம். சம்ஸ்கிருதம் ஒரே குரலிற் படிக்கப்படுவது. வேதங்களோ வெனில் படிக்கும் பொழுது குரலை உரியவாறு உயர்த்தியும், தாழ்த்தியும் சமநிலைப்படுத்தியும் ஓதப்படுவன. மேலும்,

வைதிக சம்ஸ்கிருத மொழிகளிடையே காணப்படும் வேறு
பாட்டை இன்னொரு வகையாகச் சிலர் விளக்குவர். பாணினீ
ஆசிரியர் கூறும் இலக்கண அறிவும், சிறிது சம்ஸ்கிருத இலக்
கியப் பயிற்சியும் உடைய ஒருவரிடம் அவர் வாசித்தறியாத
சம்ஸ்கிருத நூலொன்றைக் கொடுத்தால், அவர் சிறிது
முயன்று அதை வாசித்து விளங்கிக் கொள்ளுவார். ஆனால்
இதே ஆற்றலைக் கொண்டு வேதங்களில் உள்ள ஒரு பாடலை
யேனும் தானே வாசித்து உரியவாறு நன்கு விளங்க வகை
யறியாது திகைப்புறுவர்.

இதுவரை உலகில் தோன்றிக் காணப்படும் நூல்களெல்
லாவற்றுள்ளும் வேதங்கள் காலத்தால் முந்தியவை.
இது ஆராய்ச்சியாளர் ஆய்ந்து கொண்ட முடிபு.
இந்திய இலக்கியங்களுள் பழமை சான்றவை வேதங்கள் இக்
கருத்தை அகச் சான்றுகள் காட்டி விளக்கலாம். இந்தியா
வில் எழுந்த இலக்கியங்கள் எல்லாம் வேதங்களைக் குறிப்பிடு
கின்றன. வேதங்களோவெனின், இதர இலக்கியங்களைப்
பற்றி ஒன்றுமே கூறாதிருக்கின்றன. இதே வேதங்கள் பழை
மையானவை என்னுங் கருத்தை வலியுறுத்தும்.

வேதங்களைப்பற்றிய அறிவு எல்லோர்க்கும் இன்றியமை
யாது வேண்டப்படும் என அறிஞர்கள் எடுத்துக்காட்டியுள்
ளார்கள். ஏனெனில் இந்தியாவில் வழக்கில் இருந்துவரும்
மதங்கள் எல்லாவற்றையும் நன்கு விளங்குவதற்கு வேதங்
களின் அறிவு மிகவும் பயன்படும். வேதங்களைப் போற்றாதது
மட்டுமின்றி அவை கூறும் கருத்துக்களைக் கண்டிக்கவும் முற்
பட்ட புத்த மதத்தினரும், ஜைன மதத்தினரான சமணரும்
தத்தம் மதங்களை ஆழ்ந்து அறிய விரும்பினால் முதலில்
வேதங்களை நன்கு கற்றல் வேண்டும்.

வேதங்கள் ஒரு தனிக் கவியின் ஆக்கமன்று இவை வெவ்
வேறு காலங்களில் கவிகள் பலரால் பல்வேறு சூழ்நிலைகளில்
இயற்றப்பட்டு நெடுங்காலம் வழங்கிவரும் பொழுது, ஒரு
கால் ஒன்று சேர்த்துப் பிரிவு பிரிவுகளாகத் தொகுத்து



அமைக்கப்பட்டன. பல நூற்றாண்டுகளாக வளர்ந்த பின்
னரே வேத இலக்கியம் இன்று காணப்படும் உருவைப் பெற்
றிருக்கலாம் என ஊகிக்கப்படுகின்றது. இவ்வேத இலக்கி
யத்தைக் குறிக்க வரும் பெயர்களுள் 'திரயீவித்யா' என்பது
ஒன்று. இது வேதங்களின் அமைப்பைச் சுட்டுகின்றது.
மூவகை வித்தை என்பது இதன் பொருள். இருக்கு, யசுர்,
சாமம் என்பவையே இவ்வித்தையின் முப் பெரும் பிரிவுகள்.
நான்காம் வேதமான அதர்வம் நெடுங்காலத்துக்குப் பின்
னரே வேத இலக்கியத்தில் இடம் பெற்றமையால் இது இங்கு
வேதங்களுள் ஒன்றாகக் கூறப்படாதிருக்கக் காண்கிறோம்.
நாளடைவில் அதர்வவேதம் எவ்வாறு வேதங்களுடன்
இணைந்து நான்காம் வேதம் ஆயிற்று என்பதைப் பின்னர்
கவனிப்போம். இந் நால்வகை வேதங்களும், தனித்தனி
நான்கு பிரிவுகளாக வகுக்கப்பட்டன. இவற்றுள் முதற்
பிரிவு 'சங்கிதை' என்றும், இரண்டாவது 'பிராமணங்கள்'
என்றும், மூன்றாம் நான்காம் பிரிவுகள் முறையே 'ஆரணியகங்
கள்', 'உபநிடதங்கள்' என்றும், பெயர் பெறுகின்றன. எனவே
வேதங்களின் பகுதிகளைக் குறிப்பிடும் பொழுது, இப்பகுதி
களைச் சுட்டி இது இருக்குவேத சங்கிதை; இது இருக்குவேத
பிராமணம்; இது இருக்குவேத ஆரணியகம்; இது இருக்கு
வேத உபநிடதம் என்றெல்லாம் குறிப்பிடுவது வழக்கம்.
இப்படியே ஏனைய வேதங்களின் பிரிவுகளையும் தனித்தனி
குறிப்பிடலாம். வேதங்களின் எல்லை உபநிடதங்கள்.
அந்தம் என்றால் முடிபு என்பது பொருள். எனவே உபநிட
தங்கள் 'வேதாந்தங்கள்' எனவும், மறைமுடிபு எனவும்,
பெயர் பெறலாயின.

வேதங்களெல்லாம் பல்லாயிரக்கணக்கான வருடங்
களுக்கு முன் எவ்வாறு எழுந்தனவோ, அதே உருவில்
இன்றுவரை மாற்றம் எதுவும் பெறாது காணப்படுகின்றன.
எம்முன்னோர் இவற்றை எழுத்திற் பொறிக்காது பரம்பரை
பரம்பரையாக வாயால் ஓதிச் செவியால் கேட்டு வந்
ததே இதன் காரணம் என்னலாம். இதையொட்டியே,
வேதம் 'சுருதி' எனவும், 'எழுதாமறை' எனவும் பெயர்

பெறலாயிற்று. வேதங்களை ஓதுவதில் பயிற்சி பெறுபவர்கள், இன்று கூட இவற்றை அச்சேறிய வேதநூல்களைப் பார்த்து ஓதாமல், தம் ஆசிரியர் வாயால் முதலில் ஓதி உச்சரிக்க, அவற்றைத் தாம் அவதானித்துக் கேட்டு, பின்னர் அவரைத் தொடர்ந்து அவ்வழியே ஓதியும் தம் மாணவர்களையும் அவ்வாறே ஓதுவித்தும், இவ்வரிய பொக்கிஷத்தை நாலாயிரம் வருஷங்களுக்கு அதிகமான காலமாகப் பேணி வந்திருக்கிறார்கள். இவ்வாறு பேணப்பட்டு வந்துள்ள வேத இலக்கியத்தில் இடைச் செருகல்கள் எதுவுமே கிடையா. 'பதம், கிரமம், ஜடை, கனம்' என நான்கு முறைகளைக் கடைப்பிடித்தே வேதங்களை அத்தியயனஞ் செய்வர். மந்திரங்கள் காணப்படும் நிலை 'சங்கிதை நிலை'. இதைச் 'சம்ஹிதாபாடம்' என்று கூறுவர். சங்கிதையில் சந்திசேர்த்து அமையப் பெற்ற சொற்கள் எல்லாம் தனித் தனியாகப் பிரிக்கப்படும்பொழுது இதற்குப் 'பதபாடம்' என்னும் பெயர் ஏற்படுகின்றது. சொல் என்றாலும் பதம் என்றாலும் அமையும். 'சங்கிதா பாடம் பதபாடமாக' உருவேற்கும் பொழுது சந்தி விதிகளுக்கு இணங்க ஏற்கனவே புணர்த்தி எழுதப்பட்ட சொற்கள் எல்லாம் பிரிக்கப்படுகின்றன. தனித்தனி சொற்களாகச் சந்தி சேர்த்தமைக்கப் படுவதற்கு முன் இருந்த பழைய நிலையை இவை பெறுகின்றன. இவ்வாறே இவை இணையும் பொழுது சந்தியின் விளைவாகத் தாம் ஏற்ற ஸ்வரங்களை நீக்கி தனித்தனி சொற்களாக இருந்தபொழுது, இயல்பாகப் பெறும் ஸ்வரங்களையே திரும்பவும் பெறுகின்றன. இதுதான் பத பாடத்தின் இயல்பு. பத பாடத்தில் அடுத்தடுத்து வரும் இரு சொற்களை எடுத்துச் சந்தி விதிக்கிணங்க இணைத்தும், இவ்வாறு இணைப்பதன் விளைவாக வேறுபடும் ஸ்வரங்களைத் திருத்தித் தகுந்தவாறு அமைத்தும் ஓதுவர். இப்படி ஓதும் பாடம் 'கிரம பாடம்' எனப்படும். ஒரு வாக்கியத்தில் ஐந்து சொற்கள் இருந்தால் முதலாவது சொல்லும் இரண்டாவது சொல்லும் முதலில் இவ்வாறு இணைகின்றன. பின்னர் இரண்டாவது சொல்லும் மூன்றாவது சொல்லும் பிணைப்புறுகின்றன. இப்படியே தொடர்ந்து மூன்றாவதும் நான்காவதும், நான்காவதும் ஐந்தாவதும்



இணை இணையாகப் பிணைந்து சந்தி முறை வழுவாது ஸ்வரம் தொடர்ச்சியாகப் பொருந்தும் வண்ணம் அமைகின்றன. இம்முறையில் தவறாதவாறு ஓதப்படும் வேதம் காதிற்கு மிக இனிமையாக இருக்கும். இரு சொற்களை ஜடை போல் பின்னிப் பின்னிச் சந்தி சேர்த்தும், ஸ்வரத்தை அவதானித்தும், இணை இணையாக அமைத்துப் படிக்கும் முறையை 'ஜடா பாடம்' என்பர். மூன்று சொற்களை இவ்வாறு எடுத்து அமைத்துக் கன பாடத்தை உருவாக்கலாம். வேதம் ஓதுபவர்கள் ஆசிரியரிடம் சங்கிதை முதல் கனம் ஈறாக ஓதப் பயில்வது வழக்கம். இவ்வாறு ஓதுவதற்கு ஆற்றல் பெற்றவர்களைக் 'கனபாடிகள்' என்பர். இவ்விதம் வேதத்தை ஓதுவதற்கு பல முறைகளை வகுத்தமைத்து நம்மான்றோர் வேதங்களை வழுவாது ஓதிவந்தமையால், இவை இடைச் செருகல்கள் எதுவும் அற்றவையாய் இன்றும் அன்று விளங்கிய வடிவத்திலே எமக்குக் கிடைத்துள்ளன. வேதத்தை ஓதும் முறை பலவகையாக வகுக்கப்பட்டுள்ள இந்நிலையில், சங்கிதை பாடத்தில் ஒரு சொல் இடையிற் சொருகப்பட்டால் அல்லது திரித்து அமைக்கப்பட்டால் இம் மாற்றம் இதைச் சார்ந்த பதம், கிரமம், ஜடை, கனம் ஆகிய பாடங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனி பெரிதும் பாதிக்கும் அல்லவா? வேதங்கள் மக்களால் ஆக்கப்படாதவை; தெய்விகம் வாய்ந்தவை; என்னும் கருத்தினை உள்ளத்தில் ஆழப்பதித்த ஆன்றோர், வேதங்களுள் மாந்தர் நுழைக்க விழையும் இடைச் செருகல்களை மனம் ஒருப்பட்டு ஏற்பாரா? ஒருக்காலும் ஏற்கமாட்டார். இதுவே வேதங்கள் இன்று வரை பழைய உருவத்திலேயே பேணிக் காக்கப்பட்டு வரும் வரலாறு.

வேதங்களுள் முதலில் வைத்தெண்ணப்படுவது இருக்கு வேதம். இருக்கு என்பதற்கு பாட்டு என்பது பொருள். இவ்வேதம் பாட்டுக்களை மட்டுமே கொண்டு அமைந்திருப்பதனுல், இருக்கு வேதம் எனப் பெயர் பெறலாயிற்று. இவ்வேதத்தில் உரைவாக்கியங்கள் கிடையா. இருக்கு சங்கிதை பல தனிப்பாடல்களின் தொகுதி. சங்கிதை என்பதற்கு தொகுதி என்பதுகருத்து. இருக்கு வேதசங்கிதை என்னும் பெயர் பாட்டுக்களைக் கொண்டமையும் வேதத்தின் தொகுதி எனப் பொருள்படும். இவ்வாறு இங்கு காணப்படும் தனிப் பாடல்கள் பலரால் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு சூழ்நிலைகளில் ஆக்கப்பட்டுப் பின் ஒன்ருகத் தொகுத்தமைக்கப்பட்டவை. இக்காரணத்தால் இவ்விலக்கியத்தில் காலத்தினுல் முந்தியும் பிந்தியும் இயற்றப்பட்ட பகுதிகள் பலவாறு கலந்து வருதல் இயற்கை.

இருக்கு சங்கிதையின் அமைப்பு முறையைச் சிறிது கவனிப்போம். இச்சங்கிதையிற் பத்து மண்டலங்கள் உண்டு. இவற்றுள் இரண்டாம் மண்டலம் முதல் ஏழாம் மண்டலம் வரையும் உள்ள மண்டலங்களிலே தான் மிகப் பழைய பாடல்கள் இருக்கின்றன. இப்பாடல்கள் பரம்பரையாக ஒரே குடியிற் பிறந்த குடும்பங்களைச் சேர்ந்த கவிகள் பாடியவை. இவ்வாறு பாடிய அறிஞர்கள் இருஷிகள் எனப்படுவர். அக்கால வழக்கில் கவி, இருஷி என்னும் பெயர்கள் இவர்களையே சுட்டி நின்றன. இக்கவிகளைப் பற்றிய விவரங்களைக் கூறும் நூல அநுக்கிரமணி எனப்படும். மேலும், இருக்கு வேதத்தில் வரும் பாடல்கள், இவற்றை அமைக்க எடுத்தாளப்பட்ட யாப்பு முறை, இவை பாடிப் போற்றும் தெய்வங்கள் என்பவற்றைப் பற்றியெல்லாம் பலவகை குறிப்புக்களை முதன் முதலில் எடுத்துக் கூறியவை இருக்கு வேதப் பிரா

மணங்களே. ஏற்கனவே கூறப்பட்ட ஏழு மண்டலங்களில் இருக்கும் பாடல்களை இயற்றியவர்கள் கிருத்ஸ மதர், விசுவா மித்திரர், வாமதேவர், அத்திரி, பாரத்துவாசர், வசிட்டர் என்பவர்கள். ஒவ்வொரு முனிவரும் ஒவ்வொரு மண்டலத்தையும் முழுதாகத்தாமே தனியேஇயற்றினர் என்றுகூறுவர். இது பொருந்தாது. பலதரப்பட்ட பாடல்கள் அமைந்து காணப்படும் ஒரே மண்டலத்தில், காலத்துக்குக் காலம் ஒரே பரம்பரையிற் தோன்றி அதே பெயரைத் தாங்கி விளங்கிய பல கவிகள் இப்பாடல்களை இயற்றினர் எனக் கொள்ளுதலே பொருத்தமுடையது. இவ்வேழு மண்டலங்களும் இவ்வாறு தனிப்பட்ட பண்புடன் அமைந்துள்ளன. எட்டாம் மண்டலத்தில் கண்வர், அங்கிரஸ் என்னும் இரு இருஷிகளின் வழித் தோன்றல்களான கவிகள் பலர் இயற்றிய பாடல்கள் இருக்கின்றன. இவ்வெட்டு மண்டலங்கள் நீங்கிய ஏனைய முதலாம், ஒன்பதாம், பத்தாம் மண்டலங்களில் பல்வேறு பரம்பரையைச் சார்ந்த கவிகள் பாடிய பாட்டுக்கள் உள்ளன. இப்பாடல்களுட் பெண் கவிகளால் ஆக்கப்பட்ட பாட்டுக்கள் சிலவற்றையும் காண்கின்றோம்.

இருக்கு வேதத்திலுள்ள பாடல்ளெல்லாவற்றுள்ளும் இரண்டாம் மண்டலம் முதல் ஏழாம் மண்டலம் ஈறாக உள்ள மண்டலங்களில்தான் காலத்தால் முந்திய பாடல்கள் வருகின்றன என்று ஆராய்ச்சியாளர் அபிப்பிராயம் கூறியுள்ளார்கள். முதலாம், பத்தாம் மண்டலங்களிற் காணப்படும் பாடல்களுள் பெரும்பாலானவை பிந்தியவை. இவ்வடிப் படையில் காலத்தால் முந்திய பாடல்களே இம் மண்டலங்களில் இல்லை என ஒரேயடியாகக் கூறிவிடுதலும் முறையன்று. இருக்கு வேதத்தில் உள்ள பாடல்களுள் இவை முந்தியவை இவை பிந்தியவை எனப் பகுத்தறிதல் முடியாத தொன்றன்று, மொழியமைப்பையும், கூறப்படுங் கருத்தையும், காணப்படும் மரபையும், ஆதாரமாகக் கொண்டு பாடல்களை ஊன்றிக் கவனித்தால் முந்தியவற்றினின்றும் பிந்தியவற்றை வேறுபடுத்திப் பிரித்து அறியலாம்.



இருக்கு வேத மொழியின் அமைப்பைச் சிறிது கவனிப்போம். இம்மொழியில் இருக்கும் பாட்டுக்களில் கவி தான் கூற விரும்பும் கருத்துக்களைத் தெளிவான நடையில் எடுத்துக் கூறுகின்றார். இங்கு கரணப்படும் நடை மிக எளிய நடை. தொகைச் சொற்கள் மிகவும் அருகிக் காணப்படுகின்றன. தெய்வங்களின் பண்புகளைக் கூறிப் போற்றியும், தாமளிக்கும் பொருள்களைக் குறிப்பிட்டும், தமக்கு வேண்டும் பொருள்களை இரந்து வேண்டியும் அமைந்த பாடல்களில் எளிய நடை பயில்வது முற்றிலும் பொருத்தமே. உவமை அணி ஒன்று மட்டுமே இங்கு கருத்தைத் தெரிந்த பொருளொன்றுடன் ஒப்பிட்டுத் தெளிவாகக் கூறும் தனி நோக்குடன் கையாளப் பட்டிருக்கின்றது. உவமையில் எடுத்துக் கூறப்படும் பொருள்கள் அக்காலத்தில் சாதாரண வாழ்க்கையில் நிலவிக் காணப் படுபவைகளே. எண்ணிறந்த இலக்கண முடிபுகளால் வளம் பெற்ற வினையுருவங்கள் இங்கு இருக்கின்றன. இவை முற்றுக்கள், எச்சங்கள் எனப் பலவகைப்படும். இவ்வுருவங்கள் இங்கு மிகுந்து காணப்பட்டு நாளடைவில் எழுந்த இலக்கியங்களில் சிறிது சிறிதாக மறைந்தகன்று நீங்கியதிலிருந்து இவை இருக்கு வேதத்திற்கே சிறப்பாக உரியவை என்பது தெளிவாகின்றது. பாணினி ஆசிரியர் 'லேட்' எனக் குறிப்பிட்டுள்ள வினைமுற்று இருக்கு வேதத்தில் அதிகமாக வருகின்றது. சம்ஸ்கிருத நெடுங்கணக்கில் ஒரே ஒரு லகரம் உண்டு. வேதத்திலோ ளகரமும், ளகரமும் வருகின்றன. வேதத்தில், சம்ஸ்கிருதத்தில் காணப்படும் சந்தி விதிகளே பெரும்பாலும் காணப்படுகின்றன. ஆயினும் வேதத்திற்கு மட்டும் சிறப்பாக உள்ள சந்தி முறையும் உண்டு. பெயர்ச் சொற்கள் சம்ஸ்கிருதத்தில் காணப்படாதவாறு விசேட உருவங்களைப் பெற்று வேதத்தில் வருகின்றன. சம்ஸ்கிருதத்தில் இறந்த காலங்களில் வினை உருவங்களின் தொடக்கத்தில் வரும் அகரம் வேதத்தில் பல இடங்களில் குன்றியே காணப்படும். இவ்வாறு குன்றிவரினும் கருத்து வேறுபடாது வரும் இடங்களுமுண்டு. 'உபசர்க்கங்கள்' தனிச் சொற்களாக அமைந்து பெரும்பாலும் வினையடி தொடர்ந்து வரும் வண்ணமே வாங்கியங்கள் உள்ளன. இங்கு உபசர்க்கமும் வினை

யடியும் தனித்தனிச் சொற்களே. சில இடங்களில் உபசர்க் கம் சமஸ்கிருதத்திற் போலல்லாது வினையடியைத் தொடர்ந்து அதன் பின் வாக்கியத்தின் இறுதியில் இடம் பெறும். வேதத்தில் உபசர்க்கங்கள் தனிச் சொற்களாக இடம் பெறுதல் கவனிக்கற்பாலது. இரட்டித்துவரும் இறந்த கால வினையைத் துணைக்கொண்டு உருவேற்கும் வினையுருவங் கள் இங்கு அறவே கிடையா. இறந்த காலச் செயப்பாட்டு வினைப் பெயரெச்சங்கள் இங்கு அருகிக் காணப்படினும், இவற்றினின்றும் பிறந்த நிகழ்கால எச்ச உருவங்கள் இங்கு வருவதில்லை. இறந்தகாலச் செய்வினை வினையெச்சம் சம்ஸ் கிருதத்தில் ஒரே ஈற்றைக் கொண்டுவரும். வேதத்தில் இது பலவகை ஈறுகளைப் பெறுகின்றது. தமிழில் வரும் 'செய' என்னும் வாய்ப்பாட்டு வினை எச்சத்திற்கு நிகராகச் சம்ஸ்கிரு தத்தில் ஒரே ஒரு வகை உருவம் உண்டு. இவ்வுருவம் இரண் டாம் வேற்றுமையுருபை ஏற்று வரும் சொல்லைப் போல் அமையும். வேதத்திலோ வெனின், நான்காம், ஐந்தாம், ஆறும், ஏழாம் வேற்றுமை உருபுகளைத் தனித்தனி பெற்று, இவ்வெச்சம் பலவாறு வருவதைக் காண்கின்றோம். இவ்வை யெல்லாம் சம்ஸ்கிருதத்தில் அறவே மறைந்துவிட்ட உருவங் களாம். இதுகாறும் குறிப்பாகவும் மிகவும் சுருக்கமாகவும் கூறப்பட்ட இருக்கு வேத மொழியியல்புகள் ஏனைய வேதங் களில் இதேயளவிற்குக் காணப்படாதவை. இவை வேத மொழியின் சிறப்பு நிலையை எடுத்துக் காட்டவே இங்கு கூறப்பட்டன. இவை இருக்கு வேதத்தின் தொன்மையையே பெரிதும் வலியுறுத்தி நிற்கின்றன.

ஏற்கனவே கூறப்பட்ட பத்து மண்டலங்களைவிட வேறு சில பாடங்களும் இருக்கு வேதத்துடன் இணைந்துள்ளன. இவற்றை இருக்கு வேதக் கையெழுத்துப் பிரதிகளிற் காண லாம். இவை 'கிலங்கள்' எனப்படும். 'கிலம்' என்றால் எஞ்சி யது, மிகுதியாக உள்ளது எனப் பொருள்படும். இவை அநு பந்தங்களாக இவ்வேதத்துடன் சேர்த்திணைபட்டுள்ளன. இதி லிருந்து இருக்கு வேத சங்கிதை தொகுத்தமைக்கப்பட்ட பின்னர்தான் இப்பகுதிகள் சேகரித்து இணைக்கப்பட்டன.



என அறியக்கூடியதாயிருக்கின்றது. இவற்றில் பழைய பாடல்களும் சில இருக்கின்றன. எட்டாவது மண்டலத்தின் இறுதியில் புறம்பாகக் கூறப்பட்டிருக்கும் 'வாலகில்ய சூக்த'ங்களும் கிலங் களேயாம். சுபர்ணு சூக்தங்கள், பிரைஷ சூக்தங்கள் உரை நடையில் விளங்கும் 'நிவாதங்கள்' எல்லாம் ஓரளவிற்குப் பழமையான வேதப் பகுதிகளே.

இருக்கு வேதத்தின் அமைப்பைப்பற்றி எடுத்துக் கூறும் பொழுது யாப்பைப் பற்றியும் சிறிது கூறுதல் அவசியமாகின் றது. இருக்குவேத யாப்பு முறை மிகவும் பழையது. இவ் வுண்மையை ஆதாரமாகக்கொண்டும் இருக்கு வேதத்தின் தொன்மையை வலியுறுத்துவர். வேதத்தில் காணப்படும் யாப்பு முறையிலிருந்து சம்ஸ்கிருதத்தில் பெருகிக் கிடக்கும் யாப்பு முறை மிகவும் வேறுபட்டது. இவ்வேதத்தில் உள்ள பல 'விருத்தங்கள்' பிற்காலத்தெழுந்த சம்ஸ்கிருதத்தில் முழு வதும் மறைந்துவிட்டன. இதைவிடச் சம்ஸ்கிருத காவியங் களில் எண்ணிறந்து காணப்படும் விருத்தங்களுக்கு நேரிடை யானவை வேதங்களிற் காணப்படவில்லை. இவ்வாறு வழக்கி லிருந்த விருத்தங்கள் மறைந்து வழக்கொழியவும், புதியவை தோன்றி எண்ணிறந்து பெருகவும் எத்துணைக் காலம் ஆகி யிருக்கும்! இதிலிருந்து மிகப் பெருங்கால இடைவெளி வைதிக இலக்கியத்திற்கும், சம்ஸ்கிருத இலக்கியத்திற்கும் இடையில் இருந்திருத்தல் வேண்டும் என ஊகிக்க முடிகின் றது. இது வேதங்களின் தொன்மையை மேலும் தெளிவாகச் சுட்டுகின்றதல்லவா?

வேதங்கள் ஓசையை உரியவாறு எழுப்பி ஒலிக்கப்பட வேண்டியவை. வேதம் ஓதும்பொழுது ஓதுபவரின ஒலி வேறுபட்டு மூன்று நிலைகளிற்காணப்படும். 'ஸ்வரங்கள்' என்று கூறப்படும் இவ்வொலி வேறுபாடுகள் 'உதாத்தம், அநுதாத் தம், ஸ்வரிதம்' என மூவகைப்படும். குரலை உயர்த்துவதனால் எழுப்பப்படும் ஓசை உதாத்தமாம். குரலைத் தாழ்த்தி ஒலி எழுப்பும் பொழுது வருவது அநுதாத்தம். இரண்டும் ஒரே சமமாகப் பொருந்தி வரும் ஒலி நிலை ஸ்வரிதம் எனப்படும்.

இவ்வாறு குரல் வேறுபாட்டைக் கடைப்பிடித்து ஒலிக்கும் முறை பழைய கிரேக்க மொழியில் இருந்ததாக அறியக்கிடக்கின்றது. ஸ்வரங்களை அமைத்தே 'இருக்கு வேதம், யசுர் வேதம், சாமவேதம், அதர்வண வேதம், பிராமணங்கள், உபநிஷதங்கள்' முதலியன ஓதப்படுகின்றன. உபநிஷதங்களிலேயே இவ்வழக்குப் பெரும்பாலும் மறையத்தலைப்பட்டுச் சம்ஸ்கிருத மொழியில் அறவே மறைந்து ஒழிந்து விடுவது நோக்கற்பாலது.

இருக்கு வேதப் பாடல்களை ஆதாரமாகக் கொண்டு அந்நாளில் இந்நூல் சுட்டிக் காட்டும் தேசப் படமொன்றை வரைவோமானால் இப்படம் இந்தியா முழுவதையும் காட்டாது. இதில் இந்து நதியையும் இதைச் சார்ந்த ஐந்தாறுகள் பாய்ந்தோடும் பஞ்சாப் பிரதேசத்தையும் மட்டுமே காணலாம். காலம் போகப் போக, அதாவது இருக்கு வேதத்திற்குப் பின் எழுந்த வேத இலக்கியங்கள் படிப்படியாகத் தோன்றத் தோன்ற, இலக்கியம் அவ்வப்போது கூறும் தேசங்களைக் குறிப்பிட்டுப் படங்களைத் திருத்தி அமைத்துக் கொண்டே வருவோமானால் இப்படங்கள் ஒன்றிலிருந்து மற்றது வேறுபட்டுப் பரந்து விரிந்து கொண்டே வருவதைக் காணலாம். இப்படி வரையப்படும் படங்கள் இருக்கு வேத நாகரிகம் கிழக்கு நோக்கிப் படிப்படியாகப் பரவியதைத் தெளிவாக்கி நிற்கின்றன. கங்கை நதியை அறியக்கூடியவாறு இருக்கு வேதம் எங்களைப் போதிய அளவிற்குக்கிழக்கே அழைத்துச் செல்லவில்லை. வங்காளத்தில் மலிந்து காணப்பட்டதாகக் கூறப்படும் புலியைக்கூட நாம் அறியக்கூடிய வகையில் இருக்கு வேத நாகரிகம் படர்ந்து பரவவில்லை என்பது இம்மிருகம் இங்கு அறவே குறிப்பிடப்படாததிலிருந்து ஊகித்தறியக்கூடியதாக இருக்கின்றது என ஆராய்ச்சியாளர் எடுத்துக்காட்டியுள்ளார்கள். சம்ஸ்கிருத இலக்கிய வர்ணனைகளில், முக்கியமாக உவமைகளில், தனி இடம் பெற்ற தாமரை மலர் இருக்கு வேதத்தில் காணப்படுவதில்லை. இந்தியரின்—சிறப்பாகத் தமிழரின்—முக்கிய உணவாகக் காணப்படும் அரிசி இங்கு கூறப்படவில்லை. இவற்றையெல்லாம்



உற்று நோக்கின், இருக்கு வேதப் பாடல்களைப் பாடியோர் மிகப் பழைய சூழ்நிலையில் இருந்து பாடிய பாடல்களே இவை என்பதைக் காட்டுகின்றன. இருக்கு வேத நாகரிகத்தைப் பற்றி இன்னொரு கருத்தும் நிலவுகின்றது. குதிரைகளை மிகவும் போற்றி மதிப்பளித்த நாகரிகம் பழைய நாகரிகம். மிகப் பழையதெனக் கருதப்படும் இந்தோ யூரோபிய நாகரிகம் குதிரையுடன் நெருங்கிய தொடர்புடையது. குதிரைகளைத் தேரிற் பூட்டியும், இவற்றை ஓட்டப் போட்டியில் ஈடுபடுத்தியும் ஆன்றோர் வாழ்ந்த வாழ்க்கை வரலாற்றை இருக்கு வேதத்தில் அங்கங்கே காண்கின்றோம். அக்காலத்து மக்கள் தாம் வணங்குந் தெய்வங்களிடமிருந்து குதிரைச் செல்வத்தைத் தமக்கு வரையின்றித் தரும்படி வேண்டி நின்றதை இருக்கு வேதம் வாயிலாக நாம் அறிகின்றோம்.

இருக்கு வேதப்பாடல்கள் பெரும்பாலும் அக்காலத்தில் வழிபட்ட தெய்வங்களை விளித்து அவர்களிடமிருந்து வேண்டும் பொருள்களை இரந்து கேட்டலைக் குறிக்கோளாகக் கொண்டு, அவர்களை மக்கள் போற்றிக் கூறும் முறையில் அமைந்து விளங்குகின்றன. இதைவிட, உலகியல் விஷயங்கள், அரசர்களைப் போற்றிக் கூறும் பகுதிகள், தத்துவக்கருத்துக்களைக் கூறும் பாடல்கள் முதலியவற்றையும் இவ்விலக்கியப் பரப்பில் அங்குமிங்கும் சிதறுண்டு கிடக்கக் காண்கின்றோம்.

ஏற்கனவே கூறியவாறு இருக்கு வேதத்தில் இயற்கை வருணனைகள் தனியிடம் பெற்றுத் தலைசிறந்து விளங்குகின்றன. உவமை தவிர்த்த ஏனைய அணிகளை இங்கு காணுதல் அரிது. இயற்கை வர்ணனைகள் உள்ளவாறே எடுத்துக் கூறப்படுகின்றன. சூரியன், பர்ஜன்யன், மருத்துக்கள் ஆகிய தெய்வங்களைக் குறித்துப் பாடப்பட்ட பாட்டுக்களில் இந்நிலையைக் காண்கின்றோம். 'உஷை' மீது இருக்கு வேதக் கவி பாடிய பாட்டுக்களே சிறந்த வருணனைகளுக்கு ஓர் எடுத்துக்காட்டு. இருக்கு வேதத்தில் காணப்படும், விடியற்காலத்தில் படிப்படியாக உதித்து எழும் உஷையைக் கூறும் பாட்டுக்கள், வரு

ணனை நயம் மிகுந்து விளங்குகின்றன. தாயினால் அழகுற அணிவிக்கப்பட்ட புதல்வியை ஒப்பத் தன் உடலழகில் பெருமை கொண்டு சிறந்த ஆடலழகிபோல் தன்னழகை மக்கள் கண்டு இன்புறுமாறு காட்டி நிற்கும் உஷையைக் கவிதம் வர்ணனை மூலம் நம் மனக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றார். ஒளியை உடையாகக் கொண்டு கிழக்கே உதிக்கும் உஷை தன் அழகை வெளிக்காட்டி விண்ணின் கதவுகளைத் திறக்கின்றாள். அவற்றினூடாக ஒளி வீசிக் கொண்டு வெளிவருகின்றாள். காதலுணர்வூட்டும் பெண்ணுடன் உஷை ஒப்பிடப்படுகின்றாள்.

பிற்காலத்தில் சம்ஸ்கிருதத்தில் சிறந்து விளங்கிய காவியப் பண்புகள் சிலவற்றிற்கு இருக்கு வேதம் எவ்வாறு அடிகோலியதென்பதை இருக்கு சங்கிதையில் உள்ள பல பாடல்களே எடுத்தியம்புகின்றன. இப்பாடல்கள் அடங்கியுள்ள பகுதிகள் 'சம்வாத சூக்தங்கள்' என்பன. இதில், வீரச் சுவை செறிந்த இதிகாச இலக்கியத்துடனும், நாடக இலக்கியத்துடனும் இச் சம்வாத சூக்தங் கொண்டு விளங்கும் தொடர்பு எடுத்துக்காட்டப்படுகின்றது. இச் சூக்தங்களில் உள்ள தனித்தனிப் பாட்டுக்கள் ஒவ்வொன்றும் ஒன்றுடனொன்று கருத்தால் பிணைக்கப்படாதவை. இவ்வாறு இவை தனித்தனியே ஒன்றுடன் ஒன்று தொடர்புபடாத பாடல்களைக் கொண்டமைந்திருப்பதிலிருந்து இது பழைய வீரச் சுவை செறிந்த இதிகாசங்களின் தோற்றுவாயாக அமைந்து, முதன் முதலில் உரையும் செய்யுளும் ஒன்றாய் விரவிப் புதியதோர் உருவம் பெற்று விளங்கியிருக்கலாம் என ஊகித்தறிய முடிகின்றது. இச் சூக்தங்களில் பேச்சுக்கள் மட்டும் செய்யுளில் அமைய இவற்றுடன் தொடர்புள்ள நிகழ்ச்சிகளை விளக்கும் பகுதிகள் உரைநடையில் வர பாட்டுக்கள் தொடக்கத்தில் அமைக்கப்பட்டிருக்கலாம் என்றகொள்கையை 'ஓல்டின் பெர்க்' என்பவர் நிறுவ முன் வந்தார். இவற்றுட் செய்யுட் பகுதிகள் மட்டுமே படிப்பவர்களால் உரக்கப் பாடத்தக்கவாறு அமைக்கப்பட்டுள்ளன. ஆனால் இடையிடையே வர வேண்டிய உரைநடைப்பகுதிகள் பாடுபவர்களால் அவ்வப்



போது தாமே அமைக்கும் வாக்கியங்களாற் கூறப்பட்டதாகவும் இவர் சுட்டியுள்ளார். பாட்டுக்களாலேயே இருக்கு வேதம் அமைதல் வேண்டும் என்னும் மரபு வழுவாதிருக்கவே உரைப்பகுதிகள் நீக்கப்பட்டன. எனவே, செய்யுட் பகுதிகள் மட்டும் இருக்கு வேதத்தில் இடம் பெற்றன. இவ்வாறு அகற்றப்பட்ட உரைப் பகுதிகள் கூறும் கருத்து இன்னதெனப் பிராமணங்கள் வாயிலாகவும் பழைய உரைகளாலும் அறிதல் முடியும். இவ்வகையான குறிப்புகளெதுவும் கிடைக்காத இடத்து நம் ஊகத்தாலேயே இரு பாடல்களுக்கிடை விட்டுப் போன கருத்துக்களைத் தொடர்புபடுத்தி அறிவதைவிட வேறு வழியில்லை. இச்சம்வாத சூக்தங்களின் அமைப்பு முறை உலகில் உள்ள ஏனைய இலக்கியங்களிலும் மிகப் பழைய பாடல்களிலும் காணப்படும். பழைய வீரகாவியங்களில் உரையும் செய்யுளும் ஒன்றாய் விரைவியே அமைந்திருந்தன என்னும் உண்மை இக்கருத்தை மேலும் வற்புறுத்துகின்றது. ஸ்காந்திநேவியா, அயர்லாந்து முதலிய தேசங்களில் எழுந்த காவியங்களிலும், இந்தியாவில் எழுந்த பிராமணங்களிலும், உபநிடதங்களிலும், 'மகாபாரதத்தின்' பல பகுதிகளிலும், 'பௌத்த' நூல்களிலும், கதைகள், வரலாறுகள், நாடகங்கள், 'சம்பூ' காவியங்கள் முதலியவற்றிலும் இவ்வாறு செய்யுளும் உரையும் கலந்து பயிலும் நடையைக் காணலாம். ஏனைய இந்திய இலக்கியங்களில் இரு நடைகளும் கலந்து வருதல் தெளிவாகத்தெரியும் பொழுது இருக்கு வேதத்தில் மட்டும் இது ஏன் மறைந்து நின்று அதனால் ஊகித்தறியவேண்டிய நிலை எய்திற்று என்னும் ஐயம் தோன்றுதல் இயல்பே. 'ஓல்டின்பெர்க்' இச் சந்தேகத்தை நீக்கி விளக்கம் தந்துள்ளார். 'இருக்கு' களால் மட்டும் அமைய வேண்டுவதே இருக்கு வேதம் என்பதைக் கருத்திற் கொண்ட தொகுப்பாசிரியர், இருக்கு (பாட்டு) எனக் கருதப்படாத 'உரைப்' பகுதிகளை இவ்வேதத்தினின்றும் நீக்கி விட்டார். இதனால் தான் உரைப் பகுதிகளை நாம் இங்கு காண்பதில்லை என்பது இவர் கூறும் விளக்கம். சிலரோ இதை மறுத்து, ''இவ்வாறு உரை நடையில் கூறப்பட்ட பகுதிகளே கிடையா. இவை தொடக்கத்தில் இருந்திருந்தால் அல்லவா நாளடைவில் நீக்கப்பட்டிருக்க

லாம். இப்பாட்டுக்கள் நாடகங்களிற் காணப்படும் நிலையில் வைத்து விளக்கப்பட வேண்டியவை. நாடகத்தில் சம்பாஷணைகள் பாடல்கள் எல்லாம் உள்ளன. இவற்றை நடிகர்கள் தம் நடிப்பு மூலம் தொடர்புபடுத்தி முழுக்கதையும் ஒரே தொடர்ச்சியாக அமையும் வண்ணம் நாடகத்தை உருவாக்குவர். இதே நாடகம் போன்றதுதான் இருக்கு வேதத்தில் உள்ள இச் சம்வாத சூக்தங்களில் காணப்படும் சம்பாஷணையும். இதைத் தெளிவாக உணர்ந்து எவ்வகை நடிப்பு இவற்றைத் தொடர்புபடுத்தும் என்பதை ஊகித்து நடிப்பு மூலம் தொடர்புபடுத்தி விளக்குவதே நாம் செய்ய வேண்டுவது" எனத் தம் கொள்கையை வெளிப்படுத்துவர். 'மக்ஸ்மூலர்,' 'சில்வன்லெவி' என்னும் இரு அறிஞர்களும் ஓல்டின்பேர்கின் கருத்தை இவ்வாறு மறுத்துக் கூறியவர்களே.

இச் சம்வாத சூக்தங்களின் இயல்பு வாய்ந்த பாடல்கள் இந்திய இலக்கியங்களில் மிகுந்து காணப்படுகின்றன. வீர காவியமோ, நாடகமோ என ஐயுறும் வண்ணம் இரு தன்மைகளையும் ஏற்றுச் சம்பாஷணை உருவில் அமைந்துள்ள பகுதிகள் மகாபாரதத்திலும், புராணங்களிலும், பௌத்த நூல்களிலும் மிகுந்து காணப்படுகின்றன. இவையெல்லாம் பாடுவதற்கெனவே செவ்விதாக அமைக்கப்பட்ட பழைய 'ஆக்கியானங்கள்' எனக் கொள்ளுதலே முற்றிலும் பொருந்தும். இவை போன்ற பாடல்கள் தாம் இதிகாசம், நாடகம் என்னும் இருவகை இலக்கியங்களுக்கும் நிலைக்களனைய் இவற்றைத் தோற்றுவித்தன. கதையைக் கூறும் உத்தியும், நாடகத்தின் சாயலும் இவ்வகைப்பாடல்களில் சரிவர இணைந்து அமைந்திருக்கக் காண்கின்றேம். கதை கூறும் மரபு விரிந்து வளர்ச்சி பெற்றதன் விளைவாகவே பெரும் வீர காவியங்களான இதிகாசங்கள் உருவாயின. இப்பாடல்களில் உள்ள நாடகப்பண்புகள், நாடக இலக்கியம் தோன்றக் காரணமாயிருந்தன. இவ்வாக்யான சூக்தங்கள் யாவும் முற்றிலும் பாட்டுக்களால் அமைந்திருந்தன எனக் கொள்ளுதல் தவறு. கதையின் தொடக்கத்திலும், அதன் முடிவிலும் இடையில் கதை விறுவிறுப்பாக அமையும் பொழுதும் உரை நடைப் பகுதிகள்



இடம் பெறுதல் முற்றிலும் பொருத்தமே. எனவே இருக்கு வேதத்தில் உள்ள இவ்வகைப் பாடல்கள் சிலவற்றில் இவற்றை நெருக்கிப் பிணைக்கும் நோக்குடன் இடையிடையே விரவி வந்ததாகக் கருதப்படும் உரைப் பகுதிகள் இப்பாடல்களில் வரும் சம்பாஷணைகளைத் தெளிவாக்கும் நோக்குடன் முதலில் இடம் பெற்றிருக்கலாம். நாளடைவில் இவை நீக்கப் பட்டும் இருக்கலாம். ஆனுல், ஒன்று மட்டும் தெளிவாகின்றது. இவை பழைய ஆக்யான சூக்தங்கள். இவற்றில் வீர காவியங்களினதும், நாடகங்களினதும் பண்புகள் சரிக்குச் சரி விரவியுள்ளன. இவைகளை முற்றுக நாடகங்கள் எனக் கொள்ளுதல் தவறு. இச் சம்வாத சூக்தங்களுள் 'புரூரவஸ், ஊர்வசி, ஆகிய இருவருக்கிடை நிகழ்ந்த சம்வாதம், 'யமனுக்கும்' யமிக்' குமிடை நிகழ்ந்த சம்வாதம் ஆகியவை சிறந்தவை. 'சூர்யா' சூக்தத்திலும் இதே சாயல் தெரிகின்றது.

சமயத் தொடர்பு இல்லாததாய் உலகியல் நிகழ்ச்சிகளைக் கூறுவனவாய் அமைந்துள்ள பகுதிகள் பல இருக்கு வேதத்தில் உண்டு. இதில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியது சூதாட்டத்தைக் குறிப்பிடும் சூக்தம். சூதாட்டக்காரனெருவன் சூதாட்டத்தில் மிகவும் கவரப்பட்டு அதில் ஈடுபடுகின்றன். இதன் விளைவாகத் தன் வாழ்நாளில் இன்பத்தை அறவே இழந்தவனுய் தன்னந்தனியே நின்று கவலையுறுகின்றன். இவன் தன்னைத்தானே நொந்து கூறுவதாக இச்சூக்தம் அமைந்திருக்கிறது. எவ்வாறு சூது, தன் இல்வாழ்க்கையில் பெறக்கூடிய இன்பங்களை இழக்கச்செய்தது என்பதை படிப்போர் பச்சாதாபமுறும் வகையில் இச் சூதாடி தானே எடுத்துக் கூறுகின்றன்.

அதர்வ வேதத்திற்காணப்படுபவை போன்று சமயத் தொடர்பற்றவையும் ஆனுல் வாழ்க்கையில் அடிக்கடி பிரயோகிக்கக் கூடியவையுமான சூக்தங்களும் சில இங்கு உண்டு. சில மழையை வருவிக்கப் பயன்படுவன. சில மாந்திரீக சக்தி வாய்ந்தன. இப்படியான பாடல்கள் மிகமிகச் சிலவே காணப்படுகின்றன. ஓரளவிற்குச் சமயத் தொடர்புபெற்றும்

பெரும்பாலும் அதனின்றும் வேறாகியும் காணப்படும் 'தானஸ்துதிகள்' தாமே ஒருவகை இலக்கியமாக அமைந்துள்ளன. வேண்டும் பொருளை ஈந்து வேள்வி வேட்டலை ஊக்குவித்த பெருள்கொடை வள்ளல்களான அரசர்களின் பெருமையை இப்பாடல்கள் எடுத்தியம்புகின்றன. இவை நாற்பதுக்கு அதிகமான சூக்தங்கள்.

நொடிகள் போன்று சுருங்கக்கூறித் கூறுவதைத்தெளிவாகக் கூறாது, மற்றவர்கள் சிந்தனையைத் தூண்டியே தெளிவை வருவித்து கருத்தை அவர்களே உன்னி அறியும்படி செய்யவல்ல பாடல்களும் இருக்கு வேதத்தில் இடம் பெற்றுள்ளன. இவை நொடிகள் போன்றவை. பழமை மிக்க நாடோடி மொழிகள் என்றும் இவற்றைக் கூறலாம். இவற்றுட் சில இன்றும் மக்களிடை வழங்குகின்றன. தெளிவில்லாது சுருக்கிக் கூறித் தாம் கூறுவதைக் குறிப்பாயுணர்த்தும் பாட்டொன்று பின் வருமாறு:

*பன்னிரண்டு வட்டங்கள்; ஒரு சில்லு: மூன்று அச்சுகள் யாரறிவர்? இதில் அசையக்கூடிய முந்நூற்றறுபது கம்பிகள் இருக்கின்றன.*

இருக்கு வேதத்தைக் கொண்டு அக்காலத்து அரசியல் நிலையை விரித்துக் கூறுதல் எளிதன்று. இங்கு காணப்படும் விபரங்கள் மிகச் சிலவே. இருக்குவேத காலத்தில் குடிமக்கள் அரசனது ஆட்சியின்கீழ் வாழ்ந்தனர் என்பது ஊகிக்கக் கூடியதாக இருக்கின்றது. ஏனெனில் இதல்லாத வேறு ஏதாவது அரசியல் முறைபற்றி நேரடியான குறிப்புகள் இங்கு கிடையா. ராஜா என்னும் சம்ஸ்கிருத சொல் குறிக்கும் அரசனே அடிக்கடி குறிப்பிடப்படுகிறான். தலைவனை விஸ்பதி என்று கூறும் வழக்கமும் இருந்தது. விஸ் என்பது மக்கள் எனவும் பதி என்பது தலைவன் எனவும் உணர்த்துவதால் இதற்கு மக்கள் தலைவன் என்னும் பொருள் உண்டு. குடும்பத்தில் ஆண்மகனே தலைவனாக விளங்கிய சூழ்நிலையில் இவ்வாறு மக்கள் தலைவன் தம்மைச் சார்ந்தவர்களைப்



பேணும் கடமை ஆற்றி வந்தமை பொருத்தமுடையதே. அரசன் காலத்துக் காலம் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவனல்லன். அவன் பரம்பரை பரம்பரையாகவே வழி வழி வருபவன். இதற்கு ஆதாரங்கள் இங்கு காணப்படுகின்றன. இருக்கு வேதத்தில் மிகவும் அருகிக் காணப்படும் குறிப்புகளைக் கொண்டே வத்ரயஸ்வன், திவோதாசன், பிஜவனன் சுதாஸன், கிரிக்ஷித்து, புருகுத்ஸன், த்ரஸதஸ்யு, குருசிரவணன் உபமஸ்ரவஸ் போன்ற அரச பரம்பரையைப்பற்றி விபரங்களை ஊகித்தறியக் கூடியதாக இருக்கின்றது. அரசர்களைத் தேர்ந்தெடுக்கும் வழக்கம் இங்கு காணப்படுவதாகச் சிலர் எடுத்துக் காட்டுவர். போதிய ஆதாரம் இல்லாததனால் இவ்வழக்கம் இருந்ததென முடிவாக நிறுவப்படவில்லை. அரசன் கடமை குடிமக்களைக் காப்பதே. பெரும்பாலும் சமய நூலாகவே அமைந்து விளங்கும் இருக்கு வேதம் திவோதாஸன், சுதாஸன், திரிசதஸ்யு போன்ற மன்னர்களின் பெரும் தீரச் செயல்களை நாம் அறியக் கூடியவாறு குறிப்புகளைத் தந்து உதவுகின்றது. போரின்றி அமைதி நிலவிய வேளைகளில் மன்னன் கடமை இன்னது என்று இருக்குவேதம் எங்காவது எடுத்துக் கூறியதாகத் தெரியவில்லை. ஆனால், பெருந்தொகையினரான வேட்போருக்கு வேண்டிய பொருள்களை ஈந்து இவர்கள் வேட்பதற்கு மன்னர்கள் துணை நின்றார்கள் என்ற உண்மை நன்கு தெளிவாகின்றது. பளபளப்பான உடை அரசனை மக்களினின்றும் பிரித்துக் காட்டும். அவன் வசிக்கும் மாளிகை அழகு மிக்கது. அவன் பரிவாரங்கள் எல்லாம் அவன் பெருமையை உணர்த்தும் வண்ணம் கூறப்பட்டுள்ளார்கள். தான் அடக்கி வெற்றியீட்டிய குறுநில மன்னர்களிடமிருந்தும், மக்கள் அளித்த நன்கொடையிலிருந்தும் அவன் தான் அரசோச்சுவதற்காக வேண்டிய பொருளைப் பெற்று வந்தான். இப்பொருளை மக்கள் முதன் முதலாக நன்கொடையாகக் கொடுத்தனர். இவ்வழக்கம் நாளடைவில் அரசனுக்கு கப்பங்கட்டுதல், வரி கொடுத்தல் போன்ற வழக்கங்களைத் தோற்றுவித்திருக்கலாம் என ஊகிக்க முடிகின்றது. இவை கொடுக்கப்படாத வேளைகளில் எல்லாம் அரசன் இவற்றைப் பலாத்காரமாக

அறவிட்டு வந்தான். பகைவரிடமிருந்து நிலம், அடிமைகள், ஆடு மாடுகள் எல்லாம் இவ்வாறு கவரப்பட்டு வந்தன. மக்களது நிலங்களுக்கு அரசன் உரியவன் என்று எப்பொழுதாவது கருதப்பட்டதாகத் தெரியவில்லை. புரோகிதனே நாளடைவில் அரசனுய் உயர்ந்தான் என்று உலகில் ஏனைய நாடுகளில் அரசாளும் முறை தோன்றிய வரலாறு கூறும் மேனுட்டறிஞர் பொதுவாகக் கூறுவர். இருக்கு வேதம் கூறுவதிலிருந்து இத்தகைய நிலை இந்தியாவில் இருந்ததாகக் கொள்ள முடிவதில்லை

சேநாநீ என்பவன் அரசனுல் நியமிக்கப்பட்ட அதிகாரி. இவன் முக்கிய கடமைகள் எதுவும் ஆற்றியதாகத் தெரியவில்லை. சேனையின் மிகச்சிறிய பிரிவைப் போருக்குச் செலுத்திச் செல்பவன், கிராமணி எனப்பட்டான். வ்ராஜபதி என்பதும் இவனையே குறிக்கும். அரசனது சுற்றத்தில் புரோகிதன் முக்கிய இடம் வகித்தான். இருக்குவேதப் பாடல்களிலிருந்து புரோகிதர்கள் அரசர்களுடன் போர்க்களத்திற்குச் சென்றூர்கள் என ஊகிக்கக் கூடியதாயிருக்கிறது. தன் மந்திரங்களாலும் உச்சாடனங்களாலும் அரசன் வெற்றி பெற இவர்கள் வழி வகுத்தனர் எனக் கருதப்படுகின்றது. இதற்குப் பிரதியுபகாரமாக அரசன் இவர்கட்குப் பெரிதும் பொருள் வழங்கினுன். இருக்குவேதத்தில் வரும் தானஸ்துதிகள் கொடைவள்ளல்களான அரசர்கள் கவிகளுக்கும் புரோகிதர்களுக்கும் வாரி வழங்கிய பரிசுகளைப் பற்றிக் கூறுகின்றன.

அரசனது சக்தி சாதாரண வேளைகளில் அவன் நினைத்ததை எல்லாம் செய்ய இடம் அளிக்கவில்லை. மக்களின் குரலை எழுப்புவதற்கு வாய்ப்புப் பெற்றவர்களாய்த் தனிக் குழுவினர் நியமிக்கப்பட்டிருந்தனர். இக்குழு சமிதி என்றும் சபை என்றும் இருக்கு வேதத்தில் கூறப்பட்டுள்ளது. லுட்விக் என்னும் அறிஞர், சபை வேறு சமிதி வேறு; ஒவ்வொன்றும் தனித்தனி வெவ்வேறான இருவகைக் குழுக்களையே குறிக்கும் எனக் காட்டியுள்ளார். மக்கள் தேர்ந்தெடுத்த அங்கத்தினரையுடையது சமிதி என்றும், நாட்டின் முக்கிய பிரமுகர் அங்கம் வகிப்பது சபை என்றும் இவர் கூறியுள்ளார். சிம்மர் என்பவர் சமிதி குடிமக்களின் பெருங் கூட்டமென்றும், சபை கிராமத்தில் காணப்படும் கூட்டமெனவும் கருதுவர். அரசனும் சமிதிக் கூட்டங்களிற் சமூகம் அளித்ததாகக் குறிப்புகள் காணப்படுகின்றன.



இருக்கு வேதத்திலுள்ள பாடல்களிலிருந்து அக்காலச் சூழல் எப்படி இருந்திருக்கலாம் என ஊகித்தறிய முடியும். அக்கால மக்களிடை நிலவிய குடும்ப வாழ்க்கை, சாதிப்பாகுபாடு, விவாகமுறை, பெண்கள் நிலை, கல்வி, விளையாட்டுக்கள், பொழுது போக்கு, உணவு, உடை, அணிகலன், பிணி, பிணி நீக்கும் மருந்து, ஆரோக்கிய வாழ்வு ஆகியவற்றைப் பற்றிச் சுருக்கமான குறிப்புக்களைக் கீழே காணலாம்.

குடும்பங்களாக இயங்கியது அக்காலச் சமூகம். ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஒவ்வொரு தலைவன் இருந்தான். இருக்கு வேதத்தில் வரும் 'சுனஸ்சேபன்' கதையை ஆதாரமாகக் கொண்டு குடும்பத்தில் தாய் தந்தையர்களுக்கு அமைந்து குழந்தைகள் வளர்ந்து வந்தார்கள் என்பதை அறியலாம். 'இருஜிஸ்வான்' என்பவனுக்குத் தந்தை அவன் கண் இழக்கும்படி தண்டித்தமை குடும்பத்தில் உள்ள கட்டுப்பாட்டையே ஓரளவிற்கு எடுத்துக் காட்டுகின்றது. சூதில் ஈடுபட்டுப் பொருளிழந்தவனை அவன் தந்தை தாயாரும் உடன் பிறந்தோரும் வெறுத்தொதுக்கினர். நலம் விரும்பித் தந்தையரும் மக்களை அன்புடன் பேணி வந்தனர். குடும்பத்தில் உறுப்பினர் எல்லாரும் ஒற்றுமையை நாடி ஒன்ருய் வாழ்ந்தனர். விருந்தினரை ஓம்பும் பண்பும் இருக்கு வேதங் குறிக்கும் சூழலில் போற்றத்தக்க வகையில் அமைந்து விளங்கியது. தாம் அடிக்கடி வணங்கும் கடவுளான அக்கினியை அதிதி என்னும் சிறப்புப் பெயர் இட்டு அழைத்தனர். வீட்டுக்கு வருபவர்கள் பெறும் உபசரணை சிறந்த முறையில் அமைந்திருந்ததென்பது நாம் தெளிவாக உணரக்கூடியதாக இருக்கின்றது. அதிதிகளை உபசரிக்கும் இவ்வழக்கமே நாளடைவில் விரிந்து வளர்ந்து, இல் வாழ்வான் தினந்தோறும்

செய்யவேண்டிய பஞ்சயஞ்ஞம் எனப்படும் ஐவகை வேள்வி களுள் ஒன்றாகத் தனியிடம் பெற்றது.

உலகில் வேறெங்கணும் காணமுடியாத வகையில் சாதிப் பாகுபாடு இந்தியாவில் இருந்து வருகின்றது. நான்கு பிரிவாக முதலில் பிரிக்கப்பட்ட சமூகம் ஐந்தாம் வகையாக விரிந்து பின்னர் ஒவ்வொரு பிரிவும் தனித்தனி பல பிரிவுகளாகப் பிரிந்து பெருகி இப்பொழுது ஆயிரக்கணக்கான உட்பிரிவுகளை உடையதாகக் காணப்படுகிறது. முதன் முதலில் தொழில் பற்றித் தோன்றிய பிரிவு, நாளடைவில் பிறப்புப் பற்றியதாகப் பிரிக்கப்படவேண்டிய நிலையை எய்திற்று. பழைய நூலாகிய இருக்கு வேத காலத்தில் சாதிப் பிரிவுகள் எவ்வாறு இருந்தன என்பதை இலக்கியச் சான்று கொண்டு ஆராயலாம்.

இருக்குவேத காலத்தில் காணப்படும் சாதிபற்றிய கருத்துக்களை அறிஞர்கள் பலவாறாகக் கூறுகின்றனர். இருக்கு வேதத்தில் ஒரே ஒரு இடத்தில் மட்டும் 'பிராமணன், ராஜன்யன், வைசியன், சூத்திரன்' என்னுஞ் சொற்கள் காணப்படுகின்றன. இருக்கு வேதம் முழுவதிலும் சிதறிக்கிடக்கும் சாதிபற்றிக் கூறுவதாகக் கொள்ளப்படும் பகுதிகள். தெளிவுக் குறைவினால் முற்றிலும் பயன்படாது போய் விட்டன. இவற்றை நன்கு விளக்கித் துணிவான முடிவுகளைக் கூறுதல் எளிதன்று. புருஷனுடைய நான்கு உறுப்புகளான முகம், தோள், தொடை, கால் முதலியவற்றுடன் முறையே பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் ஆகியோர் தொடர்பு பெற்றுள்ளார்கள். இப் பாகுபாடு இருக்கு வேதங் கூறியோர் இந்தியா எங்கணும் பரந்த பின்னர் நிகழ்ந்ததென்பது சிலர் கருத்து. சிலர் அங்ஙனமின்றி இது நிகழ முன்னரே இவ்வழக்கம் இருந்ததென்பர். இருக்கு வேதப் பாடல்களை ஆதாரமாக எடுத்துக்கூறி இச்சாதிப் பாகுபாடு இருக்கு வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள கருத்து என்பதைத் தெளிவாக்குவர். பிராமணன் என்னுஞ் சொல் பிரமனின் புதல்வன் என்னுங் கருத்துக் கொள்வதனால் பிராமணன் பரம்பரையாக ஒரே



குலத்தில் தோன்றுபவன் என்பது இவர் கூறும் விளக்கங்களுள் ஒன்று. ஆயினும், இருக்கு வேதத்தில் பலவகைப் பிரிவுகளில் தேர்ந்த புரோகிதர்களும் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றமையால் இது வழி வழியாக வர வேண்டியது என்ற கருத்து முற்றிலும் பொருந்தாதென மறுத்துக் கூறப்படுகின்றது. புரோகிதர் அரசனைத் தம் வயப்படுத்தி வைத்திருந்தனர். இவர் தமக்கு மட்டுந் தெரிந்த வேள்விகளைச் சரிவர இயற்றினாலன்றோ அரசன் நலனோடு வாழக் கூடும். எனவே, பிராமண க்ஷத்திரியப் பாகுபாடு இருக்கு வேதத்தில் இருந்திருக்கிறது என்னுங் கொள்கை ஏற்புடைத்து. க்ஷத்திரியர் எனும் ஒரு பிரிவினர் இருந்ததாக இருக்கு வேதப் பாடல்கள் அரசர்களைப் பற்றிக் கூறுவதிலிருந்து அறிகின்றோம். அரசர்கள் பரம்பரையாக ஆண்டு வருதல் வழமையல்லவா? எனவே சாதிப் பாகுபாடு ஏதோ ஒரு வகையில் காணப்பட்டது என்பது மறுக்க முடியாததே. எவ்வாறாயினும் 'புருஷசூக்தம்' ஒன்றைத் தவிர வேறெந்தப் பகுதியிலாவது சாதிபற்றி நேரடியான குறிப்புக்கள் கிடையாததனால் இம்முடிபை நன்கு சிந்தித்தே ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும். இருக்கு வேதத்தில் உள்ள இன்னொரு சூக்தம் இதுபற்றிச் சில உண்மைகளைச் சுட்டி நிற்கின்றது. தந்தை, தாய், தனயன் ஆகிய மூவரும் வெவ்வேறான மூவகைத் தொழில்களில் ஈடுபடுவர். "ஒருவன் கவி; ஒருத்தி மா அரைப்பவள்; மற்றவன் பிணி தீர்க்கும் மருத்துவன்" என ஒரு பாடல் கூறும். இதிலிருந்து அக்கால மக்கள் பரம்பரையாகத் தொழில் இயற்றி வந்தனர் என்ற கொள்கை பொருந்தாது என்பது தெளிவாகின்றது. ஆனால் இவ்விதம் தொழில் ஆற்றி வருபவர்கள், தாம் ஆற்றும் தொழிலையே தலைமுறையாகத் தொடர்ந்து செய்தல் வேண்டும் என்ற கொள்கை வேரூன்றி நாளடைவில் தொழிலே சாதியை நிர்ணயிக்க வழி கோலியிருக்கலாம். ஆனால் இது இருக்குவேதத்தில் நிகழ்ந்ததா என்பதுதான் பிரச்சினை. எவ்வாறாயினும் ஒன்றாயிருந்து அளவளாவி உண்ணுதல், விவாகத் தொடர்பு கொள்ளுதல் முதலியன சாதிப் பாகுபாட்டின் விளைவாக வரை

யறுக்கப்பட்டதெனச் சுட்டக்கூடிய அறிகுறிகள் எதுவும் இருக்கு வேதத்தில் இல்லை.

இருக்கு வேத காலத்தில் பெண்கள் நிலையையும், பாடல்களை ஆதாரமாகக் கொண்டு ஒரு சிறிது எடுத்துக் கூறலாம். விவாகமாகாத பெண்கள் பருவமடைந்தோராய்த் தாய் தந்தையருடன் வசித்து வந்ததாக அறிய முடிகின்றது. சிறு பிராயத்திலல்லாமல், பருவம் முதிர்ந்த பின்னரே பெண்கள் விவாகஞ் செய்தனர். காதலித்த ஆடவரை அடைய வேண்டிப் பெண்களால் அணியப்பட்ட அணிகலன்களைப் பற்றிய குறிப்பும், தன் காதலியைச் சந்திக்கச் சென்ற காதலன் வீட்டில் உள்ளோரைத் துயிலச் செய்வதும், காதலன் காதலிக்குக் கொடுக்கும் பரிசுப் பொருள்களைப் பற்றிக் கூறும் பகுதியும், பெண்கள் பருவம் எய்திய பின்னரே மணம் புரிந்தனர் என்பதைத் தெளிவாக்குகின்றன. விருப்பத்திற்கிணங்கத் தாமே தேர்ந்து மணம்புரிதலை வரையறுக்கும் தடைகள் அக்காலத்திலே இருந்ததாகத் தெரியவில்லை. தந்தை, மகள், உடன்பிறந்தவன், உடன் பிறந்தவள் ஆகியோர் ஒருவரையொருவர் மணம் புரிதல் மட்டும் தடை செய்யப்பட்டிருந்தது. பொருள் கொடுத்துப் பெண்ணைப் பெறும் வழக்கம் அக்காலத்தில் இருந்திருக்கலாம். ஊறுபட்ட உடம்பினராயின் பொருள் கொடுத்தே பெண்களுக்கு மணம் முடித்து வைத்தனர். 'புருமித்திரன்' புதல்வியை 'விமதன்' கவர்ந்து சென்ற சம்பவம் எட்டுவகை மணங்களுள் ஒன்றான 'இராக்கத' விவாகத்தை நினைவூட்டுகின்றது. இது பெண்ணின் விருப்பத்துக் கிணங்கவே நிகழ்ந்ததனால் 'காந்தருவ' மணமுறையும் இங்கு உணர்த்தப்படுகின்றது. இருக்கு வேதத்தில் விவாகக் கிரியைகள் பற்றிய குறிப்புக்களும் உள்ளன. மணமகனும் அவனைச் சார்ந்தவர்களும், மணமகள் இல்லம் சேருவர். அங்கு மணமகள் அழகுற அலங்கரிக்கப்பட்டுத் தோற்றமளிப்பாள். அத்தருணம் கிரியைகள் பல நடைபெறும். பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டே மணமகன் அக்கினியை வலம் வருவான். கைப்பிடித்தல், வலம் வருதல் என்னும் இரண்டு மணவினையின் பொழுது நிகழும் முக்கியமான



கிரியைகளாம். மணமகன் மனைவியை அழைத்துக்கொண்டு ஊர்வலமாகத் தன் மனைக்கு ஏகுவன். மணமான பெண் குடும்பத்தில் முக்கிய இடம் வகிப்பாள். யாகம் வேட்டல் முதலிய கிரியைகளில் எல்லாம் அவளுக்குத் தனி இடம் உண்டு. மணம் புரிதலின் நோக்கம் சிறந்த ஆண்மகனைப் பெறுதலே. பெற்றோர் பெண்குழந்தைகளை அதிகம் விரும்பியதாகத் தெரியவில்லை. மக்கட் பேறின்மையும் ஒருவகை வறுமை என்றே குறிப்பிடப்பட்டிருக்கின்றது. பிள்ளைகளை எடுத்து வளர்த்தல் விரும்பப்படாத தெனினும் வழக்கில் இருந்திருக்கின்றது. பெண்கள் 'உடன்கட்டை' ஏறும் வழக்கம் இருந்ததற்கு நேரடியான சான்றுகள் கிடையா. 'சிதை'யின் மேல் ஏறிய பெண்ணைக் கீழே இறங்கும்படி கூறும் பாட்டொன்று காணப்படுவதிலிருந்து இவ்வழக்கு இருந்திருக்கலாம் என ஊகித்தற்கு இடமுண்டு. இவ் வழக்கம் நன்கு பரவவில்லை என்றும், இது அரசர் குலத்தில் மட்டும் இருந்திருக்கலாம் என்றும் சிலர் கருதுவர். கணவனை இழந்த பின்னரும் காரிகையர் மறுவிவாகம் செய்ததாகச் சில குறிப்புக்கள் காணப்படுகின்றன. இருக்கு வேதம் போற்றுவது ஓராண் மகன் ஒரு பெண்ணை மணம் புரியும் முறையேயாயினும் பல பெண்களை மணம் புரியும் வழக்கமும் பயின்று வந்தது. பல பெண்கள் ஒரே கணவனுடன் வாழ்ந்த வாழ்க்கை வழக்கிலிருந்ததற்கு ஆதாரம் ஏதும் இல்லை.

இருக்கு வேத காலத்தில் கல்வி முறை எத்தகையது என்பதை இங்கு கிடைக்கும் ஆதாரங்களைக் கொண்டு விரித்துக் கூறுதல் எளிதன்று. சிற்சில குறிப்புக்களை மாத்திரமே கூறலாம். தவளைகள் கத்துவதை வேதங்களை உரக்க ஓதுவதுடன் ஒப்பிட்டுக் கூறும் பாட்டொன்று உண்டு. 'பிரமசாரி சூக்தம்' என்று வேறொரு பாட்டும் உண்டு. இவ்விரண்டு பாட்டுக்களையும் ஆதாரமாகக் கொண்டு அக்காலக் கல்வி முறையைப் பற்றி ஒரு சிறிது மட்டும் ஊகித்தறியலாமே ஒழிய இதுபற்றி விரிவாக ஒன்றும் கூற முடியாது. எழுத்துக் கலை பயின்றதற்கு இங்கு ஆதாரம் எதுவும் இல்லை. வேதங்கள் கேட்டு வாயால் ஓதப்பட்டவையே யன்றி, எழுத்துக்களால் பொறிக்

கப்பட்டதற்கே ஆதாரம் இல்லாதிருக்கும் பொழுது இருக்கு வேதத்திலேயே எழுத்தைப் பற்றிய குறிப்புக்களைக் காணுதல் எவ்வாறு முடியும்? சங்கீதக் கலை தோன்றி வளர்ந்ததற்கு அறிகுறிகள் இங்கு உண்டு. வாசிக்கப்படும் வாத்தியங்களான வீணை முதலியனவும், வாயால் ஊதி இசைக்கப்படும் கருவிகளான குழல் முதலியனவும் குறிக்கப்பட்டுள்ளன. சூது விளையாட்டு, தேரோட்டப் பந்தயம் முதலிய பொழுது போக்குகள் அக்கால மக்களைக் கவர்ந்தன.

பாலேயும் பாலிற் பிறந்த வெண்ணெய், தயிர் முதலியனவற்றையும் மக்கள் முக்கிய உணவாகக் கொண்டனர். யவம் என்னும் தானியத்தை மாவாக அரைத்து பாலுடன் சேர்த்து அப்பங்களாகச் சுட்டனர். அக்காலத்தில் காய் கறிகளும் பழங்களும் உணவுப் பொருள்களாகப் பயன்பட்டன. ஆடு, மாடு முதலியவற்றின் இறைச்சியும் உணவாயிற்று. அக்கால மக்கள் பசுவைக் கொல்லாது பேணி விலையுயர்ந்த பொருளாகப்போற்றினர். 'சோமலதை' என்னும் ஒருவகைக் கொடியின் பிழிவுத் தேறலை யாகங்களில் பாலுடன் கலந்து பருகினர். 'சுரா' எனப்படும் குடிவகையைத் தானியங்களிலிருந்து வடித்தெடுத்துக் குடிக்கவும் தலைப்பட்டனர். இது பாவங்களுக்கும், தெய்வ நிந்தைக்கும் ஆளாக்குவதால் வெறுத்தொதுக்கப்பட்டது.

மக்கள் மேலுடை, கீழுடை என இருவகையாக உடைகளை உடுத்தனர். 'மருத்துக்கள்' என்னும் தெய்வங்கள் மீது பாடிய பாட்டுக்களில் மான் தோல் உடைகள் குறிப்பிடப் பட்டுள்ளன. 'முனிகள்' அழுக்கேறிய உடைகளை உடுத்ததாக 'முனி சூக்தம்' கூறும். கூத்தாடும் பெண்கள் கரை பொருந்திய உடைகளை அணிந்தனர். மருத்துக்களின் உடைகள் பொன் வேலைப்பாடுடையவை. ஆண்களின் உடைகளுக்கும் பெண்களின் உடைகளுக்கும் இடையில் வேறுபாடு எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை. காதணிகள், தலையிலணியப்பட்ட அணிகள், விரலணிகள், 'நிஷ்கம்' எனப்படும் கழுத்தணி, மணிகள், 'ருக்மம்' எனப்படும் பொன்னாலான அணிகளும்



மாலைகளும் அக்காலத்து மக்கள் அணிந்த அணிகலன்களுள் குறிப்பிடத்தக்கவை. தலைமயிரைச் சீர்பட அமைத்துக் கபர்தம் எனப்படும் முறையில் தலைக்கோலம் புனையும் வழக்கும், பெண்கள் கூந்தலைப் பின்னல்களாகப் பிணைத்தமைக்கும் முறையும் நிலவி வந்தன. மக்கள் மீசை, தாடி இரண்டும் உடையவர்கள். இவற்றை மழிக்கும் முறையும் வழக்கில் இருந்தது.

ஆங்காங்கு வரும் குறிப்புகளிலிருந்து 'பக்ஷ்மா, க்ஷயம்' முதலிய நோய்களைப்பற்றியும் இவ்வகைத் நோய்களைத் தவிர்க்கவல்ல மூலிகை வகைகளைப் பற்றியும், இவைகளை அறிந்து நோய்களை களையவல்ல வைத்தியர்களைப் பற்றியும் அறியக் கூடியதாக இருக்கின்றது. அஸ்வினிதேவர்கள் சிறந்த வைத்தியர்களாகக் கூறப்பட்டுள்ளார்கள். கண் பார்வை அற்றவர்களுக்குக் கண் பார்வை அளித்தும், நோய் பல தீர்த்தும், கைகால் இழந்தவர்க்கு அவற்றைப் பொருத்தியும் இளமை குன்றிய 'சியவனர்' என்பவர்க்குத் திரும்பவும் இளமையை வருவித்தும் அக்கால மருத்துவர் சிகிச்சை முறையை வளர்த்த வரலாற்றைக் கூருமற் கூறும் பகுதிகளும் இருக்கு வேதத்தில் இடம் பெற்றுள்ளன.

இருக்கு வேத காலத்தில் உழவுத் தொழில் நன்கு வளர்ந்திருந்தது. உழவர் நிலத்தில் மரத்தாலான கலப்பைகள் ஆழப்பதியும் வண்ணம் மாடுகளைப பூட்டி உழுதனர்; விதைகளை விதைத்தனர்; அவை முளைத்து வளர்ந்து கதிர்களாகி முற்றியதும் அரிவாளால் வெட்டினர்; வெட்டிய கதிர்களை அடித்துப் பின் அவற்றைத் தூவித் துப்புரவாக்கினர். 'யவம்' என்னும் ஒருவகை நெல் பெரும்பாலும் விளைவிக்கப்பட்டது. அரிசியைத் தரும் நெல் பயிரிடப்பட்டதற்குச் சான்று எதுவும் இல்லை.

அக்காலத்தில் எருதுகளும் பசுக்களும் மிகவும் விலைமதித்துப் போற்றப் பட்டன. இவைதாம் அக்காலத்துப் பெருஞ் செல்வங்கள். வேட்பிப்போர் யாகங்களில் இவற்றையே

'தட்சணை'யாக வழங்கினர். பசுவே செல்வத்தை அளவிடுங் கருவியாக விளங்கிற்று எனவும் கூறலாம். இது மட்டுமா? பசுக்கள் போருக்கும் காரணமாய் இருந்தன. பசுவைத் தேடுதல் என்னும் கருத்தை உணர்த்தும் கவிஷ்டி என்னுஞ் சொல் போரைக் குறிக்கும். இது நிற்க, பசு விலை மதிப்பற்ற பெரும் பொருளாக விளங்கினமையால், போற்றிப் பேணப்பட்டு வந்தது. கொல்லாது பாதுகாக்கப்பட்டு வந்தமையால் மக்களிதை 'அக்னயா' என அழைத்தனர். அக்னயா என்றால் கொல்லப்படத் தகாத என்பதாம். பசுக்கள் பகலில் மேய விடப்பட்டன. பகல் முழுதும் மேய்ந்த பின் அவை பட்டியை நோக்கித் திரும்பின. இவை கயிற்றால் பிணைப்புண்டிருக்கும் கன்றை நக்கும் காட்சி அழகு மிக்கது; இவை காதுக்கினிமையான ஒலியை எழுப்பி கன்றைக் கூவி அழைப்பது கவிகளின் கவனத்தை ஈர்த்துள்ளது. இதைப்பற்றி கூறும் பாடல்கள் பல காணப்படுகின்றன.

வியாபாரம் சிறந்த தொழிலாக விளங்கிற்று. தாம் வணங்கும் தெய்வங்களையே இலாபம் கருதி வழிபடுபவர் என்றல்லவா இம்மக்களைப் பற்றி மேனாட்டறிஞர்கள் கூறியிருக்கின்றார்கள்! பண்டமாற்று அக்காலப் பெருவழக்கு. பசுவைக்கொண்டே பண்டங்களின் விலையை நிர்ணயித்தனர். நிஷ்கம் என்னுஞ் சொல் பொருளளவையே முதலிற் குறித்து நின்றது. நாளடைவில் இது ஒரு நாணயத்தை குறிக்க வந்தது. போரில் ஈட்டிய வெற்றி அரசருக்குப் பெருஞ் செல்வத்தைப் பெற்றுக் கொடுத்தது. இச்செல்வம் பெரும்பாலும் மந்தையாகப் பெருகிய ஆடு மாடுகளாகவும் குதிரைகளாகவும் பொலிந்து விளங்கிற்று. தனிப்பட்ட ஒவ்வொருவனுக்கும் வரும் வருமானத்தில் பெண்ணுக்காகக் கொடுக்க வேண்டிய பொருள் மிகவும் அதிகமானதே. அசைவுள்ள பொருள்கள் பண்டமாற்றுக்காகப் பரிமாறப்பட்டன.

''கடல் இருக்கு வேதத்தில் கூறப்படவில்லை. கடலிற் கப்பல் ஓட்டியதற்கறிகுறிகள் காணப்படாமையால் இதைப் பற்றித் தெளிவாக ஒன்றுங் கூறல் இயலாது. நாவாய் எனப்படும் கப்பல் அகழ்ந்து எடுக்கப்பட்ட சிறிய மரக்கலங்களேயாம். பஞ்சாப்பின் அகன்ற நதிகளைக் கடக்க இவை பயன்பட்டிருக்கலாம். பாய்களைப் பற்றியோ, மரக்கலங்களைத் திருப்பிச் செலுத்தும் கருவிகளைப் பற்றியோ, நங்கூரத்தைப் பற்றியோ குறிப்புக்கள் எதுவும் இல்லை. எனவே, வேத காலத்தில் கப்பலோட்டுங்கலை நன்கு விரிந்து வளரவில்லையென்றே நினைக்க வேண்டியிருக்கிறது. கடல் வாழ்க்கையைக் குறிக்கும் உவமைகள் இது பற்றிய குறிப்புரைகள் இருக்கு வேதத்தில் இடைக்கிடையும் இடம் பெறவில்லை. இந்து நதி பாய்ந்து ஓடிக் கடலைச் சேரும் பகுதிகளைப்பற்றி ஒன்றுமே கூறப்படவில்லை'' என்று சிலர் எடுத்துக் கூறுவர். இவற்றையெல்லாம் அறவே மறுத்துச் சமுத்திரம், கப்பல் ஓட்டும் கலை என்பன எல்லாம் இருக்குவேத கால மக்களுக்கு நன்கு தெரிந்தவைகளே என ஒரு சாரார் வற்புறுத்திக் கூறுவர்.



இருக்கு வேதத்திற் காணப்படும் உவமைகளில் இருந்து போர், ஓட்டப்பந்தயம் முதலியவற்றுக்கு வேண்டிய தேர்களையும், உழுவதற்கு இன்றியமையாத கலப்பைகளையும், பண்டங்களை இடத்துக்கிடம் கொண்டு செல்லவல்ல வண்டிகளையும் அமைக்கும் ஆற்றல் படைத்த தச்சர்கள் மரவேலைகளில் ஈடுபட்டு வந்தனர் என்பதை அறியலாம். உலோகங்களில் வேலை செய்யுந் திறமை வாய்ந்த கருமான், பறவைகளின் இறகுகளைத் துணைக்கொண்டு இயக்கப்படும் உலைகளில் உலோகங்களை உருக்கிப் பல உருவங்களில் பொருள்களை வடித்துக் கொடுத்தான். அயஸ் எனப்படும் உலோகம் இரும்பையோ, அன்றிச் செம்பையோ அல்லது வெங்கலத்தையோ குறித்திருக்கலாம். குடிப்பதற்கும் உண்ணுவதற்கும் பயன்படும் மட்கலங்கள் உபயோகத்தில் இருந்தன. தோலைப் பதனிட்டுத் தொழில் செய்வோனும் திறம்படத் தன் தொழிலாற்றி வந்தனன். வில், ஞாண், குதிரைகளைப் பிணைக்கும் கடிவாளம் முதலியன அமைப்பதற்கு மாட்டுத் தோலையே இவர்கள் பயன்படுத்தினார்கள் தண்ணீரைச் சேகரித்து வைக்க நீர்ப்பைகள், தோலாலேயே தைத்து உபயோகப் படுத்தப்பட்டன. மேலும், புல் ஓலை முதலியவற்றால் பாய்

முடைதல், துணி நெய்தல், நெய்தவற்றை வேண்டியவாறு இணைத்துத் தைத்தல் முதலானவற்றைப் பெண்களே பெரும்பாலும் செய்து வந்தனர். கூத்தாடி, அம்பட்டர் முதலானோர் தத்தம் தொழில்களைச் செவ்வனே செய்து வந்தனர். இவர்களுள் ஏற்றத்தாழ்வு எதுவுமே இருந்ததாகத் தெரியவில்லை. வேட்டையாடும் வழக்கம் அரசர்களிடம் இருந்து வந்தது.

பட்டணங்கள், கிராமங்கள் என்ற பாகுபாடு அக்காலத்தில் இருந்து வந்தது எனத் தெளிவாகத் தெரிகின்றது. எனினும், பெரும் பட்டணத்தைப் பற்றிய குறிப்புக்கள் எதுவும் காணப்படவில்லை. கிராமம் பாதுகாப்பை நோக்காகக் கொண்டு ஒன்றுடன் ஒன்று நெருங்கி அமைந்த பல வீடுகளைக் கொண்டு விளங்குவது. பட்டணத்தைக் குறிக்குஞ் சொல் மண்ணால் அமைக்கப்பட்ட அரணையுடையதும், கற்சுவர்களாற் பாதுகாக்கப்பட்டதுமான இடங்களையே குறிக்கின்றது எனக்கருத இடமுண்டு. இவைகள் அடிக்கடி அழிக்கப்பட்டதைச் சுட்டி வரும் வருணனைகளில் இருந்து யுத்தம் நிகழ்ந்தமையையும் உணரலாம். வீடுகள் மரத்தால் ஆக்கப்பட்டும் மூங்கிற் கம்புகளால் கட்டப்பட்டும் விளங்கின.

வழிகளைக் காக்கும் தெய்வம் எனக் கூறப்படும் பூஷனைப் பற்றி வரும் குறிப்புக்களில் இருந்து, வழிகளையும், எனவே தெருக்களையும் இவை வழியே செல்லும் தேர்களையும் பற்றி அறிகின்றோம். தேர்களை இழுப்பதற்கு மாடுகளையும், குதிரைகளையும் அவற்றிற் பிணைத்தனர். இதைவிடக் குதிரை மீதேறிச் சவாரி செய்யும் வழக்கமும் இருந்தது. பிரயாணங்கள் அடிக்கடி நடை பெற்றன. இவை எவ்வித இடையூறுமின்றி நிறைவேறத் தெய்வங்களை வேண்டியதாகக் கூறும் பகுதிகள் இருக்கு வேதத்தில் வருகின்றன.

இருக்கு வேதம் எடுத்துக் கூறும் வழிபாட்டை இயற்கை வழிபாடு எனச் சிலர் கூறுவர். உலகில் இயல்பாகக் காணப்படும் நீர், நிலம், விண், தீ, காற்று, வெய்யோன், விடியற்பொழுது முதலிய இயற்கைக் கூறுகளை, வேதகால மக்கள் வழிபட்டு வந்தனர் என்பது இவர்களது கருத்து. இதை அநுவதிக்கும் முகமாகப் பாடல்கள் பல காணப்படுகின்றன. இப்பாடல்களை உற்று நோக்கினால், இக்கருத்துத் தெளிவாகும். பழைய பாடல்களையுடைய இருக்கு வேதம் சூரிய பகவானை வருணிப்பதாக நாம் காண்பதில்லை. பாடல்களில் சூரியனையே காண்கிறோம். கவிகள் இங்கு சந்திரன் என்னும் தெய்வத்தைப் போற்றிக் கூறவில்லை; சந்திரனையே போற்றினார்கள். அவர்கள் பாடல்களிற் பாடியது காற்றுக் கடவுளையன்று! காற்றையே பாடினார்கள். இம் முன்னோர்களின் பாடல்கள் நிலக் கடவுளைப் பற்றி எழவில்லை; நிலத்தைப் பற்றியே எழுந்தன. வேதகால மக்கள் 'ஆகுதி' யளித்ததாக இருக்கு வேதம் கூறுவது அக்கினி தேவனுக்கன்று. சுவாலைகளைப் பரப்பி நின்று, சொரியும் நெய்யினை அவாவுடன் பருகும் அக்கினிக்கே அளித்தனர். இருக்கு வேதப் பாடல்களுள் மிகப் பழையவை எனக் கருதப்படும் பாடல்கள் இத்தகைய வருணனைகள் மிகுந்தவையாய் இவ்வுண்மையினையே தெளிவாகத் தெரியவைக்கின்றன. இயற்கைப் பொருள்கள் தம் இயல்பான நிலையுடன் தெய்வப் பண்புகளும் சிறிது சிறிதாக விரவப்பெற்று நாளடைவில் தெய்விக நிலை எய்திய வரலாற்றை இருக்கு வேதமே தெளிவாக்குகின்றது.



வேதகாலச் சமயநிலையை விளக்க எழுந்த விமரிசகர்கள் யாஸ்கரைப் பின்பற்றி இருக்கு வேத தெய்வங்களை மூவகையாக வகுத்துள்ளார்கள். 'விண்ணைச் சார்ந்த தெய்வங்கள்' ஒரு வகையின. 'மண்ணைச் சார்ந்தவை' வேறினத்தன. விண்ணுக்கும் மண்ணுக்கும் நடுவில் உள்ள 'இடை வெளியைச் சார்ந்தவை' மூன்றாம் பிரிவின. விண்ணின் அதி தெய்வமான 'தியௌ, மித்திரன், வருணன், ஆதித்தியன், சூரியன், சவிதா, பூஷன், விஷ்ணு,' இரு 'அஸ்வினி தேவர்கள், உஷை, ராத்திரி' என்னுந் தெய்வங்கள் விண்ணுலகுடன் நெருங்கிய தொடர்பு வாய்ந்தவை. 'பிருதுவி, அக்கினி, பிருகஸ்பதி, சோமன், துவஷ்டா' என்போரும், 'சிந்து, விபாட், சுதுத்ரீ, சரஸ்வதி' போன்ற நதிகளும் மண்ணுலகுடன் பிணைப்பு மிக்கவை. ஆகாயத்துக்கும் பூமிக்கும் இடைப்பட்ட தெய்வங்கள்

இந்திரன், திருத அபத்யன், அஜ ஏகபாதன், உருத்திரன், மருத்துக்கள், வாயு, பர்ஜன்யன் என்பவர்களும் 'அப்பு' எனப் படும் நீர்த்தெய்வமுமாம். இருக்குவேதப் பாடல்கள் பெரும் பாலும் இத்தெய்வங்களைப் போற்றும் முகமாகவே அமைந் துள்ளன. இயற்கைப் பொருள்கள் தெய்வங்களாக மாறும் நிலையை இப்பாடல்கள் தெளிவாகக் காட்டுகின்றன என்பது முன்னமே சுட்டப்பட்டது. இது இருக்கு வேத சமயத்தின் மிகப் பழைய நிலை. இதைத் தொடர்ந்து இத்தெய்வங்களின் பண்புகளைக் கூறும் அடைமொழிகள் தனியே பிரிந்து, அடை மொழிகள் என்னும் தன்மை நீங்கப் பெற்று, வேறு தனித் தெய்வங்களின் பெயர்களாக அமைந்து வேறு தெய்வங்களைக் குறித்து நிற்பதையும் இங்கு காண்கின்றோம். 'விவஸ்வான்' என்பது சூரியனின் பண்பைச் சுட்டும் ஓர் அடைமொழி. எங்கணும் ஒளி வீசுபவன் என்பது இதன் பொருள். நாளடை வில் இவ்வடைமொழி சூரியனின்றும் வேறாகி ஒரு புதுத் தெய்வத்தைத் தோற்றுவித்தது. விவஸ்வான் வேறு சூரியன் வேறு என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. 'பூஷன், மித்திரன்' முத லிய பெயர்களும் இவ்வாறே முதலிற் சூரியனைக் குறித்தன. நாளடைவில் இவை வெவ்வேறு தெய்வங்களின் பெயர்களா யின. இவை தனித்தனி ஒவ்வொரு தெய்வத்தைக் குறிப்பிடு வன. இனி, இவ்வாறு பல்வேறு நிலையிற் காணப்படும் தெய் வங்கள் எல்லாம் எவ்வியல்பின, எப்பண்பின, எவ்வுருவின என்பவற்றையெல்லாம் உற்று நோக்குவோம்.

இருக்குவேதம் குறிப்பிடும் தெய்வங்களுக்குட் தலை சிறந்த தெய்வமெனக் கருதப்படுபவன் 'வருணன்'. பாடல் கள் இவனை மிக உயரிய நிலையில் வைத்துச் சித்திரிக்கின்றன. வருணனை மட்டும் தனியே போற்றும் பாடல்கள் பன்னிரண் டே. இத்தெய்வத்தின் கை, கால், முகம், கண்கள் முதலிய உடலுறுப்புகள் கூறப்பட்டுள்ளன. இதைவிட நடத்தல், பவனி வருதல், இருத்தல், உண்ணுதல் முதலிய செயல்களை வருணன் செய்வதாக இப்பாடல்களிலிருந்து அறிகிறோம். இவ் வருணன் சூரியனைத் தன் இரு கண்களில் ஒன்றாகக் கொண்டு விளங்குகின்றான். இக்கண்ணாலேயே வருணன் உலக நடவடிக்



கைகளை ஒன்றும் விடாது கவனிக்கின்றான். இவன் வேள்விக ளில் தருப்பையின் மீது அமருபவன். பளபளக்கும் பொன் னுடை அணிந்து தன் மாளிகையில் அமர்ந்து மக்கள் செய்யுங் காரியங்களைக் காண்கிறான். இவனைச் சூழ்ந்து சாரணர்கள் காத்திருப்பர். இவர்கள் இரு உலக நிகழ்ச்சிகளையும் நோக்கு வர். சூரியன் இவனது தூதன். இத்தூதன் பொன்னிறகு படைத்தவன். வருணன் அரசனெனப் போற்றப்படுவான். இவன் அரசன் மட்டுமல்லன். மன்னர் மன்னனாகத் திகழும் 'சக்கரவர்த்தி.' வருணன் கோலோச்சும் முறை, அவனரசு புரியும் தெய்வீகம் வாய்ந்த இடங்கள், அவனது 'மாயா சக்தி' என்பனவற்றைப் பற்றி இருக்கு வேதப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. ஒழுங்கைக் கடைபிடிப்பதில் இவன் ஈடிணை யற்றவன். இவன் கடைபிடிக்கும் ஒழுங்கு 'இருதம், நியதி, விரதம்' என்றெல்லாம் கூறப்படும். இவன் ஆணையாலேயே இயற்கை நியதியின் வழி நின்று நெறிப்பட்டு இயங்குகின்றது. விண்ணையும் மண்ணையும் உரிய இடத்தில் நிலை நிறுத்தியவன் இவனே. இவன் வானில் பருதியை ஒளிரச் செய்தான். ஒளி ரும் பருதி செல்ல வழியையும் வகுத்தான். நீரில் நெருப்பை யும், மலையில் சோமக்கொடியையும் தோற்றுவித்தான். இவன் கட்டளைக்கமைந்து சந்திரன் இரவில் தண்ணொளி பரப்புகின்றான். சந்திரன் சுற்றி வருவதும் இவன் பெருமை யினாலேயே. இவனால் தாரகைகள் பகலில் ஒளி குன்றிக் கரைந்துறைகின்றன. இவ்வண்ணம் இவன் பகலிலும் இரவி லும் ஒளிக்கு இறை ஆகின்றான். நீரை ஒழுங்கு படுத்துபவன் வருணனே. ஆறுகள் இவன் ஆணைக்கமைந்து ஓடுகின்றன இவன் மாயாசக்தி பெருஞ் சிறப்பு வாய்ந்தது. இச்சக்தியின் பெருமையால் பெருகும் ஆறுகள் வேறெங்கணும் செல்லாத வாறு கட்டுண்டு கடலை நோக்கி விரைந்து பாயினும், அதை நிரப்பாதவாறு அதனுள் விழுகின்றன. இவன் நிலை நிறுத்திய இருதம் எனப்படும் ஒழுங்கைத் தேவர்களும் கடைபிடிப்பர். இவன் எல்லாம் அறிந்தவன். பறவைகள் விண்ணினூ டாகப் பறப்பதையும், அண்மையில் காற்று ஈர்த்துச் செல் லும் கப்பல்களையும் பற்றி அவன் நன்கறிவான். இதுவரை நிகழ்ந்தனவற்றையும், இனி நிகழ இருப்பனவற்றையும் எத்

தகைய இரகசியங்களாயிருப்பினும் அவன் நன்கறிவான். மக்கள் கடைப்பிடிக்கும் நேர்மையையும், அவர்கள் நேர் நெறியிலிருந்து பிறழ்தலையும் கவனித்து நிற்பான்.

நேர்மையுடன் ஆளும் திறமை வாய்ந்த தெய்வமாக வருணனை இருக்கு வேதம் கூறும். பாவச் செயல்கள் இவனது கோபத்தைத் தூண்டும். கோபம் மிகுந்த காரணத்தால் பாவஞ் செய்பவர்களைத் தண்டிப்பான். இவனது பாசங்கள் உறுதியாகப் பிணிக்கவல்லவை. தாம் செய்யும் பாவத்தை யிட்டுப் பச்சாதாபப்படுபவர்களிடம் இரக்கம் காட்டி அவர்கள் செய்த பாவத்தையும், அறிவின்மையால் அவர் முன்னோர் செய்த பாவத்தையும் பொறுத்து மன்னிப்பான். பாவஞ் செய்தோர் தம் குறை பொறுக்கும்படி வேண்டும் வகையிலேயே 'வருண சூக்தங்கள்' எல்லாம் அமைந்துள்ளன.

மித்திரனும் வருணனும் இணைந்து நிற்கும் தெய்வங்கள். இருக்குவேதம் முழுவதிலும், ஒரே ஒரு சூக்தம் மட்டும் மித்திரனுக்கெனத் தனியே உண்டு. இவனுக்கெனக் கூறப்படும் பண்புகள் மிகச் சில. எனவே, இவனது தனிப் பண்புகள் இவை என எளிதில் கூறமுடியாது. இவன் ஆதித்தன் எனப்படுகிறான். இமைகளை இமைக்காது, மக்களையும் உழவர்களையும் பார்த்து நிற்கும் நிலையில் கவி இவனை வர்ணிக்கின்றார். சூரியனின் போக்கை வரையறுப்பவன் இவனே. இவனுக்குச் 'சவிதா' என்றும் பெயருண்டு. காத்து நிறுவுவது இவன் நியதியாதலால் விஷ்ணு எனப்படுவான். மூவடியால் உலகை அளந்த பெருமை இவனதே. தூண்டி எழுப்பப்படும் அக்கினி என்றும் இவனைக் கூறுவர். இவனுக்கு நண்பன் என்னுங் கருத்தையுணர்த்தும் மித்திரன் என்னும் பெயர் பொருத்தமானது. 'அவெஸ்தா' கூறும்பாட்டுக்களைக் கவனித்தால், இவன் சூரியனின் நின்றும் வேறானவனல்லன் என்னும் உண்மை தெரிகின்றது. அன்பு ததும்பும் இயல்பு மித்திரனிடம் சிறப்பாகக் காணப்படும். நண்பன் என்னுங் கருத்தை உணர்த்தி அவன் பெயர் அமைந்திருப்பதையும், நம்பிக்கை செறிந்த நட்பின் அதி தெய்வமாக அவன் அவெஸ்தாவில்



கூறப்பட்டிருப்பதும் இக்கருத்தையே வற்புறுத்துகின்றன. அவெஸ்தா கூறுவதிலிருந்து மித்திரன் என்னும் பெயர் ஒரு காலத்தில் சூரியனைக்குறிக்கும் பெயராக இருந்தது என்பதும் தெளிவாகின்றது.

'ஆதித்தர்கள்' என்னும் குழுவினர் இருக்கு வேதத்தில் ஒன்றாகத் தொகுத்துக் கூறப்படுவர். இவர்கள் அறுவர் என்பதைப் பழைய பாடல்களிலிருந்து அறிகின்றோம். இருக்கு வேதத்தின் பத்தாவது மண்டலத்தில் எட்டாம் ஆதித்தனை 'மார்த்தண்டன்' கூறப்படுகின்றான். அதர்வவேதத்தில் இவர்கள் எண்மராக இருக்கின்றார்கள். பிராமணங்கள் பன்னிரு ஆதித்தர்களைக் குறிப்பிடுகின்றன. இப்பன்னிரு ஆதித்தர்களையே பின்னெழுந்த சமய நூல்களெல்லாம் கூறுகின்றன. இவ்வாதித்தர்களைக் குறிக்க இருக்கு வேதத்தில் வரும் பெயர்கள் கூறும் கருத்துத் தெளிவாக இல்லை. ஒரே ஒரு இடத்தில் மட்டும் ஆதித்தர்கள் அறுவரின் பெயர்கள் வருகின்றன. இவை 'மித்திரன், பகன், அர்யமன், வருணன், தக்ஷன், அம்சன் என்பன. சில இடங்களில் சூரியன் ஆதித்தன் எனப்படுகிறான். இவன் நாளடைவில் ஏழாவது ஆதித்தன் ஆகின்றான். ஆதித்தர்கள் எப்பொழுதும் குழுவினராகவே காணப்படுவர். இக்குழுவில் மித்திரனுக்கும் வருணனுக்கும் இடம் உண்டு. ஆதித்தர்களிடம், தேவர்களிடம் அமைந்து காணப்படும் பண்புகள் உண்டு. இவர்கள் விண்ணைச் சார்ந்தவர்கள். இவர்களது தாய் 'அதிதி' யாவள். இதனாலேயே இவர்களுக்கு ஆதித்தர்கள் என்னும் பெயர் ஏற்பட்டது.

இருக்கு வேதத்தில் பத்துச் சூக்தங்கள் சூரியனைப் போற்றிக் கூறுகின்றன. சூரியனையும் இவனுடன் தொடர்பு படுத்திக் கூறப்படும் ஏனைய தெய்வங்களையும் எடுத்து நோக்கினால் சூரியனுக்கு உரிய வர்ணனையே இரு இடங்களுக்கும் பொதுவாக வந்திருப்பது தெளிவாகும். சூரியனைப் பற்றிக் கூறும் அவனது வட்ட வடிவமான தோற்றம் சூரியனதும், மித்திரனதும், வருணனதும் கண் எனத் தனித்தனி கூறப்படு

டுள்ளது. இவன் எல்லாவற்றையும் பார்க்கிறான். உலகம் முழுவதையும் மறைந்து நின்று கவனிக்கின்றான். இவன் மக்களின் நல்லனவும் தீயனவுமான இருவகைச் செயல்களையும் கூர்ந்து நோக்குவான். இவன் தேரை விரைவாக இழுத்துச் செல்ல ஏழு குதிரைகள் இருக்கின்றன. பொழுது புலர்தல் இவன் தோற்றத்துக்குக் காரணமாய் இருக்கின்றது. இவன் உதித்தவுடன் மக்களுக்குச் சுறுசுறுப்பை ஊட்டி அவர்களை இயங்க வைக்கிறான். இயங்கும் பொருள்களுக்கும், நிலையியற் பொருள்களுக்கும் இவன் உயிர்க்களனாக விளங்குகின்றான். இவனை உலகம் முழுவதும் பரந்து காணப்படும் பறவை என ஒரு பாடல் கூறுகின்றது. இவன் ஆகாயத்தின் மணி எனப் படுகின்றான். ஆகாயத்தின் நடுவிற் பதிந்துள்ளதும், பல நிறங்கள் வாய்ந்ததுமான கல் என்றும், வலிமை வாய்ந்த படைக்கலம் என்றும், சக்கரம் என்றும் இவனைப் பலவகையாகக் கவி வர்ணித்துள்ளார். தோலை உரித்துக் களைவது போன்று இவன் இருளைக் களைந்து நீக்குவான். நாட்களைப் பிரித்து அளந்து மக்களின் வாழ்க்கையை நீடிக்கச்செய்வான். நோயை மட்டுமின்றித் தீய கனவுகளையும் நிகழவிடாது விரட்டி ஓட்டுவான். பிராணிகள் அனைத்தும் இவனையே அண்டி வாழ்கின்றன. எல்லாவற்றையும் தோற்றுவிப்பவன் இவனன்றோ! பாவமற்றவர்கள் என்று தங்களைப் பற்றி மித்திரனிடமும் வருணனிடமும் கூறும்படி மக்கள் இவனை வேண்டுவர்.

'பூஷன்' என்னுந் தெய்வத்தைப் பற்றி எட்டுச் சூக்தங்கள் இருக்கின்றன. இவை இவனைக் கைகால்கள் முதலிய உறுப்புக்களை உடையவனாக வர்ணிக்கின்றது. ஒருவர் தெளிவாக எடுத்துக்கூறக் கூடிய பண்புகளை இத் தெய்வத்திடம் காணல் அரிது. இச் சூக்தங்கள் இவனது கால், வலக்கை, தாடி, சடைமுடி என்பவற்றைக் கூறுகின்றன. இவன் பொன்னாலான ஈட்டியையும் அங்குசத்தையும் தாங்கி நிற்கின்றான். இவனது தேரை ஆடுகள் இழுத்துச் செல்லும். நன்கு காய்ச்சிய கஞ்சியே இவனுடைய உணவு. இவன் உயிர்களைக் கண்காணித்து வருகின்றான். இவனது உறைவிடம் விண்ணில்



இருக்கின்றது. பொன் மயமான தன் கையால் இவன் உயிர்களை எழுப்பியும், அவர்களை ஊக்குவித்தும் அருள் புரிகின்றான். இவனது அழகும் பொன் மயமானதென்பர். இது மண், விண், இடை ஆகிய மூவுலகங்களிலும் நல்லொளி பெருக்கி நிற்கின்றது. தனது பொற்றேரில் ஏறி எல்லா உயிர்களையும் நோக்கியவாறு மேலும் கீழும் நோக்கிச் செல்லுகின்றான். இவன் மஞ்சள் நிற மயிரினன். முதலில் இவன் தனது ஒளியைக் கிழக்கில் பரப்புகின்றான். இவன் இறந்தவர்களை நற்பண்புடையோர் ஏகவேண்டும் உறைவிடத்திற்கு அழைத்துச் செல்கின்றான். கெட்ட கனவுகளையும் பாவங்களையும் அரக்கர்களையும் விரட்டி ஓட்டுவான். நேர்மையை நிலைநாட்டுவான். இந்நேர்மையே இருதம் என்றும் விரதம் என்றும் கூறப்படும். காற்று, நீர், முதலியன இவனால் இயங்குவன. இவன் ஆக்குவது பகலை மட்டுமன்று. இரவையும் இவனே தோற்றுவிக்கின்றான். உயிர்கள் இவனிடம் ஆறுதல் பெறுகின்றன. தெய்வங்கள் இவன் வகுக்கும் வழியை பின்பற்றுவன. இவனது விருப்பத்தை மீறுதல் எவர்க்கும் எளிதன்று. இருக்கு வேதத்தில் வரும் மந்திரம் ஒன்று 'காயத்திரி' என்றும் 'சாவித்திரி' என்றும் பெயர் பெற்றுப் பிரசித்தமாக வழங்கி வருகின்றது. இது இவனைக் குறித்துப் பாடப்பட்டதே. சவிதா என்னுந்தெய்வத்தைச் சூரியனினின்றும் பிரித்து வேறாகக் கூறுவர். இவன் சூரியனின் கிரணங்களைத் துணைக்கொண்டு ஒளி பரப்புகின்றான். இவனே சூரியனை இயங்கச் செய்கின்றான். 'ஸு' என்னும் வினையடி இயங்குதல் என்னும் கருத்தை உணர்த்தும். சவிதா என்னும் பெயர் இவ்வினையடியிடத்துப் பிறந்தது. இது, இவன் இயக்குவிப்பவன், இயக்குவித்தல் இவன் தனிப் பெருந்தொழில் என்பதையே சுட்டுகின்றது. உயிர்களை இயக்குவித்தற்கும் உலகமே இயங்குவதற்கும் காரணமான இவ்வியக்குவிக்குந் தெய்வம் சூரியனுடன் பெருந் தொடர்பு கொண்டிருப்பது பொருத்தமானதே.

இந்தியாவில் இன்று வழங்கி வரும் தெய்வங்களுள் இரு பெரும் கடவுளர் தலைசிறந்து விளங்குவர். இவ்விருவருள்

‘விஷ்ணு’ ஒருவன். இருக்கு வேதத்தில் இவன் மிகச் சிறு தெய்வமாகவே காணப்படுகிறான். ஐந்தாறு சூக்தங்களில் மட்டுமே இவன் போற்றப்படுகிறான். மூவடியால் இவன் அளக்கும் அழகு பன்முறை எடுத்துக் கூறப்பட்டுள்ளது. இவன் மிகவும் அகன்ற அடிச்சுவட்டினன். மூவடியால் அனைத்தையும் அளந்தோன் என்ற அடைமொழி இத்தெய்வத்திற்குச் சிறப்பாக அமைந்துள்ளது. இவ்வடிகளைத் துணைக்கொண்டு இவன் விண்ணையும் மண்ணையும் வியாபித்து நின்றதாக இருக்கு வேதப் பாடல்கள் கூறும். இத் தெய்வத்தின் இரு அடிகள் மட்டுமே மக்களின் கண்களுக்குப் புலனாகின்றன. மூன்றாம் அடி, மக்கள் கட்புலனுக்கோ அன்றி மாக்கள் கட்புலனுக்கோ அப்பாலதாய் அறியப்படாது இருக்கின்றது. விண்ணில் பதிந்து விளங்குங் கண்போல் இருப்பது இம் மூன்றாம் அடி. இது பெரும் ஒளியை வீசி நிற்கின்றது. உலகில் உதயம், நண்பகல், அத்தமனம் ஆகிய மூன்று நிலைகளைக் குறிப்பாகக் கடந்து செல்லும் சூரியனின் செலவை இம் மூவடிகளும் குறிக்கின்றன என்பர். மக்களது கட்புலனுக்கு அகப்படும்படி வெளிவரும் நோக்குடன் விஷ்ணு மேற்கொண்ட உருவமே சூரியன் என்பர். இந்திரனுடன் இவன் பூண்டுள்ள நட்பு இவனது இன்னொரு விசேட பண்பு என்பர். ‘விருத்திரனுடன்’ இந்திரன் அடிக்கடி நிகழ்த்திய போர்களில் விஷ்ணு அவனுக்கு உதவி புரிந்ததை இருக்கு வேதம் எடுத்துக் கூறுகின்றது. விஷ்ணுவை மட்டும் தனியே எடுத்துக் கூறும் பாடல்களில் இரு இடங்களில் இந்திரனே உடன் கூவி அழைக்கப்படுகின்றான். ஒரு பாடல் முழுவதுமே இவ்விருவரைப் போற்றுவதாக அமைந்து விளங்குகின்றது.

இருக்கு வேதத்தில் இருபதுக்கு அதிகமான பாடல்களில் ‘உஷை’ போற்றி வழுத்தப்படுகின்றாள். இப்பாடல்கள் இத் தெய்வத்திற்கு உருவங் கற்பிக்கின்றன. இவளே இருக்கு வேதத்தில் கூறப்படும் தனிப் பெரும் பெண் தெய்வம். இவள் கிழக்கே தோன்றுவள். ஒளியே இவள் அணிந்து விளங்கும் ஆடை. அழகிய ஆடை அணிந்து விளங்கும் உஷை ஆடல் அழகியாகப் போற்றப்படுகின்றாள். இவள் இருளை



அகற்றுகின்றாள். இவள் களைவது இருளின் கரிய உடையை என்று கவி வர்ணிக்கின்றார். பருவங்கடந்து பன்னெடுங் காலம் வாழ்ந்து முதிர்ந்த பிராயம் எய்திக் காட்சியளிக்கும் இவள் எப்பொழுதும் இளமை சிறிதும் குன்றாது இளம் பிராயத்தினளாகத் தெரிவது கவியைப் பெரும் ஆச்சரியத்தில் ஆழ்த்தி விடுகின்றது. தினந்தோறும் மெருகேறிய புதுப் புதுத் தோற்றங்களைப் பெற்றுத் தோன்றுமிவள் இளமை குன்றாதவளே. நாள்தோறும் விடியற்காலை வேளை தோன்றும் இவளைக் கவி திரும்பத் திரும்பப் பிறந்து கொண்டிருப்பவளாக வர்ணிக்கின்றார். இவள் மக்களின் ஆயுளைத் தேய்ந்து அழியும்படி செய்கின்றாள். விண்ணில் கதவங்களை விடியற் காலத்திற் திறக்கின்றாள். இவளது ஒளிமிக்க கிரணங்கள் மாட்டு மந்தைபோல் காணப்படுகின்றன. இவள் ஒளிவீசும் தேரில் பவனி வரும் அழகே தனியழகு. செந்நிறம் பொருந்திய புரவிகள் இவள் தேரை இழுத்துச் செல்கின்றன. இவள் தீய கனவுகளை நிகழ விடாது நீக்குபவள். இருளையும் தீமை பயக்கும் அரக்கரையும் துரத்தி அகற்றுபவள். இவள் பிரகாசிக்கத் தொடங்கும் பொழுது குருவிகள் கூட்டிலிருந்து பறந்து செல்கின்றன. இவ்வேளையில் மக்களும் உணவு தேடத் தொடங்குவர். குறிப்பிட்ட இடத்திலேயே உஷை நாள்தோறும் ஒழுங்காகத் தோன்றுவள். இயற்கையின் நியதியை இவள் ஒருபொழுதும் மீறுவதில்லை. இவள் ஒவ்வொருநாளும் பிறக்கும் இடம் ஆகாயம். இதுபற்றியே இவள் ஆகாயத்தின் புதல்வி எனப்படுகின்றாள். இவள் இரவுக்கு உடன் பிறந்த மூத்தவள். இவ்விரு கருத்துக்களையும் உணர்த்தும் பெயர்கள் ஒன்றாக இணைக்கப்பட்டு இவளைக் குறிக்கும் வண்ணம் பாடல்கள் அமைந்திருக்கின்றன. சூரியனுடன் இவளுக்குத் தொடர்பு உண்டு. ஆடவனொருவன் பெண்ணைத் தொடருவதுபோல் சூரியன் இவளைத் தொடருகின்றான். இவள் சூரியனின் மனைவியாகக் கூறப்படுகின்றாள். வேறு கவி, சூரியன் தோன்றும் முன் இவள் தோன்றுவதைக் கருத்துட் கொண்டு, சூரியனைப் பிறப்பிப்பவள் எனத் தெளிந்து இவளைச் சூரியனின் தாய் என வருணிக்கின்றார். நல்ல ஒளி பொருந்திய குழந்தையை இவள் ஏந்தி வருவதாகக் கவி

யொருவர் வர்ணிக்கின்றார். இவள் தோன்றும் விடியற் பொழுதிலேதான் வேள்வித் தீ மூட்டப்படுகின்றது. இது பற்றி உஷை அக்கினியுடன் தொடர்பு பெறுகின்றாள். அக் கினியையே இவளது காதலனாகக் கற்பனை செய்கின்றார் இன் னொரு கவி. காலைச் சந்தி வேளையாகிய விடியற்காலத்துடன் தொடர்புபடுத்திக் கூறப்படுபவர்கள் அஸ்வினி தேவர்கள். இவர்களுடன் தொடர்பு கொண்டவளாக இவளை எடுத்துக் கூறும் வருணனைகள் பல காணப்படுகின்றன. இருள் மூடி மறைந்து கிடக்கும் செல்வத்தை இவள் வெளிப்படுத்துவது டன் அமையாது இவற்றை வாரி மக்களுக்கு வழங்குகின்றாள். இதனால் இவள் வண்மை எல்லோருக்கும் வெளியாகின்றது. வழிபடுவோனுக்குச் செல்வம், குழந்தைகள், பாதுகாப்பு, நீண்ட வாழ்வு, புகழ், பெருமை என்பவற்றை யெல்லாம் இவள் வழங்குவாள். வடமொழியில் வஸ் என்னும் வினையடி ஒளி வீசுதல் என்னும் கருத்தைக் குறிக்கும். இவளின் பெய ரான உஷை இவ்வினையடியிற்றோன்றி இக்கருத்தைப் பெற்று வருகின்றது. இப்பெயர் ஒளிவீசும் அவள் தனிப் பண்பினை எடுத்துக் கூறுகின்றது.

இராத்திரி என்னும் பெண்தெய்வம் இரவைக் குறிப்பது. இவளும் உஷை போன்று விண்ணின் புதல்வி எனப்படுவாள். இவள் இருள் செறிந்து நிற்கும் கரிய உருவினளாகக் கூறப் படவில்லை. இவளும் இக்கவிகளின் கண்களுக்கு ஒளி வீசி நிற் பவளே. இவள் தோன்றும் வேளைகளில்தான் தாரகைகள் ஒளி வீசுகின்றன. இவளது கண்கள் அழகு மிகுந்து திகழ்வன. அழகு பொலியப் பெற்று இருளை அகற்ற வரும் இத்தெய்வம் அணுகும் வேளை மக்களும் விலங்குகளும் புள்ளினங்களும் அமைதி பெற்று ஆறுதலடைவன. இவள் கொடும் விலங்கு கள் தீண்டாதவாறும், கள்ளர்கள் பொருளைக் கைப்பற்று திருக்கும்படியும் வழிபடும் மக்களைப் பாதுகாக்கின்றாள். இரு பது சூக்தங்களில் இவள் உஷையுடன் ஒருங்கே போற்றப் படுகின்றாள். இப்பாடல்களில் இவளுக்கு நக்தம் என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது.



இருக்கு வேதத் தெய்வங்களுள் 'அஸ்வினி' தேவர்களும் முக்கியமானவர்கள். இங்கு கூறப்படும் தெய்வங்களுள் இந்திரன், அக்கினி, சோமன் என்னும்மூவரும் நீங்கிய ஏனைய தெய்வங்களுள் இவர்களே முதலில் வைத்தெண்ணப்பட வேண்டியவர்கள். ஏனெனில் இம்மூன்று தேவர்களுக்கடுத் தாற்போல் அதிகப் பாடல்களைப் பெற்று வருபவர்கள் இவர் களே. இவர்கள் இரட்டையர்கள். ஏறக்குறைய ஐம்பது சூக்தங்கள் இவர்கள் மீது பாடப்பட்டுள்ளன. அதி விடியற் காலத்திற்கும் சூரியன் உதிப்பதற்கும் இடைவேளை இவர்கள் தோன்றும் நேரம். உஷையே இவர்களைக் காலையில் துயில் எழுப்புபவள். தமது தேரில் அஸ்வினிகள் இருவரும் இவளைத் தொடர்வர். இருளையகற்றித் தீய பேய்களை விரட்டியகற்று வதில் இவர்களிருவரும் ஈடிணையற்றவர். 'இருபு'க்களால் அமைக்கப்பட்டுள்ளது இவர்கள் பவனி வரும் தேர். இது சூரியனது பண்புகளை உடையது; பொன் மயமானது: இதற்கு மூன்று சில்லுகளே உண்டு. குதிரைகளும், பறவை களும் இதை இழுப்பன. இக் குதிரைகள் சிறகுடையவை. ஆகாயம், பூமி என்னும் இரண்டையும் வலம் வரும் இயல் பினரான இவ்விருவரும் ஒரே நாளில் உலகைச் சுற்றிவருவர். விண்ணினதும் விவஸ்வானினதும் சரண்யுவினதும் புதல்வர் கள் எனத் தனித்தனி கூறப்படுகின்றனர். பூஷன் இவர்களது புதல்வன். சூரியனின் புதல்வியாகிய சூரியா இவர்களுடன் தொடர்புடையவள். இவள் இவர்களது தேரில் செல்வாள். இவளை இவர்களது மனைவியாகவும் சிலபாடல்கள் கூறும். இவ் விரட்டையர்கள் இணைபிரியாது ஒன்றியே திரிவர். பழமை மிக்கவராயினும் இவர் இளமை சான்று அழகு பொலிந்து பொன்னை நிகர்த்து ஒளிப்பரப்பும் தாமரை மலர் மாலைகள் சூடிக் காணப்படுவர். இவர்களுக்கு மதுவின் மீது அதிக விருப் பம். சோமாசத்தைப் பருக இ வர்கள் பெரிதும் விரும்புவர். சூரியை, உஷை ஆகிய இருவருடனும் ஒருமித்து இதைச் சுவைத்துப் பருகுவர். இவர்கள் தெய்விக சக்தி வாய்ந்தவர் கள். இன்னல் களைவதில் இணையற்றவர்கள். இவர்களைத் தெய்வ வைத்தியர்கள் என்பர். கை கால்கள் முதலிய உறுப் புக்களை இழந்தவர்களுக்கு மீண்டும் அவற்றைப் பொருத்தி

யும், கண்பார்வை நீங்கியவர்களுக்கு மீட்டும் அவற்றை வரு
வித்தும், முதியோருக்கு முதுமையை அகற்றி, இளமையைப்
புதுக்கியும் தம்மை வழிபடுவோரை வாழவைப்பவர்கள்.
கடலில் மரக்கலத்தில் ஏறிச் செல்லும் வேளை திசை தப்பித்
திணறிய புஜ்யு என்பவனின் அல்லல் நீக்கிப் பாதுகாத்த
வரலாறு இவர்களின் பெருமையை எடுத்தோதுகின்றது.
அஸ்வினிதேவர்கள் என்னும் பெயரைத் தாங்கி இப்பெய
ரால் தம்மை குதிரை வீரர் என உணர்த்தும் இவர்கள்
குதிரை மீது இவர்கள் செல்வதாகப் பாடல்களெதுவும்
குறிப்பிடுவதில்லை. இவர்கள் தேரில் செல்வதையே பாடல்
கள் கூறுகின்றன. இருளும் ஒளியும் ஒரே அளவாய் விரவிய
காலைச் சந்தி வேளையின் உருப்பெற்ற தோற்றமே இருக்கு
வேதங் கூறும் அஸ்வினி தேவர்களின் தோற்றம் என்பர்
சிலர். காலையிலும் மாலையிலும் விண்ணில் தோன்றும் இரு
தாரகைகளே அஸ்வினிகள் என்பர் வேறு சிலர். கிரேக்க
நூல்கள் கூறும் பழைய வரலாறுகளில் இரு குதிரை வீரர்கள்
பற்றிக் குறிப்பு வருகின்றது. இவர்கள் 'செயுஸ்' என்பவரின்
புதல்வர்கள். 'ஹெலனு'வின் உடன் பிறந்தோர். இவர்கள்
சூரியனின் புதல்வியைக் காதலித்துக் குதிரையிலிவர்ந்து
செல்வதாக இவ்வரலாறுகள் கூறுகின்றன.

இனி, விண்ணுக்கும் மண்ணுக்கும் இடைவெளியைச்
சார்ந்த தெய்வங்களை நோக்குவோம். இத்தெய்வங்களுள்
தலை சிறந்தவன் இந்திரன். இருக்கு வேதத்தில் காணப்படும்
பாடல்களின் நான்கில் ஒரு பகுதிக்கதிகமான பாடல்கள்
இவனைப் போற்றுவதற்காக எழுந்தவை. இந்திரன் கைகால்
முதலிய உறுப்புகளுடன் உருவகப்படுத்திக் கூறப்படுகிறான்.
இவனைப்பற்றிய வரலாற்றுக் கதைகள் பெருகிக் காணப்படு
கின்றன. இம் முறையில் பெருமை கூறும் வரலாறுகள் ஏனைய
தெய்வங்களுக்கு அமையவில்லை என்பது எடுத்துக் கூறாமலே
விளங்கும். இடி முழக்கம் இரண்டுடனும் தொடர்புடையவன்
இந்திரன். வறட்சி, இருள் என்னும் அரக்கர்கள் இவனது
பகைவர்கள். இவன் ஒளியைப் பரவச் செய்தும், தடுப்புண்டு
சிறைவைக்கப்பட்ட நீரை விடுவித்தும் பெரும் புகழை ஈட்டி



யவன். இவனது புறத்தோற்றம் இருக்கு வேதப் பாடல்களில்
தெளிவாகத் தீட்டப்பட்டுள்ளது. இவனது பழுப்பு நிறமான
தாடி, தலைமயிர் முதலியன இங்கு குறிப்பிடப்பட்டுள்ளன.
கையில் வச்சிரத்தை (இடியை)த் தாங்கி நிற்பான். இது இவ
னுக்கெனச் சிறப்பாக அமைந்த படைக்கலம். இதை சிவனுக்
குச் சமைத்துக் கொடுத்தவன் 'துவஷ்டா' என்னும் தெய்வத்
தச்சன். இது இரும்பாலானது; கூரிய முனைகள் பலவற்றை
உடையது; பொன்னொளி வீசுவது. இந்திரன் வில்லம்புகளை
ஏந்தியும் வளைந்த ஈட்டியைத் தாங்கியும் விளங்குகின்றான்.
இரு குதிரைகள் பூட்டிய தேரில் இவன் செல்வான். சோம
ரசம் பருகுவதில் இவன் நிகரற்றவன். வீரச் செயல்கள் புரிய
வேண்டும் வீறை இது இவனுக்களிக்கும். இதுவே விருத்தி
ரனை யழிக்கும் ஆற்றலை இவனிடம் தோற்றுவித்தது. சோம
பானத்தினால் வெறி மீறிய இந்திரன் தன் பெருமையையும்
ஈடற்ற வலிமையையும் தானே புகழ்ந்து கூறும் முறையில்
ஒரு பாடல் முழுவதுமே அமைந்து காணப்படுகின்றது.
'தியௌ' இவன் தந்தை எனவும், அக்கினி, பூஷன் என்னு
மிருவரும் உடன் பிறந்தோரெனவும், இந்திராணி மனைவி
எனவும் கூறப்படுவர். துவஷ்டா இவனது தந்தையெனச் சில
பாடல்கள் குறிப்பிடுகின்றன. இந்திரன் பல தெய்வங்களு
டன் இணைத்துக் கூறப்படுகிறான். மருத்துக்கள், அக்கினி,
வருணன், வாயு, சோமன், பிருகஸ்பதி, பூஷன், விஷ்ணு,
ஆகியோர் இவனுடன் கூவியழைக்கப்படும் தெய்வங்கள்.
இந்திரன் விருத்திரனுடன் நிகழ்த்தும் போர் அடிக்கடி வர்
ணிக்கப்படுகின்றது. விருத்திரனை அழிப்போன் என்னுங் கருத்
தையுடைய 'விருத்திரஹா' என்பது இவனது சிறப்புப் பெயர்
களில் ஒன்று. இவன் இவ்வாறு நிகழ்த்தும் போரில் அக்கினி,
சோமன், பூஷன் ஆகியோர் துணை நிற்பர். இவன் வேறு சில
அரக்கர்களையும் அழித்தான் என்று சில பாடல்கள் குறிப்பிடு
கின்றன. இயற்கையைச் சீர்படுத்த இந்திரன் புரிந்தசெயல்கள்
பல உண்டு. ஆதியில், அசைந்து திரியும் ஆற்றல் பெற்றிருந்
தன மலைகள். இந்திரன் அவற்றை அங்குமிங்கும் திரியாத
வாறு நிலைபெறச் செய்தான். இந்திரனே விண்ணையும் மண்ணை

யும் அகன்று விளங்கும்படி நிறுத்தி உரியவாறு அமைத்தவன். அரக்கர்களை அழித்த பெருமை வாய்ந்த இவனை வீரர்கள் வழிபடுகின்றனர். வழிபடுவோரைப் பாதுகாப்பது இவனது பண்பு. அவர்களுக்குப் பேருதவி புரிந்து உற்ற நண்பனாக விளங்கும் பெருமை இவனுக்குண்டு. இவர்களுக்கு வேண்டும் செல்வம் ஈந்து, வெற்றியையும் பெற்றுத்தருகின்றான். இவனது வண்மை வரைவற்றது. எனவே, வள்ளல் என உயர்த்திக் கூறப்படுகிறான். மகவான் என்னும் பெயர் இதையே எடுத்துக் கூறும். இது இவனுக்கே சிறப்பாக அமைந்துள்ளது. இவன் விண்ணிலிருந்து சோமலதையைக் கொண்டுவந்த வரலாற்றை இருக்கு வேதப் பாடல்கள் சுவைபடக் கூறுகின்றன. பணிக் கூட்டத்தினரால் கவரப்பட்டுக் குகைக்குள் ஒளித்து வைக்கப்பட்ட ஆனிரைகளை சரமா என்னும் பெண் நாயின் துணையுடன் மீட்ட வரலாறும் இந்திரன் பெருமையை எடுத்துக் கூறும் வகையில் அமைந்துள்ளது. சுதாஸன் முதலிய மண்ணுலக வீரர்களுடன் இவன் புரிந்த போரும் இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. இந்திரனுக்கும் வருணனுக்கும் பலவகை வேறுபாடுகள் உண்டு. இந்திரன் உடல்வலி மிக்கவன். பௌதிக உலகில் பலம் மிகுந்து விளங்குபவன். சிறந்த வீரன். புலன்கள் ஈர்க்க அவை வழி இழுப்புண்டு அதனால் அளவு அறியாது உண்டு குடிப்பவன். இவன் தன் தந்தையாகிய துவஷ்டாவைக் கொன்றான் என்று ஒரு பாடல் கூறுகின்றது. வருணனோவெனில் சாந்த குணம் பலடத்தவன்; அமைதியான வழியிற் செல்பவன். இயற்கையின் நியதிக்கமைந்து ஒழுகுபவன். இருதம், தர்மம் என்பவை இவன் கடைப்பிடிக்கும் உயர் நெறிகள். இவனை மிகவும் உயரிய பண்புவாய்ந்தவனாக இருக்கு வேதம் சித்திரித்துக் காட்டுகின்றது. இந்திரன் மிகப் பழமை வாய்ந்த தெய்வம் என்பர் ஆராய்ச்சியாளர். பாரசீகரின் பழைய நூலான அவெஸ்தாவில் வரும் இந்திரன் அசுரன் எனக் கூறப்படுகிறான். இங்கு அசுரன் என்பது சிறப்பான கருத்தில் வருகின்றது என்பது நோக்கற்பாலது. விருத்திரனையழித்தவன் என்று சுட்டிக்காட்டும் விருத்திரக்னன் என்னும் பெயரும் அவெஸ்தாவில் இடம் பெற்றுள்ளது.



இருக்கு வேதம் எடுத்துக் கூறும் சிறு தெய்வங்களுள் பர்ஜனியனும் ஒருவன். இவனைப் பற்றி மூன்று பாடல்கள் வருகின்றன. இவன் மழைத் தெய்வம். பர்ஜன்யன் என்றாலே மழையைப் பொழியும் மேகம் என்பது பொருள். மழையைப் பொழியும் இம் மேகத்தை மாட்டின் முலைகளாகவும், நீரை நிறைய மொண்டு ததும்பி வழியும் வாளிகளாகவும், நீர் நிரம்பியுள்ளதும் தோலாலமைந்ததுமான நீர்ப்பையாகவும் உருவகித்துக் கூறியுள்ளனர். நிலத்தை வழிப்படுத்திச் செழிப்பாக்கிப் பயிரை முளைத்துத் தழைத்தோங்கவைப்பது இவன் தொழில். இவன் பொழிவிக்கும் மழையாலேயே உலகம் இயங்குகிறது. இவன் நீரால் அமைந்த தேரில் அமர்ந்து பவனி வருவன். இவன் தெய்விகம் வாய்ந்த தந்தையெனப் போற்றப்படுகின்றான். நீர் நிரம்பியுள்ள பையைத் திறந்து அதைக் கீழே சரித்து மழை பெய்யும் வண்ணம் அதன் நீரைப் பொழிந்து பெருக்குகின்றான். மழைத் தெய்வமாகிய இவனுக்கு இடி மின்னல் என்னும் இரண்டுடனும் தொடர்பு உண்டு. பயிர் வகைகளைச் செழித்தோங்க வைப்பதிலும், நிலத்தை வளம் மிகச் செய்வதிலும் இவன் மிக வல்லவன். இவன் ஆகாயத்தின் மைந்தன். நிலம் இவன் மனைவி. இவனைப் பற்றி பாடல்கள் இவ்வாறு கூறுகின்றன.

இருக்கு வேதத்தில் உருத்திரன் மீது பாடப்பட்டிருப்பன மூன்றே மூன்று பாடல்கள். இவனது உருவம் இவற்றில் சித்தரிக்கப்பட்டுள்ளது. உருத்திரனது உதடுகள் மிக அழகானவை. இவன் தனது தலைமயிரைச் சடாமுடியாகக் கட்டியுள்ளான். இவன் சிவந்த மேனியன். கிரணங்களை அள்ளி வீசிப் பிரகாசிக்கும் சூரியனை நிகர்த்து ஒளி வீசுகின்றான். இவன் அணிந்துள்ள ஆபரணங்கள் பொன்னாலானவை. அழகான கழுத்தணியால் இவன் மிடறு பொலிவுற்று விளங்குகின்றது. இவன் தேரில் அமர்ந்து செல்வான். இவன்கையில் தாங்கி வரும் படைக்கலம் இடி என்பர். இவனே ஆகாயத்தில் இருந்து மின்னலை அம்பாக எய்பவன். வில்லும் அம்புமே இவனின் சிறந்த படைக்கலங்கள் உருத்திரன் மருத்துக்களுடன் நெருங்கிய தொடர்புடையவன். இவன் மருத்

துக்களின் தந்தை. அழிவை நிகழ்விக்கும் பொழுது இவன் கொடிய மிருகங்களை நிகர்த்துக் காணப்படுவன், இவன் வலிமைக்கு ஈடு இணை கிடையாது. இவன் மூப்பற்றவன், இளமை குன்றாத காளை; உலகிற்குத் தந்தை எனக் கவிகள் இவனை ஏத்துவர். தேவருலகினரும் நிலவுலகினரும் ஆற்றும் செயல்களனைத்தையும் தலைமை பூண்டு கவனித்து நிற்பவன். மக்களனைவரும் தாமே எளிதிற் போற்றி வணங்கும் பெற்றியன். மங்களகரமானவன். இக்கருத்தை உணர்த்தும் சிவன் என்னும் அடைமொழி இவனது நன்மை செய்யும் பண்பைச் சுட்டுகின்றது. பிற்கால வேதநூல்களும், சம்ஸ்கிருதத்தில் எழுந்த சமய நூல்களும் இதர நூல்களும் சிவனெனப்படும் இவ்வடை மொழியையே இவனது சிறப்புப் பெயராகக் குறிப்பிடுவதைக் காண்கின்றோம். உருத்திரன் என்னும் பெயர் சிறிது சிறிதாக மறைந்து சிவனென்னும் பெயரே நிலைபெற்று விடுகின்றது. இவன் வழிபடுவோர்க்கு வரைவின்றி வழங்கும் வள்ளல். சில வேலைகளில் தீமை செய்யவும் இவன் விழைவதைக் கவிகள் எடுத்துக்காட்டியுள்ளார்கள். இவ்வேளைகளில்தாம் மக்கள் இவனது கோபத்தை வளராது தடுக்க விரும்புவர். சிறிதும் கோபம் கொள்ளாதிருக்கும்படியும், கோபம் மிகுந்து தீங்கு விளைத்து உயிர்களை அழிக்காதிருக்கும்படியும் இவனை வேண்டுவர். மக்களையும் பசுக்களையும் கொல்லும் திறன் வாய்ந்த அம்புகளை ஏவாதீர் என்பதே மக்கள் அடிக்கடி இவனிடம் விடுக்கும்வேண்டுகோள். இவன் தீங்கு விளைவிப்பவனாக மட்டுமே கவிகள் கண்ணுக்குப் புலப்படுகின்றான் என்று சொல்லிவிட முடியாது. தீங்குகளில் இருந்தும், தம்மை நாடி வரும் வழிபடுவோரைக் காக்கிறான். அவர்களுக்கும் பெரும் அருள் புரிவது இவனது சிறந்த குணங்களிலொன்று. இவன்மாட்டுச்சிறந்து காணப்படும் நோய் நீக்கும் ஆற்றல் போற்றற்குரியது. இவன் வைத்தியர்களுட் தலைசிறந்த வைத்தியனெனப்படும் வைத்தியநாதன். ஆயிரக்கணக்கான மருத்துவ முறைகளை நன்கு அறிந்து வைத்திருக்கின்றான். இதனால் இவனைச் சார்ந்து நிற்பவர்களுக்கு இவன் செய்யும் நன்மை அளவிடற்கரியது. இதுவரை கூறப்பட்ட இவனது குணாதிசயங்களில் அருளல், அழித்தல் என்னும் இரு



பண்புகளும் ஒருங்கே காணப்படுவதை உணருகிறோம். இவ்விரண்டனுள் மங்களகரமானவன் என்னுங் கருத்தையுணர்த்தும் சிவன் என்னும் அடைமொழி பெரிதும் வழங்கத் தொடங்கியது. இப்பெயர் இதிகாசங்களிலும் புராணங்களிலும் பெரிதும் வழக்கெய்தி இவனையே உணர்த்தும் சிறப்புப் பெயராய் இவனைக் குறித்து நிலைபெற்று வருகின்றது.

இருக்கு வேதத்தில் மருத்துக்கள் முப்பத்துமூன்று தனிப் பாடல்களில் பாடப்படுகின்றனர். இதைவிட வேறு ஒன்பது பாடல்களில் வேறுதெய்வங்களுடன் ஏத்திக் கூறப்படுகின்றனர். இவ்வாறு இவர்களுடன் இணைத்துப் போற்றப்படுபவர்கள் அக்கினி, பூஷன், இந்திரன் என்பவர்களே. மருத்துக்கள் கூட்டமாகக் கூடித்திரியும் குழுவினர். இவர்கள் எண்பத்தொன்பதின்மர் என்பர். சிலர் நூற்றெண்பது மருத்துக்கள் உளர் எனக் கொள்ளுவர். இவர்கள் உருத்திரன் பிருஷ்ணி என்பவர்களின் புதல்வர்கள். பிறப்பைக் குறிக்குமுகமாக இவர்களைப் பலவாறாகக் கவிகள் கூறியுள்ளார்கள். எனவே, இவர்களை வாயு புத்திரர்கள் என்றும், விண்ணிடைப் பிறந்தவர்கள் என்றும், தாமாகவே பிறந்த தான்தோன்றிகள் எனவும் பலவகையாகக் குறிப்பிடுவர். இவர்களனைவரும் ஒரே வயதினர். இவர்கள் உடன்பிறந்தோர் மட்டுமல்லாமல் ஒரே இடத்தில் பிறந்தவர்களாகவும் கூறப்படுகின்றனர். மருத்துக்கள் ஒன்றாய் ஒருங்கு வசிப்பவர்கள். ரோதசீ என்னும் தெய்வம் இவர்களுடன் தேரில் பவனி வருபவள். இவள் இவர்களின் மனைவி எனவும் கூறப்படுபவள். ஒளி செறிந்த தோற்றத்தினரான மருத்துக்களுக்கு மின்னலுடன் பெருந்தொடர்பு உண்டு. மின்னல்களாலேயே உருவாக்கப்பட்ட ஈட்டிகளைத் தாங்கிப் பொன்னாலான தலையணிகளை அணிந்து காணப்படுவர். பொன்னாற் செய்த கோடரிகள், அம்பு, வில்லுகள் இவர்களுடைய சிறந்த ஆயுதங்கள். இவர்கள் அணிவன பொன்னுடைகளும், பொன்னணிகலன்களும், பொன் மாலைகளும், கையணிகளும், காலணிகளும். இவர்கள் இவர்ந்து பவனிவரும் பொற்றேர் மின்னலை நிகர்த்துப் பேரொளி வீசும். மஞ்சள் நிறம் வாய்ந்தவையும், புள்ளிகள்

பல விரவப் பெற்றவையுமான பெண்குதிரைகள் தேரை இழுப்பன. இடி முழக்கமும் காற்றெழுப்பும் ஊளையொலியும் இவர்கள் எழுப்பும் ஒலிகளே. மலைகள் உட்பட உலகம் முழுவதுமே இவர்களெழுப்பும் இப்பேரொலி கேட்டு அஞ்சி நடுங்கும். மருத்துக்கள் காட்டு யானைகளோவென ஐயுறும் வண்ணம் மரங்களை அசைத்து முறித்துக் காடுகளை அழித்து விழுங்கி விடுவர். விண்ணுலகின் தலைசிறந்த பாடகர்களாக மருத்துக்களைக் குறிப்பிடுவர். இவர்கள் பாடும் பாட்டுக்கள் காற்றின் ஒலியை நிகர்ப்பன. இப்பாட்டுக்கள் பெரிதும் போற்றப்படுவன. மருத்துக்கள் மழையைப் பொழிவிப்பவர்கள். மழைபொழியும் வேளை இருளைக் கவியச் செய்பவர்களும் இவர்களே. மலையில் ஊற்றெடுத்துப் பெருகும் பேராறுகளை மட்டுமல்லாமல் விண்ணுலகிற் காணப்படும் நீர் நிறைந்த வாளியையும் வழிந்து நீர்பெருகி ஓடும்படி செய்வர். இங்கு கூறப்படும் நீர், இடி முழக்கங்களுடன் சார்புள்ளது. மருத்துக்கள் வெறும் நீரை மட்டுமின்றிப் பால், நெய், தேன் என்பவற்றையும் பெருமழையாகப் பொழிவிப்பார்கள் எனவும் கூறப்பட்டுள்ளது. இவர்கள் வெப்பத்தைத் தணித்து இருளை அகற்றி ஒளியைப் பரப்பிச் சூரியன் செல்லுவதற்கும் வழிகோலி அமைப்பார்கள். இவர்கள் என்றும் இளமை குன்றாதவர்களாய், தூசினால் மாசுபடாதவர்களாய், பலம் மிகுந்தவர்களாய், சிங்கத்தை போன்று பராக்கிரமசாலிகளாய்ச் சித்திரிக்கப்பட்டுள்ளார்கள். மருத்துக்கள் இடி, முழக்கம், மின்னல் ஆகிய மூன்றினுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள். இவர்களை இந்திரனுடன் இணைத்துக் கூறும் சந்தர்ப்பங்கள் பல. இவர்களின் துணை வலியாலேயே இந்திரன் தெய்விக சாதனைகள் அனைத்தையும் மெச்சும் வண்ணம் சாதித்தான். சில பாடல்கள் மருத்துக்களே இத்தகைய அரும்பெரும் செயல்களைப் புரிந்தார்கள் எனக் கூறுகின்றன.

இந்திரனுடன் இணைக்கப்படாது தனியாகக் கூறப்படும் இடங்களில் எல்லாம் மருத்துக்கள் தங்கள் தந்தையான உருத்திரனின் தீமை விளைவிக்கும் பண்பை மேற்கொண்டு நிற்பதைக் காண்கின்றோம். இவ்வேளைகளில் மக்கள் தீங்கு



விளையாதிருக்கும்படி இவர்களை வேண்டுவர். உருத்திரனுக்கு தெரிவது போன்று இவர்களுக்கும் நோயை நீக்கவல்ல வழிவகைகள் தெரியும். நீரைப் பொழிந்து அதையே அரும் மருந்தாகக் கொண்டு நோய்களைய வல்லவர்கள் மருத்துக்கள். மருத்துக்கள் என்றால் நசுக்குபவர்கள், பிரகாசிப்பவர்கள் என்றெல்லாம் கருத்துண்டு.

காற்றுத் தெய்வத்திற்கு 'வாயு, வாதம்' என்னும்பெயர்கள் இருக்கு வேதத்தில் வழங்கிவருகின்றன. வாயுவின் பெயரில் ஒரு பாடலும், வாதத்தின் பெயரில் இரு சிறு பாடல்களும் உண்டு. சில பாடல்களில், வாயு, வாதம் என்னும்இரு தெய்வங்களும் ஒருங்கு கூறப்பட்டிருக்கக் காணலாம். உற்று நோக்கின், வாயு என்பது காற்றுத் தெய்வத்தையும் வாதம் என்பது வீசுங் காற்றையும் குறிப்பதைத் தெளிவாக உணரலாம் எனச் சிலர் சுட்டிக்காட்டியுள்ளார்கள். வாயு, கைகால் முதலிய உறுப்புக்கள் பொருந்திய தெய்வமாகவும், இந்திரனுடன் இணைத்துக் கூறப்படும் விண்ணவனாயும் காணப்படுவன். பர்ஜன்யனென்னும் மழைத் தெய்வத்துடன் தொடர்பு கொண்டுள்ளது வாதம் என்னும் காற்று. வாயு வாதம் ஆகிய இருவருக்கும் வெவ்வேறு பண்புகள் கூறப்பட்டுள்ளன. வாயுவுக்கு ஒளி வீசும் தேர் ஒன்றுண்டு. இத்தேரில் சிவந்த குதிரைகள் பூட்டப்பட்டுள்ளன. சோமபானத்தில் இவனுக்கு விருப்பமதிகம். அதைப் பாதுகாப்பது இவன் பண்பு. இவன் புகழ், சந்ததி, செல்வம் என்பவனற்றை வழிபடுவோனுக்கு வழங்குவான். பகைவரையழிப்பது மட்டுமல்லாமல் பலம் குன்றியவர்களுக்கும் பாதுகாப்பளிப்பான். வாதம் எனப்படுந் தெய்வம் தேவர்களின் உயிர்நாடி. உருத்திரனை நிகர்த்து இவன் நோயை நீக்கி வாழ்வைப் பெருக்க வல்லவன். இறப்பின்மை இவனது பொக்கிஷம். இடிமுழக்கத்துடன் தொடர்புள்ளவனாகிய இவன் எழுப்பும் ஒலி மிகப் பெரியது. இவன் சிவந்த ஒளியை வீசி விடியற்காலத்தை விளங்கச் செய்வான். விரைவாக இயங்குவதில் இவனுக்கு இணை கிடையாது.

நான்கு சூக்தங்களில் பாடப்படும் நீர்த்தெய்வம் 'அப்பு' எனப் பெயர் பெறும். இது பெண்பால் பன்மை உருவத்திலே கூறப்படும். பன்மையிற் குறிப்பிடப்பட்டுள்ள நீர்த் தேவதைகள் தாயராகவும், இளம்பருவ மங்கையராகவும், மனைவியராகவும், தெய்வங்களாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளார்கள். தெய்வங்கள் வகுத்த வழியே செல்லும் இயல்பின இந்நீர்த் தெய்வங்கள். இந்திரன் வச்சிரத்தாற் கீற அதனுமைந்த வாய்க்கால் வழி இந்நீர்ப் பெருக்குகள் பாய்ந்து பெருகுவன; இந்திரனது ஆணையை மீறுது இயங்குவன. இவற்றின் குறிக்கோள் சமுத்திரம். இவை தெய்வத் தன்மை வாய்ந்தவை. தேவருலகமே இவற்றினுறைவிடம். அசுரனெனப் போற்றப்படும் வருணன் இவர்கள் நடுவில் உலவுவான். மக்கள் செய்யும் நல்ல செயல்களையும், தீய செயல்களையும் இவன் நோக்குவான். நீர்த்தெய்வங்கள் அன்னையர்களாகி அக்கினியைத் தோற்றுவிப்பர். அசைவனவும் அசைவற்றனவுமான உயிர்கள் எல்லாம் இவர்கள் தோற்றுவித்தனவே. அழுக்கு அகற்றித் தூய்மை வரவழைத்தால் இவர்களின் சிறந்த பண்பு. பொய், கோபம், கொடுமை, முதலிய தீய அழுக்குகளை நீக்குவதிலும் இவர்கள் வல்லவர்கள். நோய்களை நீக்கியும் பலத்தையளித்தும் ஆரோக்கியம், நீண்ட வாழ்வு, செல்வம், இறப்பின்மை ஆகியவற்றைக் கொடுத்தும் வழிபடுவோர்க் கருளுவர். யாகங்களில் இவர்க்கும் சோமரசம் வழங்கப்படும். இருக்கு வேதத்தில் நீர்த் தெய்வங்கள் பெரும்பாலும் தேனுடன் தொடர்புறுத்திக் கூறப்பட்டுள்ளன. இவர்கள் கொடுக்கும் தேனுடன் பாலைக் கலந்து மக்கள் தேவர்களுக் களிக்கும் பொழுது அவர்கள் அதை உவகையுடன் ஏற்பர். இதையே இந்திரன் பலம்பெற வேண்டிப் பருகுவன். தெய்விக நீர் சோமரசம் எனக் கூறப்படுகின்றது. அவெஸ்தாவில் நீர்த் தெய்வங்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. எனவே இத்தெய்வங்கள் பழமை மிக்கவை எனக் கருதுவர்.

'அபாம் நபாத்' என்னும் தெய்வம் நீர்த் தெய்வங்களின் புதல்வனுகக் கூறப்படும். இவன் மீது ஒரே ஒரு பாடல் காணப்படுகின்றது. வேறு பாடல்களில் அபாம் நபாத் சிறிது குறிப்பிடப்படுகின்றுன். இவன் இளமை மிக்கவனுய் ஒளி வீசித் திகழ்கின்றுன். பற்றுக்கோடு எதுவுமின்றியே நீரில் காணப்படுவான். மனோவேகமுடைய திரைகளில் இவன் செல்வான். ஓரிடத்தில் இவன் அக்கினி எனவும் பெயர் பெறுகிறுன். அக்கினி மீது பாடப்பட்டுள்ள பாடலிலும் இவன் அபாம் நபாத் என்று கூறப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.



பிருதுவி என்னும் சொல் நிலத்தைக்குறிக்கும். பிருதுவியை ஒரு தெய்வமாக இருக்கு வேதம் எடுத்துக் கூறுகின்றது. இத் தெய்வம் மீது ஒரே ஒரு பாடல் உண்டு. வேறு இடங்களில் இப் பிருதுவி, தியௌ என வரும் விண்ணுடன் இணைத்துக் கூறப்பட்டிருக்கக் காண்கின்றோம். இவை இரட்டைத் தெய்வங்கள். பிருதுவி தாய் எனவும் அழைக்கப்படுவள். அகன்று விளங்குபவளாதலின் இவள் பிருதுவி எனப்படுவள்.

இருக்கு வேத சமயத்தின் உயரிய நிகழ்ச்சி வேட்டல். இதில் முக்கிய இடம் வகிப்பவர் இருவர். ஒருவன் சோமன்; மற்றவன் அக்கினி. இந்திரனுக்கடுத்துப் பெருமை பெற்று விளங்குபவன் அக்னி. இவனுக்கு இருநூற்றுக்கதிகமான பாடல்கள் உண்டு. யாகத்திற் கற்பிக்கப்படும் கற்பனை வழியே இவன் உருவங் கூறப்படும். நெய் இவன் முதுகு. சுவாலைகள் இவன் தலை மயிர். பழுப்பு நிறமான தாடி, கூரிய தாடைகள், பொன் மயமான பற்கள் எல்லாம் இவனுக் குண்டு. இவனது நாக்குகள் மூலம் தேவர்கள் அவிகளைப் பெற்றுண்பர். இவன் சுவாலித்து எரியும் பொழுது எல்லாப் பக்கங்களிலும் முகங்களைக் கொண்டு காணப்படுவன். அக்கினி பல பிராணிகளுடன் உவமித்துக் கூறப்படுகின்றுன். இவன் முக்காரம் இடும் எருதை நிகர்ப்பன் இவன் கொம்புகள் கூரானவை. பிறந்தவுடன் இவன் ஆவின் கன்றை நிகர்ப்பன். தூண்டிவிடும் பொழுது தேவர்களைச் சுமந்து துள்ளி வரும் குதிரை போன்றவன். இவன் தெய்வப் பறவையாகவும் கூறப்படுவன். அக்கினி ஆகாயத்தில் திரியும் பொழுது கழுகு எனவும், தண்ணீரில் வசிக்கும் பொழுது அன்னப் பறவை யெனவும் கூறப்படுவன். இறகுகளை யுடையோனுய்ப்

பறவை போன்று மரத்திலேறிக் கொம்பில் குந்தியிருப்பன். விறகும் நெய்யும் இவன் உண்ணும் உணவுப் பொருள்கள். இவன் பருகுவது உருக்கிய நெய்யையே. தினந்தோறும் மூவகையுணவருந்துவான். இவன் மூலம் தேவர்கள் யாகங்களில் தம் பங்கைப் பெறுவர். இவனுக்கும் வேள்விகளில் பங்குகள் உரியன.

அக்கினியின் ஒளியைப் பற்றிப் பாடல்கள் அடிக்கடி குறிப்பிடுவன. சூரியனது ஒளி இவனுக்குண்டு. இவன் வீசும் ஒளி சூரியனின் கிரணங்களை நிகர்க்கும். இது மின்னலின் பிரகாசத்தை நிகர்ப்பதாகவும் பாடல்கள் கூறும். இரவிலும் இவன் ஒளி குன்றாது. இவன் தன் கிரணங்களால் இருளை நீக்குவான். இவனது பிறப்பு பலவாறாகக் கூறப்படும். தீ மூட்டும் இரு கடைக் கோல்கள் இவன் பிறப்பிடம். காய்ந்த விறகிலிருந்து இவன் பிறப்பதையும் பாடல்கள் குறிப்பிட்டுள்ளன. இக்குழந்தை பிறந்ததும் தாய் தந்தையரை விழுங்கிவிடும். தினந்தோறும் காலையிற் பிறப்பெய்தி இளமை குன்றாது காணப்படுவன். இவன் யாகம் வேட்போனைக் காட்டிலும் முதிர்ச்சி பெற்றவன். ஏனெனில் இவன் முதன் முதல் வேட்டவனென இருக்கு வேதம் கூறும். தெய்விக நீர் இவன் தோற்றுவாய். நீரிலே இவன் தோற்றுவிக்கப் படுபவன். நிலத்திலும் நீரிலும் இவன் கரந்துறைவதாகக் கூறப்பட்டுள்ளது. இருக்கு வேதம், அக்னி நீரில் தோன்றிய வரலாற்றை அடிக்கடி கூறுவது. இவன் விண்ணுலகிற் பிறந்த வரலாறும் இங்கு கூறப்படும். மாதரிஸ்வான் அக்கினியை விண்ணிலிருந்து மண்ணுக்கழைத்து வந்தான். அக்கினியின் வேற்றுருவம் சூரியன் என இருக்கு வேதம் எடுத்தோதுகின்றது. மூவகைப் பண்புகள் அக்கினிக்கு உண்டு. இவன் மூன்று வகையாகப் பிறப்பெய்தினன். தேவர்கள் இவனை மூவகையாகப் பிரித்தனர். ஒளியின் மூவகை நிலைக்கு இவன் எடுத்துக்காட்டு. இவனுக்கு மூன்று தலைகள் உண்டு. இவனதுடம்புகள் மூன்று. இப்பண்புகளை இருக்கு வேதமே அக்கினிக்குக் கற்பிக்கின்றது. வேறு எத்தெய்வத்திடமும் காணப்படாது, இவனிடத்து மட்டும் காணப்படுவது மக்களுடன் இவன் கொண்டுள்ள நெருங்கிய தொடர்பு. இவன் வீட்டிற்குத் தலைவன். இவன் சிறந்த அதிதி எனவும் கூறப்படுபவன். இறப்பில்லாத் தெய்வமான அக்கினி இறக்கும் இயல்பினரான மக்கள் நடுவில் உறைபவன். இவன் மனிதரின் நெருங்கிய உறவினன். வழிபடுவோர்க்கு இவன் தந்தையாகவும், தாயாயவும், உடன் பிறந்தோனாகவும், புதல்வனாகவும் கூறப்படுவன். இவன் தேவர்களை யாகங்களுக்கு அழைத்து வருபவன். யாகங்களில் அளிக்கப்படும் அவிகளைத் தேவர்களிடத்துக் கொண்டு சேர்ப்பித்தலையும் இவன் செய்வதுண்டு. இவன் 'ஹோதா' என்று கூறப்படுபவன். 'ஹோதா' என்பதற்கு யாகம் வேட்பவன் என்று பொருள். இந்திரன் சிறந்த வீரனாகச் சித்தரிக்கப்பட்டுள்ளான். அக்கினி, வேட்டலில் பயிற்சி மிக்க புரோகிதன்; வித்தையை அவன் நன்கு அறிந்தவன், எல்லாம் அறிந்தவன் என இவனைப் பாடல்கள் அடிக்கடி சிறப்பிக்கின்றன. வழிபடுவோர்க்குப் பல நன்மைகளையும் புத்திரப் பேற்றையும், செல்வத்தையும் அளிப்பவன். அவெஸ்தா கூறும் அக்னி வழிபாட்டை உற்று நோக்கினால் இத்தெய்வம் த்துணைப்பழமை மிக்கதெனத் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.



பிருகஸ்பதி என்னும் தெய்வத்தின் மீது 11 பாடல்கள் உள்ளன. இப்பாடல்களில் இவன் இந்திரனுடன் போற்றப் படுகிறான். இவனது பெயர் பிரம்மணஸ்பதி என்றும் காணப்படும். போற்றிக் கூறித் தெய்வங்களை வளர்விப்பனவாகிய மந்திரங்களின் தலைவன் என்பது இதன் பொருள். கூரிய கொம்பும், நீல நிறம் பொருந்திய முதுகும் பொன்னிறமும் இவனுடலை அழகுப்படுத்துகின்றன. இவன் வில்லம்பேந்தியும், இரும்பாலமைந்த கோடரியைத் தாங்கியும் காணப்படுவன். இவனது தேரை சிவந்த குதிரைகள் பூத்துச் செல்கின்றன. இவன் அரக்கர்களை அழிப்பவன். தேவர்களின் தந்தை. அக்கினியைப்போல் இவனையும் புரோகிதன் என்று கூறுவர். மந்திரங்களை ஆக்கும் இவன் துணையின்றேல் யாகங்கள் நிகழா. இவன் பாடும் பாட்டு விண்ணை எட்டும். பாடகர்களுடன் இவனுக்குத் தொடர்புண்டு. இந்திரனுடனும்

இவன் இணைத்துக் கூறப்படுபவன். தூய பண்பினையுடைய வழிபடுவோனுக்கு நீண்ட ஆயுளையீந்து அவன் நோய் தீர்த்தல் இவன் வழமை. இவன் இருக்கு வேதத்தில் புரோகிதனாகப் போற்றப்படும் அக்கினியின் ஓர் அம்சம். தெய்விகம் வாய்ந்த புரோகிதனாக விளங்கிய இவன் நாளடைவில் பிரமனாக உயர்ந்து விளங்குவதாகச் சிலர் சுட்டுவர்.

'சோமயாகம்' யாகங்களுள் முக்கியமானது. இதனால் சோமன் என்னும் தெய்வத்துக்கு உயரிய இடம் உண்டு. சோமலதை ஒருவகைக் கொடி. இதன் சாற்றைப் பிழிந்து யாகங்களிற் பயன்படுத்துவர். உருவமாக்கப்பட்ட நிலையில் சோமலதை தெய்வத் தன்மை பெற்றுச் சோமன் என்னும் பெயர் பெறலாயிற்று. சோமன் கூரிய ஆயுதங்களைத் தாங்கி நிற்பன். இவ்வாயுதங்கள் பயங்கரமானவை. வில்லும், ஆயிரம் முனைகள் பொருந்திய அம்பும் இவன் ஆயுதங்கள். இவன் தேர் வாயுவின் தேரை நிகர்ப்பது. இந்திரனுடனும் இவன் தேரில் அமர்ந்து செல்வான். இவன் தலை சிறந்த தேர்ப்பாகன் என்று கூறுவர். இவன் இந்திரன், அக்கினி, பூஷன், உருத்திரன் என்பவர்களுடனும் இணைத்துப் பாடப்படுகின்றான். மருத்துக்கள் இவன் துணைவராகக் கருதப்படுவர். வெறியூட்டும் சோமரசம் மது என்றும் இந்து என்றும் கூறப்படும். இது செந்நிறமானது. இருக்கு வேதத்தில் ஒன்பதாவது மண்டலம் முழுவதும் சோமனைப்பற்றிக் கூறுவது. சோமலதையைப் பிழிந்து சாறெடுக்கும் வகை, அது தேவர்களுக்களிக்கப்படும் முறை எல்லாம் இங்கு விரித்துக் கூறப்படுவதைக் காணலாம். மலைகள் சோமலதை வளருமிடங்களாகக் கூறப்பட்டுள்ளன. சோமனது இயல்பான இருப்பிடம் விண்ணுலகம். அங்கே இவன் தூய்மையாக்கப்படுவன். தேவருலகில் இவன் அரசன். இவன் உறைவிடமான தேவருலகத்திலிருந்து கீழே பூவுலகிற்குக் கொண்டு வரப்பட்டான். கழுகு தேவருலகத்திலிருந்து சோமனை இந்திரனிடம் கொணர்ந்ததாகக் கூறும் வரலாறு உண்டு. பூண்டுகளுள் முக்கியமானதால் அவற்றிற்கெல்லாம் அரசனெனப்படுவான். அவெஸ்தாவிலும் இவனைப் பற்றிய குறிப்பு உண்டு.



இதுவரை தனித்தனியே தெய்வங்களை வெவ்வேறாகக் குறிப்பிட்டு அவர்கள் பண்புகளை விளக்கினோம். இப்பொழுது இத் தெய்வங்களைப் பற்றிப் பொதுவாகக் காணப்படும் அம்சங்கள் சிலவற்றை நோக்குவாம். இருக்கு வேதம் முதன் முதலிற் சுட்டி நின்றது 'இயற்கைப் பொருள்களின் வழிபாட்டையே' என்று சமய வரலாற்றின் நூலாசிரியர்கள் கூறுவர். இயற்கைப் பொருள் வழிபாடு நாளடைவில் வேறு வழியில் திரும்பிற்று. இதன் விளைவாகச் சில பண்புகளை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு தோன்றிய தெய்வங்கள் இருக்கு வேதத்தில் இடம் பெறக் காண்கின்றோம். 'சிரத்தை, கோபம்' என்பன இவ்வினத்தைச் சார்ந்தவை. 'பிரஜாபதி' என்னும் தெய்வமும் இத்தகைய தெய்வமே. இத் தெய்வங்கள் யாவும் பத்தாம் மண்டலத்திலேயே காணப்படுவன. சிறு தெய்வங்களான 'இருபு, அப்சரர்கள், கந்தருவர்கள்' என்பவர்களையும் பத்தாம் மண்டலத்திலேதான் காண்கிறோம். 'பிதிரர்கள்' இயமன் முதலியவர்களும் 'அரக்கர்களும்' இருக்கு வேதத்தின் இறுதிப் பிரிவுகளான பத்தாம் மண்டலத்திலே வருவது நோக்கற்பாலதாகும்.

இருக்குவேத காலத்தில் வழிபாட்டுமுறை மிகவும் எளிதாகவே அமைந்திருந்தது. "நான் உனக்கு நெய் முதலிய ஆகுதிகளைத் தருகிறேன்; நீ எனக்கு வீரர்களான மக்களையும், பசுக்களையும், மழையையும், நீண்ட ஆயுளையுந் தா." என்பதே வழிபடுவோர் இருக்கு வேத காலத்தில் தெய்வங்களை மீண்டும் மீண்டும் வேண்டிய வேண்டுகோள். நெய் முதலிய 'ஆகுதிகளைக்' கொடுக்கும் இவ்வழிபாட்டு முறை, பல்கிப் பெருகி மிகவும் விரிந்து விரிவான முறையில் 'வேள்வி' குறிப்பிடப்படலாயிற்று. இவ்வேள்வி முறையை விவரித்து விளக்கிக் கூறுவதற்கென்றே தனி நூல்கள் தோன்றின. இவை 'பிராமணங்கள்' எனப் பெயர் பெறுவன.

இருக்கு வேதத்தில் பல தெய்வங்கள் கூறப்பட்டிருக்கின்றன அல்லவா? எனவே, இங்கு 'தெய்வங்கள் பல என்னும் கொள்கை' காணப்படுகின்றதா? என ஐயுறுதல் இயல்பு.

இருக்குவேத தெய்வங்களின் நிலையையும் இத்தெய்வங்களைப் போற்றிக் கூறும்பொழுது சுட்டப்படும் அவர்களின் இயல்பு களையும், குணங்களையும் உற்று நோக்கினுல் ஓருண்மை தெளி வாகின்றது. ஒரு தெய்வத்திற் சிறப்பாக எடுத்துக் கூறும் அதே பண்புகள் வேறு தெய்வத்திற்கும் உரியனவாகக் கூறப் படுகின்றன. வழிபடுபவன் ஒரே தெய்வக் கொள்கையின னல்லன். இருக்கு வேதம் கூறும் தெய்வங்கள் எல்லாவற்றை யும் வழிபடும் மரபினன் எனினும், வழிபடும் வேளையில் தாம் வழிபடுந் தெய்வத்தை உயர்த்திப் போற்றி, உயரிய பண்புகளை அத்தெய்வத்தின் மேலேற்றி, ஒப்புயர்வற்ற ஒரே தெய்வமோ என நினைக்கும் வண்ணம் உயர்நிலைக்கு உயர்த்தி அத்தெய்வத்திடம் தான் விரும்பும் பொருள்களை இரந்து வேண்டுகின்ருன். இவனே வேறு ஒரு தருணத்தில் இன்னெரு தெய்வத்தை வழிபடும் வேளையில் அக்கால நிலைக்கும் சூழ லுக்குமேற்ப அதே உயரிய பண்புகளை இப்பொழுது வழி படும் மற்றத் தெய்வத்தின் மீது ஏற்றி, அதை உயர்த்தி வழி படுகின்ருன். வழிபடுவோன் தெய்வமொன்றையே தன் தனித் தெய்வமாகக் கொண்டு எப்பொழுதும் வழிபடாது, தன் விருப்பதிற்கேற்றவாறு வழிபடும் வேளையில், தன் எண்ணத்தை நிறைவேற்றவல்ல தெய்வம் எனத் தான் கரு தும் தெய்வத்துக்கே உயரிய குணங்களைக் கற்பித்துப் போற்றி வழிபடுதலையே தன் வழக்காகக் கொண்டான். இதே உயரிய குணங்களை வேறு தருணத்தில், வேறு தெய்வத்தைப் பெரி தும் வேண்டி வழிபடும்போது அத் தெய்வத்திற்குக் கற்பித் தலையும் காணலாம். இவ்வழிபாட்டில் அவனைப் பொறுத்த மட்டில் அவன் தேர்ந்தெடுச்குத் தெய்வமே தனிப்பெருந் தெய்வமாகத் தோற்றமளிக்கின்றது. இதில் காலத்துக்குக் காலம் வேறுபட்டு விளங்கும் இயல்பினதானதாய்த் தோற்ற மளிக்கும் ஒரே கடவுட் கொள்கையைக் காண்கிருேம். நேரத்துக்கு நேரம் மாறிக்கொண்டிருக்கும் இவ்வொரே கட வுட் கொள்கையைச் சுட்டி விளக்கியவர் மாக்ஸ்மூலராவர். முதலில் எழுந்த இக்கொள்கை நாளடைவில், ஒரே கடவுட் கொள்கை தோன்ற வழிவகுத்தது. இதுவும் நாளடைவில், "பொருள்கள் பலவாகக் காணப்படினும், எல்லாம் ஒரே



பொருளின் வேறு தோற்றங்கள்" என்றுணர்த்தும் ஒரே பொருட் கொள்கை தோன்ற அடிகோலிற்று.

இருக்கு வேதத்தின் பிற்பகுதியான பத்தாம் பண்டலத் தில் தத்துவக் கருத்துக்கள் நிரம்பியுள்ள பாடல்களைக் காண் கின்ருேம். இவை தொடக்க நிலையிலேயே காணப்படுகின் றன. இவற்றின் விரிவாக அமைந்தது இந்திய தத்துவ சாத்திரம்.

அறிவு வளர்வதற்கு அறிதல் காரணம். ஒன்றைப் பற்றி அறிவதாயின் அதைப்பற்றிப் பல கேள்விகளை எழுப்பி அவற் றிற்கு விடை கூற முயல்வதின்றியமையாதது. ஒன்றை உள்ள வாறு கண்ணாரக் கண்டும் இது இதுதானு அன்றி வெறென்ரு எனவெல்லாம் கேள்விகளை எழுப்பத் தொடங்கினுல்தான் அதைப்பற்றிய அறிவு விருத்தியடையும். அது, இதுதான் என்ற தெளிவும் உரியவாறு ஏற்படும். எனவே இவ்வாறு கேள்வி கேட்கும் நிலையில் சந்தேகம் தோன்றுதல் இயற்கை இவ்விதமான சந்தேக மனப்பான்மை அறிவை வளர்க்க உண்மை நிலையை அறிய-அதாவது தத்துவஞானம் தோன்ற அடிகோலுவது என்பர் தத்துவஞானிகள். இங்ஙனம் சந் தேகம் நிரம்பிய சூழ்நிலையில் தத்துவ ஞானம் வளரத் தொடங்கும் முறையை எடுத்துக் கூறுவது போலச் சில பாடல்களமைந்து காணப்படுகின்றன.

இந்திய தத்துவ ஞானத்தின் அடிப்படைக் கருத்துக்கள் இங்கு தொடக்க நிலையிலேயே காணப்படுகின்றன. எனவே விரிவான விளக்கங்கள் இங்கு கிடையா என்ற உண்மையை மனதிற் தெளிவாகப் பதித்துக் கொண்டு தொடர்ந்து கவ னிப்போம். இந்திரன் மீது பாடப்பட்டுள்ள பாடலொன்றில் கூறப்பட்டிருப்பதை ஆராய்ந்து நோக்கில், இந்திரன் பெரு மையைச் சந்தேகித்துக் குரல் எழுப்பப்பட்டிருக்கின்றது என் பதை அறியலாம். இதே போன்ற சந்தேக மனப்பான்மை வேறொரு பாடலிலும் இந்திரனைப் பற்றியே தோன்றி நிற் பதைக் காணலாம். இருக்கு வேதத்தின் ஒப்பற்ற பெருந்

தெய்வமான இந்திரனையே சந்தேகிக்கத் தொடங்கியவர்களுக்கு வேறு தெய்வங்கள் மீதும் இதே உணர்ச்சி தோன்றல் இயற்கையே. படைத்தற் தெய்வமாகவும் காக்குந் தெய்வமாகவும் கொள்ளப்படும் பிரஜாபதி மீது பாடிய பாடலின் ஒவ்வொரு பாட்டினிறுதியிலும் "எந்தத் தெய்வத்திற்கு அவி சொரிவேன்?" என்றுஏக்கம் மேலிட்டுக் கேட்கும் கேள்வி திரும்பத் திரும்ப எழுப்பப்படும் பொழுது இதே சந்தேக உணர்ச்சியே எதிரொலிக்கின்றது. நாசதீய சூக்தத்தில் இவ்வுணர்ச்சி உச்ச வரம்பை மீறுகின்றது. "உலகின் தொடக்க நிலை எத்தகையது? அக்காலத்தில் ஏதாவது இருந்ததா அல்லது ஒன்றுமே இருக்கவில்லையா? ஆகாயம், இடைவெளி என்னும் இவை தானும் காணப்பட்டனவா? எல்லாவற்றையும் மூடிப் பரந்து நின்றது யாது? எது பாதுகாப்பாயமைந்தது? அளவிட முடியாதவாறு ஆழமான நீர்தான் முதலில் எங்கணுங் காணப்பட்டதா? இறப்பு நிகழ்ந்ததா? இறப்பிறந்த உயிர் ஏதாவது அப்பொழுது இருந்ததா? இரவு, பகல் என்னும் பாகுபாடு அக்காலத்தில் இருக்கவில்லைப் போலும். தன்னந்தனியே தனிப் பொருளாய் விளங்கிய அவ்வொன்று காற்றில்லாத அந்நிலையில் தானாகவே உயிர்ப்பெய்தியது." இப்பாடலைப் பாடிய உண்மையறிவாளி உலகம் எப்படி உருவாயிற்று என்னுங் கேள்விக்குப் பயந்துகொண்டே விடையிறுக்கின்றார். "இருளிற் பொதிந்துள்ள கடுமிருள் எங்கும் வியாபித்த நிலை தொடக்கத்திலிருந்தது; மிகவும் ஆழமாக நீர் எங்கும் பெருகிக் காணப்பட்டது. தவத்தின் பெருமையின் விளைவாக ஒப்பற்ற தனிப்பொருள் தோற்றம் பெற்றது. இது அறிவுமயமானது. மனதில் முதற்றோன்றிய பொருளிதுவே." இப்படியெல்லாங் கூறிக்கொண்டே வரும் அறிஞன் மனத்தில் தத்துவ விசாரணையை நன்கு தூண்டும் வகையில் சந்தேகங்கள் மேலும் தோன்றி வளர்கின்றன. இதைத் தொடர்ந்து விளக்கம் கூற இயலாதவாறு தெளிவற்ற நிலையே ஏற்படுகின்றது. "யார் இதை யறிவார்? யாரிங்கே இதை எடுத்துக்கூற வல்லவர்? படைத்தல் எப்பொழுது நிகழ்ந்தது? படைத்தல் நிகழ்ந்த பின்னரோ தேவர்கள்தோன்றினார்கள்? எங்கு இப்படைத்தல் நிகழ்ந்தது?



யாருக்குத் தெரியும்? படைத்தல் நிகழ்ந்ததா? இன்றேல் நிகழவில்லையா? இவ்வுலகம் முழுவதையும் மேலே விண்ணினின்று கீழ்நோக்கும் அவன் ஒருவன் இதையறியக் கூடும். சில வேளை அவனும் தான் இதை யறியானோ? யார் கண்டார்?" இதுதான் 'நாசதீய சூக்தம்' கூறும் விளக்கம்.

தத்துவக் கருத்துக்கள் விரவியுள்ள பாடல்களில் பெரும்பாலானவற்றுள் பிராஜபதி என்னும் படைத்தற்றெய்வம் பற்றிய குறிப்புக்கள் உண்டு. 'பிரம்மணஸ்பதி, பிருகஸ்பதி, விஸ்வகர்மா' எனப் பல பெயர் இத்தெய்வத்திற்குண்டு. நாசதீய சூக்தத்தில் படைப்பு நிகழ்ந்ததா என் ஐயந் தோன்றியதைக் கண்டோம். அங்கே படைத்தலுடன் தொடர்புபடுத்தப்பட்ட பொருள் ஒன்று எனவும் தெளிவாக்கப்பட்டது. இதிலிருந்து ஒரு பொருட் கொள்கையும், ஒன்றின் விரிவே நம் கண்முன் தோன்றுவன எல்லாம் என்ற கருத்து உருப்பெற்றன. இயற்கையிற் காணப்படும் பல பொருள்கள் தெய்வங்களெனக் கூறப்பட்டுள்ள வெனினும், இவை ஒன்றேயான ஒரு பொருளின் விரிந்த நிலையன்றி வேறொன்றில்லை என்பதை உணர்த்தும் பாடலொன்று இருக்கு வேதத்தில் இடம்பெற்றுள்ளது.

இந்திரன், மித்திரன், வருணன், அக்கினி என்றெல்லாம் மக்கள் கூறுவர். தெய்விகப் பறவையான கருத்மானையும் குறிப்பிடுவர். அக்கினி, யமன், மாதரிஸ்வன் எனவும் பெயர்களை வழங்குவர். இவ்வாறு ஒன்றையே கவிகள் பல பெயர்களைக் கூறி அழைப்பர்.

இவ்வாறு பின்தோன்றி ஒப்புயர்வற்றவாறு விரிந்து வளர்ந்த தத்துவ நூல்களுக்கடிப்படையான உயர் கருத்துக்கள் இப்பாடல்களில் உருவாகி, உபநிடதங்களில் வளர்ச்சியெய்தி நிலைபெறுகின்றன.

இதுவரை இருக்கு வேத சமயம் எத்தகையதென்பதை ஓரளவிற்குக் கூறினோம். இனி இருக்கு வேதங்களை விளக்கும்

முறையைப் பற்றிச் சிறிது கவனிப்போம். வேதங்கள் மறையெனப்படுவன. இவை கூறுங் கருத்து மறை பொருளாகவே அநாதி காலமாக இருந்து வருகின்றது. வேதங்களின் கருத்தை யறிய முயலுதல் அநாவசியம் என்பது ஆன்றோர் கருத்து. வேதங்கள் ஓதவேண்டியவை. அதன் கருத்தை யறிய முனைதல் வேண்டப்படாததொன்று என்னுங் கொள்கையுடன்தான் வேதங் கற்போர் இன்றுங்கூட வேதங் கற்பதற்கெனத் தாம் செலவிட விரும்பும் பன்னிரண்டு வருடங்கள் முழுவதையும் வேதங்களை ஓதும் முறையைப் பயில்தலிலேயே தம்மை ஈடுபடுத்தி வருகின்றனர்.

வேதங்கள் கூறும் கருத்தை அறியப் பெரிதும் முயன்றவர்கள் மேனாட்டவர்கள். இவர்களுட் தலைசிறந்தவர்கள் ஜெர்மனியரே. உலகில் விமரிசகர்கள் பலரின் முயற்சியால் வேதங்களின் மொழியெர்ப்புக்கள் பல மொழிகளில் தமிழிலும்கூட இதுவரை வெளிவந்துள்ளன. உயர்ந்த ஜெர்மனிய விமரிசகர்கள் கூறியதை இச்சந்தர்ப்பத்தில் நம் ஞாபகத்தில் பதிய வைத்தல்வேண்டும். மொழிபெயர்ப்பாளர்கள் தாமுருவாக்கும் நூலில் வேதங்கள் எல்லாவற்றையுமே மொழி பெயர்த்து வைத்தல் வேண்டும் என்ற மனப்பான்மை களையத் தக்கது. வேதங்களில் தெளிவாக விளங்காத பகுதிகள் எவ்வளவோ இருக்கின்றன என்பதே இவர்கள் விடுக்கும் எச்சரிக்கை. இதிற் பெரும் உண்மை காணப்படுகின்றது. மேலும் கவனிப்போம். வேதங்களை விளக்கும் முறை இரு வகையானது. இந்தியாவிலேயே தோன்றி இந்தியரால் வகுக்கப்பட்டது ஒன்று. மற்றையது மேனாட்டு விமரிசகர்களுள் ஒரு சிலரால் தனியே தோற்றுவிக்கப்பட்டது. இவர்கள் இந்தியர் கூறிய விளக்கங்களை ஏற்றுக்கொள்ள மறுத்தவர்கள். மேனாட்டவர்கள் வேதங் கூறும் கருத்துக்களை விளங்க வைப்பதற்குப் பன்னெடுங் காலத்திற்கு முன்னரே வேத விசாரணை இந்தியாவில் நிகழ்ந்து வந்தது. 'யாஸ்கர்' என்னு மறிஞரே இதற்கு வழிகாட்டி. "வேதங்களை விசாரிப்பதனால் பயனெதுவுமில்லை. இவை கருத்துயர்ச்சியற்றவை. முன்னுக்குப் பின் முரணான கூற்றுக்களைக் கொண்டமைந்தவை."



என யாரோ ஒருவர் ஏற்கனவே கூறியதைக் கண்டிக்கத் தொடங்கி யாஸ்கர் இருக்கு வேதத்திற் காணப்படும் அரிய சொற்களை விளக்கும் நிகண்டாகிய 'நிருக்தத்தை' இயற்றினார். "அதோ கம்பம் இருக்கிறதே. இது கண்ணில்லாத குருடனுக்குத் தெரிகின்றதில்லை. அப்படியாயின் குற்றம் கம்பத்தினுடையதா?" என உவமை மூலம் தம்கொள்கையை ஆழப் பதியும் வண்ணம் விளக்கி வேதங்களின் அரும்பகுதிகளுக்கு விளக்கம் கூற முற்பட்டார். மிகப் பிற்காலத்தில் சாயணர் இவ்வழியைப் பின் பற்றி இருக்குவேதம் முழுவதற்குமே உரை வகுத்தனர். மேனாட்டு விமரிசகருள் ஒருசிலர் இவ்வுரையை பயனற்றதாக ஒதுக்கி விட்டார்கள். பல நூற்றாண்டுகளுக்கு முன்னெழுந்த நூலிற்கு நெடுங்காலத்திற்குப் பின் தோன்றிய சாயணர் நூலெழுந்த காலத்து நாகரிகம், பழக்க வழக்கங்கள் முதலியனவற்றைப் பற்றி ஒன்றுமேயறியாது எப்படி உரை எழுத வல்லார்? என்பது இவர்கள் வாதம். "நாங்கள் சாயணர் காலத்துக்கு இன்னும் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் வசித்தாலும் சாயணருக்குத் தெரிந்திராத இலத்தின், கிரேக்கம், ஜர்மனியம், பழைய பாரசீகம் (அவெஸ்தா) முதலிய மொழிகளின் அறிவைத் துணைக் கொண்டு தோன்றியதும், ஒப்பு முறையிலமைந்ததுமான இலக்கண அறிவையும், ஒப்பு நோக்கிவிரிக்கப்பட்டுள்ள சமய அறிவையும் பாகுபாடின்றி காணப்படும் நடுநிலையினையும், விமரிசகருக்கு வேண்டப்படும் பகுத்துணர்வு செறிந்த நுண்ணறிவையும் துணைக் கொண்டு இருக்கு வேத விளக்கம் இன்னும் சிறந்த முறையில் யாமே வல்லோம். வேறு யார் வல்லர்?" என அறைகூவித் தாமே தனித்து உரை வகுக்கவும் தொடங்கினர். இவர்களுள் ரொத், கிராஸ்மன் என்னுமிருவரும் முக்கியமானவர்கள். இவ்விரு வழியிலும் சென்றுவிடாது இரு வழிகளிலும் காணப்படும் சிறந்த அம்சங்களை கைக்கொண்டு நடு வழி நின்று உரை வகுத்தவர் 'அல்பிரெட் லுட்விக்' என்பவரும் 'பிஷல்' என்பவருமாம். மாக்ஸ்மூலர் என்னும் அறிஞரும் இதே கொள்கையினர். இவர்கள்கடைப்பிடித்த நடு வழியையே அறிஞருலகம் இன்று பெரும் பாலும் ஏற்றுக் கொண்டிருக்கிறது.

இது நிற்க. இனி வேத காலத்தைப்பற்றிச் சிறிது நோக்குவோம். வேதங்கள் மக்களாலாக்கப்படாதவை என்பதை "அபௌருஷேய" என்னும் அடைமொழி குறிக்கின்றது. வேதங்கள் தோற்றம், அழிவு இரண்டுமற்றவை. முக்காலத்துக்கும் உண்மையானவை. இவை தெய்விக நூல்கள் எனவே ஏனைய நூல்களுக்குப் போல் இவற்றிற்கும் கால வெல்லை கூறி வரைவு காட்டல் பொருந்தாது என்பது பழைமையைப் போற்றிப் பேணும் ஆஸ்திகர் மனத்தில் ஆழப் பதிந்த கருத்து.

வேதங்களை இயற்றியோர் இருஷிகள் என்னும் கருத்து வேத காலத்திலேயே நிலவிற்று. பிராமணங்கள் தாம் இதை முதன் முதலில் அங்கங்கே கூறுகின்றன. பின்னெழுந்த அநுக்கிரமணியிலும் இவ்விருஷிகள் பற்றிக் குறிப்புக்கள் உள்ளன. உபநிடதங்களில் கூறப்பட்டுள்ள உயரிய கருத்துக்களைப் பெரும் அறிவாளிகளும், இருஷிகளும் கூறியுள்ளதாக அறிகின்றோம். இப்படியாக, சங்கிதை, பிராணம், உபநிடதம் ஆகிய வேதங்களின் பல பிரிவுகளிலும் இருஷிகள் கூறப்படும்பொழுது எப்படி வேதம் அபௌருஷேயம் எனக் கூறலாம் என ஐயம் நிகழ்தல் இயற்கையே. இருஷிகள் இவற்றைக் கூறியதாகக் கொள்ளினும் இவை அபௌருஷேயமான நூல்களே. வேதங்கள் கூறுவதெல்லாம் இவர்களது கருத்தல்ல. இவை இவர்களது ஆக்கங்களல்ல. தெய்வத் திருவருளால், தெய்விகத் தூண்டுதலால் இவர்கள் உள்ளத்தில் இக்கருத்துக்கள் தோன்றின. இக் கருத்துக்கள் சொல்லுருவம் பெற்று பாட்டுக்களாயமைந்ததும் தெய்விக நிகழ்ச்சியே. இவர்கள் கேவலம் துணைக் கருவியாக இருந்தார்களேயன்றி, தாமாகவே இவற்றை ஆக்கவில்லை. எனவே வேத வாக்கியங்கள் தெய்விகமானவை. இவை மக்களாலாக்கப்படாதவை யல்லவா! தெய்விகமானவை யாதலால் இவை அபௌருஷேயம் என்னும் அடை மொழிக்குத் தகுதி வாய்ந்தவை.

வேதங்கள் எக்காலத்தில் எழுந்தன என்ற கேள்வியை எழுப்பி விடை கூறவந்தவர்கள் மேனுட்டவர்களே. இவர்கள்



எவ்வாறு வேதகால ஆராய்ச்சி நிகழ்த்தினர் என்பதை நோக்குவோம். இலக்கிய வரலாற்று நூலாசிரியரான வீபர் என்பவர் முதன் முதலில் இம்முயற்சியிலீடுபட்டார். காலத்தை ஓரளவிற்கு ஊகித்துப் பெருமளவிலே நிர்ணயிக்க கருதியே இவர் இருக்கு வேத கால நிர்ணயத்தில் ஈடுபட்டார். வேதங்களின் காலத்தைக் கணக்கிட முயலுதல் வீணே என்னும் இவர் கருத்து வேத காலத்தை வரையறுத்து நிறுவுதல் எவ்வளவு கஷ்டமானது என்பதைத் தெளிவாக்குகின்றது. ஏற்கனவே இந் நூல்களிற் சுட்டிக் காட்டியவாறு வேதங்கள் பழைய நூல்கள் யாவற்றினும் மிகப் பழையவை என்ற உண்மை எல்லோராலும் ஒரே முடிவாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. கங்கை ஓடும் பகுதிவரை விரிந்து பரந்து விளங்கிய வேத நாகரிகத்தைக் கூறும் இருக்குவேதப் பாடல்களுக்கும் தெற்கே பரவிச் சென்று கொண்டிருக்கக் காணப்படும் நாகரிகத்தை விளக்கும் இதிகாச புராணங்களுக்கும் இடையில் எத்துணைக் காலம் ஆகியிருக்கும்! இவ்வுண்மையைக் கருத்தில் நன்கு பதிய வைத்துக் கொண்டே வேத காலத்தை நிறுவும் ஆராய்ச்சியில் ஈடுபடுதல் அவசியம்.

வேதகால விசாரணையில் ஆழ்ந்து ஈடுபட்டுக் காலத்தை நிறுவுவதற்கு முதன் முதலாக முன் வந்தவர் மக்ஸ்முலர். இன்று கூட சரித்திர வரலாற்று நூலாசிரியர்கள் இவர் இத்துறையில் கையாண்ட வழியை மெச்சிப் போற்றுகின்றனர். வேதங்களின் உட்பகுதிகள் சங்கிதை, பிராமணம், உபநிடதம் என்பன. இவற்றை ஒப்பிட்டு நோக்கினுல் கருத்து வளர்ச்சியாலும் மொழியமைப்பினுலும் ஒன்றிலிருந்து மற்றது வேறு பட்டிருப்பது தெளிவாகின்றது. இவ்விதம் வேறுபடும் இருபகுதிகளை எடுத்துக் கொண்டு இவற்றிற்கிடையில் இருநூறு வருடகால இடைவெளி இருந்திருக்கலாம் என ஊகத்தினுல் கணக்கிட்டு மாக்ஸ்முலர் கால நிர்ணயம் செய்யத் தொடங்கினுர். இப்படிக் கணக்கிடும் பொழுது, சங்கிதைக்கும் பிராமணங்களுக்கும் இடையே இருநூறு வருஷங்களும் பிராமணங்களுக்கும் உபநிடதங்களுக்கு மிடையே இருநூறு வருஷங்களும் இருந்திருக்கலாமென ஆகின்றது.

சங்கிதைக்கும் அதன் வளர்ச்சி கருதி அதன் தொடக்க நிலையைக் கருதிக் கொண்டு இவ்வாறு இருநூறு வருஷங்களைக் கணக்கிடின், வேதங்கள் சங்கிதையாகத் தோன்றி உபநிடதங்களாக முடியும் வரை—அதாவது, வேத இலக்கியம் தோன்றி வளர்ந்து அதன் முழு உருவத்தையும் பெறுவதற்கும்-அறுநூறு வருடங்கள் ஆகி இருக்கலாம். இதுவே வேத காலத்தைத் தாம் நிர்ணயிக்கும் முறையை விளக்கும் மக்ஸ்மூலரின் ஆராய்ச்சியின் முதற்றொடக்கம். இது நிற்க. புத்தருடைய காலம் ஒன்றே இந்திய சரித்திரத்தில் சரிவர நிறுவப்பட்ட மிகப் பழைய காலம். இவருடைய காலம் ஏறத்தாழ கி. மு. 500 என்பது எல்லோரும் ஒரே முகமாக ஏற்றுக் கொண்ட உண்மை. எனவே திடமாகத் தெரிந்த கி. மு. 500 ஐ அடிப்படையாக வைத்துக் கொண்டு இதன் உதவியுடன் வேத காலத்தை அவர் காலத்திலிருந்து பின்நோக்கி ஆராய்கின்றார் மாக்ஸ்மூலர். புத்தர் கூறும் போதனைகளில் இருந்து அவர் காலத்திலேயே வேத இலக்கியம் உருப்பெற்றுவிட்டது என்பது தெரிகின்றது. வேத இலக்கியத்தைப்பற்றிய குறிப்புக்கள் அடிக்கடி இங்கு இருக்கின்றன. எனவே இவர் காலத்திற்கு முன், அதாவது 600 வருஷங்களுக்கு முன் இருக்கு வேதம் தோன்றியிருத்தல் வேண்டும் எனத் தெரிகின்றது. ஆகவே மாக்ஸ்மூலர் கி. மு. 1200—100 வரை இருக்கு வேதம் தோன்றியிருக்கலாம் என ஊகத்தால் நிறுவி இருக்கு வேத காலத்தை மட்டிட்டுள்ளார்.

வேதத்தின் ஒவ்வொரு பகுதியும் உருவாக இருநூறு வருடங்கள் ஆயின என்னும் மாக்ஸ்மூலரின்கொள்கை நன்கு பரிசீலனை செய்யப்பட வேண்டியது. காரணம் எதுவும் காட்டாமல் தன் மனதில் எழுந்தவாறு இருநூறு வருடங்களே இருவகை இலக்கியத்தினிடை இருந்த இடைவெளி எனக் கொள்ளுதல் எல்லோருக்கும் ஏற்புடைத்தன்று. சங்கிதை பிராமணம் ஆகிய இருபகுதிகளையும் எடுத்து ஒப்பிட்டு நோக்குபவர்கள் சங்கிதையின் நின்றும் பெரிதும் வேறுபட்டுத் தனக்கென உரிய பண்புகளைக் கொண்டு விளங்கும் பிராமணங்கள் இவ்வாறு தோன்றி விளங்குவதற்கு இருநூறு



ஆண்டுகள் எம்மாத்திரம்! இவ்வகையே ஏனைய பகுதிகளுக்கு இடையில் இருந்ததாகக் கூறப்படும் இருநூறு வருடங்களைப் பற்றியும் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். இதிலிருந்து இருக்கு வேத காலம் கி. மு. 1200—1000 என்று மாக்ஸ் மூலர் கொண்ட முடிபு எல்லோரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய முடிபன்று என்பது தெளிவாகின்றது. எனினும் மாக்ஸ்மூலர் கோலிய கால எல்லை ஒருண்மையை மட்டும் வலியுறுத்தும். அதாவது, இருக்கு வேத கால எல்லை கி. மு. 1200 இதற்குப் பிந்தி இவ்வேதம் தோன்றியது எனக் கொள்ளுதல் பொருந்தவே பொருந்தாது என்பதாம். இருக்கு வேதத்தை மிகவும் பிந்திய நூலாகக் கொள்ளும் பல ஆராய்ச்சியாளர்களின் முடிவு இதனுல் நிராகரிக்கப்பட்டது. மாக்ஸ்மூலர் இவ்வாறு காலநிர்ணயம் செய்த பொழுதும் "வேத மந்திரங்கள் கி. மு. 1000 வரையிலோ, அன்றி கி. மு. 1500க்கு முன் பின்னே, இல்லாவிடில் கி. மு. 2000 அல்லது கி. மு. 3000 அளவிலோ, இயற்றப்பட்டவை என வரையிட்டுக் கூறுதல் ஒரு பொழுதும் ஒருவருக்கும் முடியாது." என்று கூறுவதிலிருந்து காலநிர்ணயத்தில் தமக்கு மட்டுமின்றிஇத்துறையில் ஈடுபடுவரெவர்க்குமே இக்கால வரையறையில் ஏற்படக் கூடிய இடர்ப்பாடுகளை இவர் நன்குணர்ந்தார் எனத் தெரிகின்றது. மாக்ஸ்மூலர் நிறுவியது முதல், இருக்கு வேதகாலம் கி. மு. 1200—1000 என்னுங் கருத்து எல்லாராலும் பெரும்பாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதை இவ்வாறு ஏற்றுக்கொள்பவர்கள் இக்காலத்திற்குள் இருக்கு வேதம் தோன்றியதெனக் கொள்வதில்லை. இதற்குப் பின் இவ்வேதம் தோன்றியிருக்க முடியாது என்பதுதான் பேருண்மை. 'விட்னி' என்னும் அறிஞரும் இக்கருத்தையே தமக்கு உடன்பாடாகக் கொண்டு விளக்கிக் கூறியுள்ளார். 'ஷிராடர்' போன்றமாபெரும் மேதைகளும் மிகவும் தயங்கிக்கொண்டே இக்கால எல்லையைப் பெரிதும் வேறுபடுத்தி, இருக்குவேத காலம் இன்னும் பழைய காலத்ததாக இருத்தல் வேண்டும் எனக்கூறி, இக்காலம் கி. மு. 1500 அல்லது கி. மு. 2000 என முடிவு கொண்டனர்.

நட்சத்திரங்களைப் பற்றி வேதங்கள் கூறும் நிலைகளை ஆதாரமாகக் கொண்டு வேதகாலத்தை நிர்ணயிக்கும் ஒரு வழியை இரு பெரும் அறிஞர்கள் கையாண்டனர். வேதத்தில் யாகம் வேட்கவேண்டும் நாட்களைக் குறிப்பிடும் பொழுது, சந்திரனுடன் இன்ன நட்சத்திரம் சேரும் வேளையில் இன்ன வேள்வி ஆற்றல் வேண்டும் எனக் குறிப்பிட்டிருக்கக் காண்கிறோம். இவ்வகைக் குறிப்புக்களை ஆதாரமாகக் கொண்டு 1893-ம் ஆண்டில் 'ஜகோபி' என்னும் ஜர்மனிய அறிஞரும் 'பாலகங்காதர திலகர்' என்னும் மராட்டிய மேதையும் தனித் தனியே வேத காலத்தை நிர்ணயிக்க விழைந்தனர். வேதகாலம் கி. மு. 6000 என்று திலகரும் கி. மு. 4500 என ஜகோபியும் வெவ்வேறாக முடிபுக்கு வந்தனர். இவர்கள் ஆதாரமாகக் கொண்ட நட்சத்திரங்களைக் கூறும் பகுதிகள் கருத்துத் தெளிவற்றவை என்றும், இக்கருத்துகள் தெளிவான பின்னரே இதை அடிப்படையாகக் கொண்டு கணக்கிடுதல் பொருத்தமானது என்றும் கூறிப் பெரும்பாலானவர்கள் இம்முடிபை ஏற்றுக்கொள்ளாது மறுத்துள்ளார்கள்.

திலகரும் ஜகோபியும் தங்கொள்கைகளைச் சரிவர வலியுறுத்தி அறிஞருலகம் ஏற்றுக்கொள்ளக்கூடியவாறு நிறுவாத பொழுதும், இவை ஆராய்ச்சியாளரின் சிந்தனையைத் தூண்டி வேதகாலம் மாக்ஸ்மூலர் குறிப்பிடுங் காலத்தைக் காட்டிலும் முந்தியதாக இருக்கலாமா என ஆராய்வதற்கு ஊக்கம் அளித்தது. இதுகாறும் கூறியவற்றின் தெளிவு, வேதகாலம் கி. மு. 12000க்குப் பிந்தியது என்பதை மறுப்பதற்கு ஆதாரம் எதுவும் இல்லை என்பதும், இது கி. மு. 1500 கி. மு. 2000 கி. மு. 3000 அல்லது கி. மு. 4000 ஆகவும் இருந்திருக்கலாம் என்பதுமாம். இற்றைய நிலையில் நாம் அறிந்துள்ள அரசியல் சரித்திரம், இலக்கிய சரித்திரம், சமய சரித்திரம், மொழி வளர்ச்சி கூறும் சரித்திரம் என்பவற்றை எல்லாம் கருத்திற் கொண்டு ஆராய்ந்து பார்த்ததால், இருக்கு வேதகாலம் கி. மு. 1500 கி. மு. 1200 என்று இன்று பெரும்பாலோர் கொள்ளும் முடிவுகூட வலிமையற்றது



என்பது தேற்றம். இக்கருத்தைப் 'பீலர்' என்னும் அறிஞரும் தெளிவாக விளக்கியுள்ளார்.

மேலும் இதைத் தொடர்ந்து புறச்சான்றுகள் சிலவற்றையும் கவனிப்போம். இருக்கு வேத நாகரிகம் மிகவும் தெற்கே பரவிய காலம் கி. மு. 300க்கு முன்னர் என்பது கல்வெட்டுக்கள் மூலம் தெளிவாக்கப்பட்டுள்ளது. இதைவிடத் தென்னிந்தியாவிலே தோன்றிய பௌத்தாயனர், ஆபஸ்தம்பர் என்னும் இருவரது சூத்திரங்கள் கி. மு. ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகளில் உருவாகி இருக்கலாம் எனக் கருதப்படுகின்றது. இதை ஆதாரமாகக் கொண்டு மேலும் ஆராயும் பொழுது, முதலில் இருக்கு வேதகாலம் ஏறத்தாழ கி. மு. 1500 ஆக இருந்திருக்கலாம் எனக் கொள்ளுவோம். இவ்வாறு கொண்டால் ஏற்கனவே குறிப்பிட்ட எட்டாம் நூற்றாண்டிற்கும் கி. மு. 1500க்குமிடையில் ஏழு நூற்றாண்டுகளே காணப்படுவன. மிகவும் வடக்கே இருந்து மிகவும் தெற்குவரை வேத நாகரிகம் பரவுவதற்கு எழுநூறு ஆண்டுகள் மிகக் குறுகிய காலப் பரப்பாக அன்றோ காணப்படுவன. எனினும் இதை மறுத்து "எழுநூறு ஆண்டுகள் பல்வேறு நிகழ்ச்சிகள் நன்கு நிகழ்வதற்கு முற்றிலும் போதிய காலம். அமெரிக்காவைப் பாருங்கள். வட அமெரிக்காவுக்கும் தென் அமெரிக்காவுக்கும் உள்ள இடைவெளி பெரிது. எனினும் இங்கு நானூறு ஆண்டுகளுக்குள்ளேயே பெரும் மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன. அல்லவா? இதிலிருந்து எழுநூறு ஆண்டுகள் குறுகிய காலம் எனக் கொள்வது முறையல்ல என்பது தெரிகின்றதே" என 'ஒல்டின் பேர்க்' எடுத்துக்கூறியுள்ளார். 'விண்டர்னிட்ஸ்' இதை மறுத்து இவ்விதம் ஒப்பிடுவதில் இவர் இழைத்த தவறைச் சுட்டிக்காட்டியுள்ளார். நானூறு வருட எல்லைக்குள் அமெரிக்கர் தம்முள் தொடர்பு பூண்டு முன்னேற்றம் பெற்ற நாகரிகநிலை, ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன் இந்தியாவில் மாற்றம் விளைவித்துப் பரவிச் சென்ற நாகரிக நிலையின் நின்றும் வேறானது என்று கூறியும், சங்கிதை, பிராமணம், ஆரணியகம், உபநிடதம் என்று வெவ்வேறு பெயர்கள் பெற்றுத் தனித்தனி இலக்கியங்

களாய்த் தமக்குள் வேறுபட்ட மொழியமைப்பைப் பெற்று விளங்க எத்துணைக் காலம் ஆகியிருக்கும் என்னும் உண்மை யினை ஆராய்ந்து இவை குறிக்கும் கருத்துக்கு ஏற்றவாறு இவ்வாறு பரந்து காணப்படுவதற்குப் பன்னெடுங்காலமாகி இருக்கலாம் என்ற உண்மையினைச் சுட்டியும், வேத காலம் குறுகிய எழுநூறுண்டுகளுள் வரையறுக்கப்படத்தக்கதன்று என நிறுவியுள்ளார். புத்தர் காலமாகிய கி மு. 500 ஐ அடிப்படையாகக் கொண்டல்லவா! மாக்ஸ்மூலர் வேத காலத்தைக் கணிக்க முன் வந்தார். ஆனால் புத்தர் கூறிய நூல்களில் சூத்திரங்களும் காணப்படுகின்றன, என்பதை நினைவு கொள்ளத் தவறிவிட்டார். மேலும், புத்தருக்கு முன் ஜைனரும் இவர் கூறும் ஒரே கருத்தைக் கொண்டிருந்தனர். எனவே புத்தர் காலமாகிய கி. மு. 500ல் இருந்து கணக் கிடாது ஜினரின் காலமான கி. மு 750ல் இருந்தே கணக் கிடுவது முறை எனப் 'பீலர்' சுட்டிக் காட்டியுள்ளார்.

'ஹ்யூகோ விக்லர்' என்பவர் கண்டு பிடித்த கல்வெட்டு ஒன்றில் காணப்படும் விஷயங்கள் இவ்வாராய்ச்சியை மேலும் ஊக்குவித்தது. கி. மு. 1400 அளவில் ஹிட்டைட்ஸ் என்னும் இனத்தினருக்கும் 'மிட்டனி' என்னும் நாட்டு மன்னனுக்கும் இடையில் கைச்சாத்திடப்பட்ட உடன்படிக் கையில், இவ்விரு நாட்டினர் வணங்கிய தெய்வங்களும் கூறப்பட்டுள்ளன. பாபிலோனியதெய்வங்களையும்ஹிட்டைட் மக்களையும் தவிர மித்திரன், வருணன், இந்திரன், நாசத்யர் கள் ஆகியோரும் குறிப்பிடப்பட்டுள்ளார்கள். இக் கல்வெட்டைப் பற்றி அபிப்பிராயங்கள் பலஉண்டு எனினும் இதைத் துணைக் கொண்டு இத்தெய்வங்களைக் கூறும் வேத காலம் கி.மு 1500 வரை விளங்கியிருக்கலாம் எனச் சிலர்ற கருதுவர்.

''கி. மு 3000 வேதகாலம் என்ற கொள்கையும் முழுதும் ஏற்றுக்கொள்ளத்தக்கதொன்றன்று'' எனக் கூறும் 'ஹெர்டல் என்னும் அறிஞர், ''இருக்கு வேதம் கூறும் நாகரிகம் இந்தி யாவிற் பிறக்கவில்லை. இது இரானிலேயே தோன்றிவிட்டது;



இது 'சொறஸ்டரின் காலத்தைவிடப் பழையதன்று'' என்று சுட்டிக்காட்டியுள்ளார். இவர் கருத்து கி. மு. 1000 ஆண்டள வில் இருக்கு வேத மக்கள் ஆப்கானிஸ்தான் வரை வந்திருக்க லாம் என்பது. அங்ஙனமாயின் இதற்குப் பல காலத்துக்குப் பின்னரே இவர் இந்தியாவுக்குள் நுழைந்திருக்கலாம் என ஆகின்றது இருக்கு வேதத்தில் கூறப்படும் 'கானீதபிருது சிரவத்' என்போன் ஸ்கிதிய மன்னனான சுனீதஸ் என்பவனே. இவன் கி. மு. இரண்டாம் நூற்றுண்டில் வசித்தவன். இதை எல்லாம் துணைக்கொண்டு கணக்கிடின் இருக்கு வேதகாலம் கி. மு. இரண்டாம் நூற்றுண்டு எனக் கொள்ள நேரிடும். வேதங்களுக்கும் அவெஸ்தாவுக்கும் இடையில் காணப்படும் தொடர்பு வேதகாலம் பிந்தியது எனக் கருத வைக்கின்றது'' எனக் கூறி இருக்கு வேதத்தின் தொன்மையை மறுத்துள் ளார்.

இதுகாறும் வேதகாலம் பற்றிக் கூறிய குறிப்புக்களை யெல்லாம், பலவாறு நோக்கி ஆராய்ந்து, மேல் வரும் முக்கி யமான முடிபுகள் கொள்ளத்தக்கவை என 'விண்டர்னிட்ஸ்' கூறுவர். நட்சத்திரங்கள் பற்றிய குறிப்புக்களைப் பயன்படுத் திக் கால நிர்ணயம் செய்யும் முறை சிறந்ததே. ஆனால் இக் குறிப்புக்களைத்தெளிவாக விளங்கியபின்னரே இம்முறையைக் கையாளல் வேண்டும். இன்றேல் இம்முறை ஏற்றுக்கொள்ளப் படத் தக்கதன்று. இந்தியாவுக்கும், மேற்காசியாவுக்கும் இடையே கைச்சாத்திடப்பட்ட கல்வெட்டில் கி. மு. 2000 வரை இருக்கு வேத தெய்வங்கள் கூறப்படுவதும் நோக்கற் பாலது. இருக்கு வேதத்தின் மொழியமைப்பு, வேதம், சமஸ் கிருதம் ஆகியவற்றுக்கிடையே காணப்படும் வேறுபாடு, தொடர்புகள் ஆகியவற்றை யெல்லாம் கவனித்தும் கால நிர்ணயம் செய்யலாம். இது இருக்கு வேத காலத்தை அள வுக்கு மீறிப் பிற்காலத்திற்குக் கொண்டு போகாதவாறு நிறுவ வழி செய்யும். இலக்கிய வரலாற்றையே சான்றாக ஏற்று மாக்ஸ்மூலர் கூறியவழியே பார்ஸ்வ நாதர், மகாவீரர், புத்தர் முதலியவர்கள் வேதங்களைக் கூறுவதனால் இவர் காலத் துக்கு முந்தியவை இவை எனக் கொண்டு கி. மு. 1500—

1200க்கு முன் இருக்கு வேதகாலம் தொடங்கிற்று என முடிபு வரையலாம். இருந்தும் கி. மு. 2500—கி. மு. 2000 வரை பாடல்கள் இயற்றப்பட்டன எனக் கொள்ளுவதில் தவறில்லை. கி. மு. 750—கி. மு. 500 வரை உள்ள காலத்தில் உபநிஷதங்கள் இயற்றப்பட்டிருக்கலாம். மிகவும் அளவு மீறிய பழைய காலத்திலோ அன்றி, மிகவும் பிற்காலத்திலோ இவை இயற்றப்பட்டன எனக் கொள்ளாது மிகவும் அவதானித்து முடிவு கொள்ளுதல் சாலச் சிறந்தது என்பர் வின்டர்னிட்ஸ்.

• •



# IV
# அதர்வ வேதம்



இனி நான்காவது வேதமான 'அதர்வ வேதத்தின் இயல்பை நோக்குவோம். அதர்வ வேதம் என்று ஒரு வேதம் உளதா என்னுங் கேள்வி, வேத இலக்கியம் படிப்பவர்கள் மனதில் தோன்றுவது இயற்கையே. வடமொழியில் உள்ள இலக்கியங்களில், பெரும்பாலானவை மூன்று வேதங்களையே குறிப்பிடுகின்றன. வேதங்களைக் குறிக்கும் 'திரயீவித்யா' என்னுஞ் சொல், மூவகை அறிவு நூலாகிய வேதத்தைச் சுட்டும். இச் சொல் குறிப்பது இருக்கு, யசுர், சாமம் ஆகிய மூன்று வேதங்களையேயாம். அக்கால மக்கள் அதர்வ வேதத்தை ஒரு வேதமாகக் கருதவில்லை. நாளடைவிலேயே இது 'நான்காம்வேதம்' என்னும் நிலை எய்திற்று. இவ்வேதத்தில் மிகப் பழைய கருத்துக்கள் இருக்கின்றன. இக்கருத்துக்கள் ஏனைய வேதங்களிற் கூறப்பட்டிருக்கும் கருத்துக்களின் நின்றும் வேறானவை. உயர்நிலையில் நில்லாத கீழோர்க்கு உரியது இவ்வேதம் என்று ஒருகாலத்தில் பொது அபிப்பிராயம் மக்களிடையே நன்கு வேரூன்றி இருந்தது. இதனால் மக்கள் அதர்வ வேதத்தை ஒரு வேதமாக ஏற்றுக்கொள்ள மறுத்தனர். நாளடைவில் அதர்வ வேதம் சில மாற்றங்களை ஏற்று வேற்றுருப் பெற்றது. ஏனைய வேதங்களில் இருந்து சில பகுதிகளை இவ் வேதம் தன் உறுப்பாக ஏற்றது; அவை கூறும் கருத்துக்களை ஆங்காங்கு கூறத் தலைப்பட்டது. இவ்வாறு தொடக்க நிலையிலிருந்து வேறாகி, விரிந்துருவாகி அதர்வ வேதம் நாளடைவில் அறிஞர் மனதைக் கவர்ந்து நாலாம் வேதமாகத் தனியிடம் பெற்றுவிட்டது என நாம் ஊகத்தால் அறியக்கூடியதாயிருக்கின்றது. அதர்வ வேதத்தில் அமைந்து விளங்கும் கருத்துக்களைப் பற்றி இனித் தொடர்ந்து வரும் விளக்கங்கள் இவ்வுண்மையினையே மேலும் வலியுறுத்தும்.

இவ்வேதம் ஏன் 'அதர்வவேதம்' எனப் பெயர் பெறலாயிற்று? இருக்கு, யசுர், சாமம் முதலிய மூன்று வேதங்களின் பெயர்களை நோக்குங்கால், அவை கூறும் கருத்துக்களுக்கும், அக்கருத்துக்களைக் கூறும் முறைக்கும் ஏற்ப இப் பெயர்களைப் பெற்று வரும் உண்மை தெரியவரும். இருக்கு என்றால் பாட்டு என்பதும், இருக்கு வேதம் தெய்வங்களைப்போற்றிப் பாடும் பாட்டுக்களின் தொகுதி என்பதும் ஏற்கனவே எடுத்துக் கூறப்பட்டது. யசுஸ் என்பதற்கு உரைப்பகுதிகள் என்று பொருள். இது கிரியைகளைப் பற்றி விளக்கங் கூறி உரை நடையிற் பெரும்பாலும் அமைந்த உரை நூலாகும். இவ்வுரைகள் உரக்கப் படிக்கப்படத்தக்கன. 'சாமம்' என்றால் இசை பெருக்கி இராகம் இழுத்துப் பாடும் பாட்டு என்னுங் கருத்து உண்டு. இது சாமானி என்று பன்மை யுருவத்தில் பெரும்பாலும்வரும். 'அதர்வம்' என்னும் பெயரோவெனில், இவ்வாறு எடுத்து விளக்கத் தக்க முறையில் அமையவில்லை. ஏனைய வேதங்கள் தம் பெயரால் கூறுங் கருத்துக்கள் இவையெனச் சுட்டுவது போல் இவ்வேதத்தின் பெயரும், இது கூறும் கருத்துக்களை அதர்வம் என்று தன் பெயரால் சுட்டிக் குறிப்பிடவில்லை. இவ்வேதத்திற்கு 'அதர்வாங்கிரஸ், பிருகுவாங்கிரஸ், பிரமவேதம்' என்ற வேறு பெயர்களும் உண்டு. பிரமவேதம் என்னும் பெயர் பிற்காலத்தில் வந்தது என்பர். பேஷஜானி, யாது என்னும் இன்னுஞ் சில பெயர்களும் ஒரு காலத்தில் இவ்வேதத்துக்கு வழங்கி வந்திருக்கின்றன. இவை இவ்வேதம் எடுத்துக் கூறும் விஷயங்களில் ஒரு சில பகுதிகளை மட்டுமே குறிக்கின்றன. எனினும் இப்பெயர்கள் பிரசித்தி பெற்று மக்களிடை இன்று வழங்குவதைக் காண்கின்றோமில்லை. அக்கினி வழிபாட்டில் மிகவும் ஈடுபட்ட புராதன காலப் புரோகிதர்களுடன் இவ்வேத தொடர்புடையது என்பர் சிலர். இப் புரோகிதர் இரு பிரிவினர். இவர்கள் 'அதர்வர்கள்' எனவும் 'அங்கிரஸர்கள்' எனவும் கூறப்படுவர். 'பிருகு' என்பவரின் பரம்பரையைச் சார்ந்த 'பிருகுக்களும்' இப்புரோகிதர்கள் குழுவைச்சேர்ந்தவர்களே. இதுபற்றி இவ்வேதத்துக்கு அதர்வாங்கிரஸ் என்றும், பிருகுவாங்கிரஸ் என்றும் பெயர்கள் தோன்றலாயின. இவ்விரண்டனுள் அதிகம் பிரசித்தி பெற்ற அதர்வாங்கிரஸ் என்ற பெயரே இவ்வேதத்தின் பெயராகி நிலை பெற்று நாளடைவில் அதர்வம் எனக் குறுகி வழங்கலாயிற்று. இதுவே அதர்வ வேதம் பெயர் பெற்ற வரலாறு.



அதர்வ வேதத்தைக் குறிக்கும் பெயர்களை ஒவ்வொன்றாகச் சிறிது நோக்குவோம். அதர்வாங்கிரஸர்கள் என வரும் இப்பெயர், பன்மை உருபை ஈற்றில் ஏற்று வரும் உம்மைத் தொகைச் சொல். இதுவே இவ்வேதத்தின் மிகப்பழைய பெயர் என்பர். அதர்வ வேதத்திலேயே இப் பெயர் இருக்கின்றது. மகாபாரதமும் இப்பெயரையே குறிப்பிடுகின்றது. யாஞ்ஞவல்க்ய ஸ்மிருதியும் இப்பெயரை எடுத்து வழங்குகின்றது. மனுஸ்மிருதி இப்பெயரைத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றது. பௌத்தாயன தர்ம சூத்திரத்திற்கூட இவ் வேதத்தை இப் பெயரிட்டுச் சுட்டிக் கூறச் சந்தர்ப்பம் நேரிட்டுள்ளதைக் காண்கின்றோம். இதுகாறும் சுட்டிய நூல்களுட் பெரும்பாலானவை பிற்காலத்து நூல்கள் என்பர். அதர்வ வேதத்திலேயே இவ்வேதத்தைக் குறிக்க எழுந்த இன்னும் வேறு சில பெயர்கள் காணப்படுகின்றன. பேஷஜானி என்று அதர்வ வேதம்கூறும்பகுதிகள் மக்களுக்கு நன்மைவிளைவிக்கும் கிரியைகளைச் சுட்டுவன. இந்திய இலக்கியப் பரப்பில்- சிறப்பாகச் சமய நூல்களில்—இவ்வேதத்தைப் பற்றிக் குறிப்பிடும் இடங்களில் எல்லாம் இவ் வேதத்தில் நன்மையைக் குறித்து வரும் பகுதிகளைக் கருத்திற்கொண்டே அதர்வம் எனவும் பேஷஜானி எனவும், சாந்தம் எனவும், பௌஷ்டிகம் எனவும் அவ்வந்நூலாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். இவ் வேதத்தில் வரும் தீமை விளைவிக்க வல்ல பகுதிகளுக்கு இந் நூல்கள் இடும் பெயர்கள் வேறானவை. அவை அங்கிரஸ், யாது, அபிசாரம் என்பன. இப்பகுதிகள்பயங்கரஉணர்வைத் தூண்டும் இயல்பு வாய்ந்தவை. அதர்வ சங்கிதையிற் கூட இவ்வகைப் பாகுபாடு தெளிவாகப் பிரித்து உணர்த்தப்படுவது நோக்கற்பாலது. வேதத்தின் மந்திரப்பகுதிகளான நான்கினையும் கூறும் சந்தர்ப்பம் ஒன்றில், "இருக்கு, யசுர், சாமானி, பேஷஜா" என்னும் சொற்றொடரில் அதர்வ

வேதத்தைக் குறிக்கவரும் பேஷஜா என்னுஞ் சொல், அதன் கருத்தைப் பொறுத்த அளவில் அவ்வேதம் முழுவதையும் சுட்டாது, இதன் ஒரே ஒரு பிரிவை மட்டுமே குறித்து நிற்கத் தக்கது. எனினும், இது அதர்வ வேதம் முழுவதையுமே குறிக்கின்றது என்பதைச் சந்தர்ப்பம் நோக்கி நாம் உய்த்துணரல் வேண்டும் அதர்வன், ஆங்கிரஸ் என்னும் இரண்டும் வெவ்வேறு கருத்தை உணர்த்துவனவா என்பதைக் காரணங் காட்டிக் கூறவல்லதும், எக்காலத்தில் இப் பாகுபாடு எழுந்தது என்பதை சுட்டக்கூடியதுமான ஆதாரம் எதுவும் அதர்வ வேதத்தில் இல்லை. ஆனால், இரு பெயர்களையும் இணைத்து அதர்வாங்கிரஸ் என இவ்வேதத்தை நான்காம் வேதம் எனக்குறிப்பிடும் பிற்கால வழக்கு, இவ் வதர்வாங்கிரஸர்கள் அக்கினி வழிபாட்டில் மிகுதியாக ஈடுபட்டபுரோகிதர்கள் என்று ஏற்கனவே கூறப்பட்ட கருத்தை வலியுறுத்தும் என்பர். இப்புரோகிதர்கள் சோமனுடன் தொடர்புபடுத்திக்கூறப்படும் இருக்கு வேதங் கூறும் புரோகிதர்களின் நின்றும் வேறுபட்டவர். அங்கிரஸ் என்றும் இவர் பெயர் பெறுவர். இவர் அதர்வ இனத்தவர்களிலிருந்து வேறுபட்டு, அவரிலும் பயங்கரமானவர்களாய்க் காணப்படுவர் என்பதை இருக்கு வேதம் சுட்டும். பிருகஸ்பதி அங்கிரஸ் இனத்தைச் சார்ந்தவர். இவர் தேவகுரு. இவருக்கு ஆங்கிரஸ் என்ற பெயர் பிற்காலத்தில் ஏற்படலாயிற்று.

அதர்வ வேதம் வேதங்களுடன் ஒன்றாக இணைக்கப்பட்டு, உரிய இடத்தைப் பெற்று இப்பொழுது விளங்குகின்றது. இது வேதமாக இடம் பெற்றதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. தெய்வங்களைப் பற்றிய பாடல்கள் பல இங்கு உள்ளன. இவற்றுட் பல நன்மை புரிதலையே நோக்காகக் கொண்டுள்ளன. சில பாடல்கள் தத்துவக் கருத்துக்கள் நிறைந்துள்ளன. இவைதாம், இவ்வேதம் பெரும் மதிப்புடன் விளங்கும் உயர்நிலை எய்தி நன்கு நிலை பெற்று விளங்குவதற்குக் காரணம் என்பர். தீங்கு விளைவிக்கும் மந்திரங்கள் கூட மந்திரங்களைப் பிரயோகிப்பவரைப் பொறுத்தமட்டில் நன்மை பயப்பனவே. எனவே அதர்வ வேதம் நன்மை பயக்கும் தனி நோக்கையை கொண்டமைந்துள்ளது என்று சிலர் கூறுவர். ஆயினும் இந்தியச் சமய நூல்களிலும், தத்துவ நூல்களிலும் நெடுநாட்களாக இவ்வேதத்தைப் பற்றி நல்ல, கருத்து நிலவவில்லை. இவ்வேதத்தை ஏற்றுக்கொள்ளாது புறம்பாக ஒதுக்கிக் கூறியது மட்டுமல்லாமல், இதற்கு விரோதமான கருத்துக்களைக் கூறிப் பழைய நூல்கள் இவ்வேதம் பற்றிக் குறிப்பிடுகின்றன. அதர்வ வேதம் கோபத்தை நீக்குதலையும், ஆசி கூறுதலையும், சாபம் இடுதலையும் தனி நோக்காக உடையது என்பர். மாந்திரிகத்துடன் தொடர்புள்ள சூக்தங்கள் இங்குள்ளன. இதனாற்றான் நெடுங்காலமாக இவ்வேதத்தின் மீது வெறுப்பு நிலவி வந்தது, வேதங்களுடன் இதுவும் இடம் பெறத்தக்கதா என்னும் விசாரணை கூடத் தொடங்கி நிகழ்ந்தது.



இருக்கு வேதத்தில் அதர்வ வேதத்தைச் சுட்டக்கூடிய சொற்கள் எதுவும் இல்லை. அதர்வ மந்திரங்களைப் போன்று இவ் வேதத்தில் வரும் மந்திரங்களைக் குறிக்கவும் தனிப் பெயர்கள் எதுவும் கிடையா. மாந்திரிகம், வீட்டில் நிகழும் கிரியைகள் முதலியன அக்காலத்தில் நிகழ்ந்தில என மறுக்கவும் முடியாது. ஆனால் அதர்வாங்கிரஸ், பேஷஜாநி, அதாவர்கள், அங்கிரஸர்கள் ஆகிய பெயர்களுள் ஒன்றாவது இங்கு குறிக்கப்படாதிருப்பது ஆச்சரியத்தையே விளைவிக்கின்றது. அதர்வ வேதப் பாடல்கள் இருக்கு வேதத்திற்குப் பின்னரே ஆக்கப்பட்டன என்பது தெளிவாயினும் இப்பாட்டுக்கள் கூறும் கருத்துக்களைக் கவனித்தால், "இவை இருக்கு வேத காலத்திற்கு முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பற்றி இயற்றப்பட்டிருக்கலாம்" என்னும் சந்தேகம் தோன்றுகின்றது இதில் ஓரளவு உண்மை இருக்கின்றது என்பர் மேனாட்டு விமரிசகர்கள்.

ஏற்கனவே கூறியபடி அதர்வ வேதத்தில் இவ்வேதம் பற்றி மிகச் சில அகச் சான்றுகளையே காண்கின்றோம். இங்கு அதர்வர்கள் அரக்கர்களை அழிப்பவர்களாகக் கூறப்படுகின்றனர். மந்திரம், மாந்திரிகம் ஆகியவற்றால் தீமை

விளைவிக்கும் இழிந்த நிகழ்ச்சிகளைச் செய்பவர்களாக அங்கிரஸர்கள் கூறப்படுகின்றனர். அதர்வர்களோ எனின், நன்மை பயக்கும் மாந்திரிகம் செய்பவர்களாகத் தொடர்புறுத்தப் பட்டுள்ளனர். சிரௌத நூல்கள் வைதிக வேள்வி முறையை எடுத்துரைக்கும் தனி நோக்குடன் அமைக்கப்பட்டன. ஆதலால் இங்கு பேஷஜானி, அபிசாராணி என்னும் விஷயங்களைக் குறிப்பிடும் வாய்ப்பு நேரவில்லை. அதர்வ வேதத்தைப் பற்றி உப நிடதங்கள் கூறுவதும் ஏனைய வேதப் பகுதிகள் கூறும் அதே கருத்தே. அதர்வ உபநிடதங்கள் அதர்வ வேதத்தைச் சிறப்பாகக் குறிப்பிடுகின்றன. ஏனைய உபநிடதங்கள் மூவேதங்களை முதலில் குறிப்பிட்டு அதர்வத்தையும் கூறி, தொடர்ந்து வேறு நூல்களையும் கூறுகின்றன. பிருகதாரணியகம், சாந்தோக்கியம், முண்டகம் முதலிய உபநிடதங்கள் இவ்வாறே தெளிவாகக் கூறுகின்றன. மூன்று வேதங்களை மட்டுமே குறிப்பிடும் பகுதிகளே உபநிடதங்களில் பெரிதும் காணப்படுகின்றன. நான்கு வேதங்களையும் தனித்தனி குறிப்பிடும் உபநிடதங்கள் நான்கு. இவை நிருசிம்ஹபூர்வ தாபனீ உபநிடதம், அதர்வ சிரோபநிடதம், முக்திகோபநிடதம் மகோபநிடதம் என்பன. நான்கு வேதங்களுடன் ஏனைய நூல்களையும் குறிப்பிடுவன முண்டகம். பிரச்சினம், நிருசிம்ஹ தாபனீ என்னும் மூன்றுமாம். பரந்த இலக்கியத்தைக் குறிப்பிடும்பொழுது முண்டகம், பிரச்சினம், நிருசிம்ஹ தாபனீ என்பன அதர்வ வேதத்தைக் குறிப்பிடாதே விட்டுவிடுகின்றன.

கிருஹ்ய சூத்திரங்களுக்கும் அதர்வவேதத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பர். அதர்வ வேதம் கூறும் நிகழ்ச்சிகள் பெரும்பாலும் வீட்டில் நிகழ வேண்டியவை. இக் கிருஹ்ய சூத்திரங்கள் குறிப்பிடும் மந்திரங்கள் பெரும்பாலும் அதர்வ மந்திரங்களை நிகர்ப்பன. இருந்தும், இச்சூத்திரங்கள் இவ்வேதத்துடன் தொடர்பு பெறுது, இருக்கு வேதம், யசுர் வேதம், சாமவேதம் ஆகியவற்றுடன் தொடர்பு பெறுவது கவனிக்கற்பாலது. அவ்வாருயினும் இவை அதர்வ வேதத்தை வேதங்களுள் ஒன்ருகக் குறிப்பிடுகின்றன. 'ஆபஸ்தம்ப கிருஹ்ய சூத்திரம், சாங்காயன கிருஹ்ய சூத்திரம், ஹிரண்ய கிருஹ்ய சூத்திரம்' முதலியன இதற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளத் தக்கன. வேதங்களை அடுத்துப் பழைய நூல்கள் எனக் கருதப்படுபவை தர்ம சூத்திரங்கள். இந்நூல்களில் அதர்வ வேதத்திற்கு உரிய இடம் உண்டு. அதர்வ வேதம் பெரும்பாலும் மக்களிடம் காணப்பட்ட நம்பிக்கைகளைத் தொகுத்துத் தருவது. சோதிடம், வைத்தியம் முதலிய விஷயங்கள் அதர்வ வேதத் தொடர்பு மிகுந்தவையாய்க் கருதப்படுகின்றன. சத்துருக்களை அழித்துத் தண்டிக்க வழிவகைகளை மக்களுக்கு மட்டுமின்றி, மன்னனுக்கும் பயனுறும் வண்ணம் கூறுவது அதர்வ வேதம். இக்காரணங்களால் இந்நூல்களில் இவ்வேதம் தனி இடம் பெற்றுள்ளது. அரசனின் புரோகிதன் அதர்வம் வல்லவன். அதர்வ வேதம் பலவாறு பயன்படுவது. இன்றியமையாது வேண்டப்படுவது. எனவே இது சிறந்ததாக உயரிய நிலையில் வைத்துக் கூறப்படத்தக்கது. இது கூறும் பிரயோகங்கள் சில தூய்மையற்றவை எனினும், மட்டிட்டுப் பயன்படுத்தப்பட வேண்டியவை. இதைத் தவருகப் பிரயோகிப்பவர்கள் தண்டனைக்குட்படவேண்டியவர்கள். இது தான் 'தர்ம சூத்திரங்களின்' கருத்து. தர்ம சூத்திரங்களில் அதர்வ வேதம் மீண்டும் மீண்டும் குறிப்பிடப்படவில்லை. இது கூறும் பழைய நூல்களில் பொதுவாகக் கூறிவந்தவாறு இருக்கு, யசுர், சாமம் என்னும் வேதங்களைக் குறிப்பிட்டு, அதன் பின் ஏனைய வேறு நூல்களைக் குறிப்பிடுகின்றன. இங்கு அதர்வம் நான்காவதுவேதமாகக் கூறப்படவில்லை. அதர்வம் தனி இடம் பெற்றுக் காணப்படும் பகுதிகளும் தர்மசாஸ்திரங்களில் உண்டு. இங்கு அதர்வசிரஸ் என்னும் அதர்வ உபநிடதம் உயர்நிலையிலே வைத்துக் கூறப்படுகின்றது. பிராமணன் சத்துருவை அழிப்பதற்கு உரிய ஆயுதமாக இவ்வேதத்தைப் பிரயோகிக்கலாம் என மனுஸ்மிருதி கூறும். அதர்வாங்கிரசங்களில் வல்லவனையே அரசன் புரோகிதனுக நியமித்தல் வேண்டும். அதர்வ வேதத்தைப் பற்றித் தர்மசாஸ்திரங்களில் வரும் குறிப்புக்கள் இன்னும்பல உண்டு. ஆனல் அதர்வ

வம் நான்காம் வேதமாகக் குறிப்பிடப்படாதது கவனிக்கத்தக்கது.

மகாபாரதத்தில் ஆங்காங்கு வரும் குறிப்புக்கள் அதர்வ வேதம் தனிவேதமாக இடம்பெற்று விட்டதைத் தெளிவாக்குகின்றன. இவ்வேதத்தை மட்டிட்டு வேண்டிய அளவிற்கே பிரயோகித்தல் வேண்டும் என்று இது வற்புறுத்துவதில்லை. க்ஷத்திரியர்களான அரசர்களையும் வீரர்களையும் சிறப்பித்துக் கூறும் பாரதத்தில் அரசர்களின் நலனைக் கருதி ஆற்றப்படும் கிரியைகளைக் கூறும் அதர்வ வேதத்தின் உயர்வு கூறுதலையல்லவா நாம் எதிர் பார்த்தல் வேண்டும்! இராமாயணத்தில் ஒரே ஒரு முறை அதர்வவேதம் பற்றிய குறிப்பு வருகின்றது. சம்ஸ்கிருத நூல்களிலும், மகாபாரதத்தில் போல அதர்வ வேதம் தனிவேதமாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது. 'தசகுமார சரித'த்தில் இரு முறையும், 'கிராதார்ச்சுனீ'யத்தில் ஒரு முறையும் இதைப் பற்றிய குறிப்பு இருக்கக்காண்கின்றோம். இலக்கியங்களில் ஆங்காங்கு வரும் பழமொழிகளிலும் அதர்வ வேதம் உயரிய நிலையில் வைத்துக் கௌரவிக்கப்பட்டுள்ளது. மிகப்பழைய வைத்திய நூலான 'சுச்ருதரின்' நூல்அதர்வவேதத்தைக் குறிப்பிடுகின்றது. புராணங்கள் எல்லாம் நான்கு வேதங்களையே கூறுகின்றன. கிரியை முறையின் தோற்றுவாயாகவும், அதனை விரித்து விளக்கும் நூலாகவும் இவ்வேதம் அமைவதை விஷ்ணுபுராணம் குறிப்பிடுகின்றது. மத்ஸ்யபுராணம், மார்க்கண்டேய புராணம் ஆகிய இரண்டும் அதர்வத்தைப் பற்றிக் கொண்டுள்ள மதிப்பைக் கூறும் பகுதிகளை உரையாசிரியர் சாயணர் தம் உரையில் எடுத்து வழங்கியுள்ளார். கிரியைகளை இழித்துரைக்கும் ஜைன நூல்களிலும், பௌத்த நூல்களிலும் அதர்வ வேதத்தை இகழ்ந்து கூறும் குறிப்புகளே வருகின்றன. இலக்கண நூல், நிகண்டுகள், உரைநூல்கள் எல்லாம் அதர்வ வேதத்தைப் பற்றிக் கூறுகின்றன. இவற்றுட் பெரும்பாலானவை அதர்வ வேதத்தைப் பற்றி இவை கொண்டுள்ள தெளிவான கருத்தைச் செவ்வனே அறிவதற்குத் துணை நிற்பன அல்ல. அதர்வ வேதத்தின் பிரிவுகள் ஒன்பது என்பர்.



இவை சாகைகள் எனவும், சரணங்கள் எனவும், பேதங்கள் எனவும் பெயர் பெறும். இவை பைப்பலாதம், தௌடம், மௌடாயனம், சௌநகியம், ஜாஜலம், ஜலதம், பிரமவாதம், தேவதர்சம், சரணவைதயம் என்பன. இவற்றுள் சௌநகியம், பைப்பலாதம் என்னும் இரு சாகைகளே பிரசித்தி பெற்றவை.

சௌநகியச் சாகையைச் சேர்ந்த அதர்வ வேதமே இன்று எல்லோருக்கும் கிடைக்கக் கூடியதாக இருக்கின்றது. அதர்வ சங்கிதையில் எழுநூற்று முப்பத்தொரு சூக்தங்கள் உள்ளன. ஏறக்குறைய ஆறுயிரம் பாட்டுக்கள் இருக்கின்றன. இவ்வேதம் இருபது காண்டங்களாலான பிரிவுகளையுடையது. ஈற்றில் வரும் இருபதாம் காண்டம் பிற்காலத்தில் இணைக்கப்பட்டது என்பர். பத்தொன்பதாம் காண்டத்தில் வரும் பாடல்கள் இவ் வேதத்திற்கே உரியனவல்ல. இருபதாம் காண்டத்தில் வரும் சூக்தங்கள் எல்லாம் இருக்கு வேதத்தில் இருந்து எடுத்துத் தரப்பட்டவை. அதர்வ வேதத்தில் காணப்படும் பாடல்கள் முழுவதிலும் ஏழில் ஒரு பங்கு இருக்கு வேதப் பாடல்களே. அதர்வவேதத்திற் காணப்படும் பாடல்களிற் பாதிக்கு மேல் இருக்கு வேதத்தின் பத்தாம் மண்டலத்தில் இருந்தே எடுக்கப்பட்டுள்ளன. ஏனைய, முதலாம் எட்டாம் மண்டலத்திலிருந்து எடுக்கப்பட்டவை.

இனி, அதர்வ வேதத்தின் காண்டங்கள் எவ்வாறு அமைந்துள்ளன என்பதைக் கவனிப்போம். முதல் ஏழு காண்டங்களிலும் சிறு சூக்தங்களே உள்ளன. முதற் காண்டத்தில் நன் நான்கு பாடல்களை உடைய சூக்தங்களும், இரண்டாம் காண்டத்தில் ஐந்து பாடல்களான சூக்தங்களும், மூன்றும் காண்டத்தில் ஆறு பாடல்கள் உள்ள சூக்தங்களும், நான்காம் காண்டத்தில் ஏழுபாடல்களாலமைந்த சூக்தங்களும் இருக்கின்றன. ஐந்தாங் காண்டத்தில் எட்டுப் பாடல்களுக்குக் குறையாதவையும், பதினெட்டுப் பாடல்களுக்கு அதிகப்படாதவையுமான சூக்தங்கள் உள்ளன. ஆறுங் காண்டத்தில் நூற்று நாற்பத்திரண்டு சூக்தங்கள் உண்டு. இவை பெரும்பாலும் மும்மூன்று பாடல்களை உடையன. ஏழாங்

காண்டத்தில் உள்ள சூக்தங்கள் நூற்றுப் பதினெட்டிலும் இரண்டொரு பாட்டுக்கள் இருக்கின்றன. அடுத்து வரும்ஏழு காண்டங்களும் பதினேழாம் பதினெட்டாம் காண்டங்களும் மிக நீண்ட சூக்தங்களை உடையவை. இக்காண்டங்களில் உள்ள மிகச் சிறிய சூக்தத்தில் இருபத்தொரு பாடல்களும் மிகப் பெரிய சூக்தத்தில் எண்பத்தொன்பது பாடல்களும் உண்டு. இவ்வேதத்தின் பதினைந்தாம் பதினாறாம் காண்டங்கள் உரைநடையில் அமைந்து, மொழி அமைப்பிலும் நடையிலும் பிராமணங்களை நிகர்த்துக் காணப்படுகின்றன. அதர்வ வேதத்தின் இவ்வமைப்பு முறையை நோக்கினால், 'சூக்தங்களின்' அளவையே அடிப்படையாகக் கொண்டு இச் சங்கிதை தொகுக்கப்பட்டது என்று தெரிகின்றது. அளவை மட்டுமல்லாமல், சூக்தங்கள் கூறும் பொருளை ஓரளவிற்குக் கருதியும் இவ்வேதம் உருவானதென்பதும் உண்மையே. ஏனெனில் ஒரே விஷயத்தைப் பற்றிவரும் பாடல்கள் அடுத் தடுத்து இருக்கின்றன. முதற் காண்டத்தில் இருந்து ஏழாங் காண்டம்வரை இருக்கும் சூக்தங்கள் பல்வேறு விஷயங்களைப் பற்றியவை. எட்டாங் காண்டத்தில் இருந்துபன்னிரண்டாங் காண்டம் வரை உள்ள சூக்தங்கள் பெரிய பாடல்களா லமைவது மட்டுமின்றிப் பல விஷயங்களைக் கூறுபவையுமாய் விளங்குகின்றன. பதின்மூன்றாம் காண்டம் முதல் பதினெட் டாம் காண்டம் வரை சூக்தங்கள் குறிப்பிட்ட விஷயங்களை ஒழுங்காகக் கூறுவன. உதாரணமாகப் பதினான்காம் காண்டம் விவாகக் கிரியை பற்றிக் கூறுவதையும், பதினெட் டாம் காண்டம் முழுவதும் மரணக் கிரியைகளைக் கூறுவதை யும் குறிப்பிடலாம்.

இனி, இருக்கு வேதத்திற்கும் அதர்வ வேதத்திற்கும் இடையில் உள்ள தொடர்புகளைக் கவனிப்போம். ஏற்கனவே கூறியபடி இருக்கு வேதப் பாடல்கள் பல அதர்வ வேதத்தில் ஏழில் ஒரு பகுதியாக இடம் பெற்றுவிட்டன. இவ்வாறு இரு வேதங்களுக்கும் பொதுவாகக் காணப்படும் இப்பாடல் களில், அதர்வ வேதத்திற்கு மட்டுமே சிறப்பானவை எனக் கருதப்படும் பண்புகளான மாந்திரிகப் பகுதிகள் பொது



வாகக் காணப்படுகின்றன. இவற்றுட் சில நன்மை விளை விப்பன. சில தீங்கிழைப்பன. தாம் எடுத்துக் கூறும் தெய்வங்களைப் போற்றிக் கூறும் முறைகளும் இரு சங்கிதை களிலும் வெவ்வேறானவை. எனவே, இருமுறைகளைக் கையாளும் இருவகைப் பாடல்களை இங்கு காண்கின்றோம். ஒன்று, இருக்கு வேதத்திற்குச் சொந்தமானது! மற்றது, அதர்வ வேதத்திற்குமட்டுமே உரியது. பின்னதுதான் பிரா மணங்கள் சூத்திரங்கள் முதலிய கிரியை நூல்கள் அமைய வழியை வகுத்துக் காட்டியது.

வேதங்களில் வரும் தெய்வங்களையே அதர்வ வேதமும் குறிப்பிடுகின்றது. இருக்கு வேதத்தில் வரும் அக்னி முதலி யோரே இங்கும் கூறப்படுவர். எனினும் அதர்வ வேதத்தில் வரும் இத்தெய்வங்களின் இயல்பு வேறுபட்டுள்ளது. இத் தெய்வங்கட்குத் தனிப் பண்புகள் எதுவும் கிடையா. எனவே வேறுபட்டும் காணப்படா. இருக்கு வேதத்திற் போன்று முதலில் இயற்கைப் பொருளாயிருந்து நாளடைவில் தெய்வ மாகும் நிலை இவ்வேதத்தில் அறவே காணப்படுவதில்லை. அரக்கர்களை அகற்றுவதற்காகவே இந்திரன், அக்னி முதலி யோர் கூவி அழைக்கப்படுகின்றனர். அரக்கர்களை அழிப்ப வர்களாகவே தெய்வங்களை அதர்வவேதம் சித்திரித்துள்ளது.

இருக்கு வேதம் எடுத்துக் கூறுவது உயரிய தெய்வங் களையே. இவை இயற்கைப் பொருள்களை அடிப்படையாகக் கொண்டவை. இத்தெய்வங்களைப் போற்றும் பாடல்கள் பெரும்பாலும் சிறப்புக்களையும் நலன்களையுமே எடுத்துக் கூறும். இந்திரன், அக்கினி முதலியோரின் உயர்குணங்கள் பலமுறை விரித்துக் கூறப்பட்டுள்ளன. மக்கள் இத்தெய்வங் களை வழிபடுகின்றனர். ஆற்றல் மிக்க இத்தெய்வங்கள் வழி படுபவர்களுக்கு வேண்டியவற்றை வழங்குவன. அதர்வ வேதமோ எனின் அடிக்கடி அரக்கர்களைக் குறித்துக் கூறும். இவர்கள் கரிய நிறத்தினர். மக்களுக்கு நோயையும் வறுமை யையும் இன்னலையும் விளைவிப்பவர். இவர்களைப் பிசாசுக ளெனவும் பேய்களெனவும் கூறுவர். மாந்திரிகர்கள் இவர்

களை அகற்றுவதற்காக மந்திரங்களைப் பிரயோகிப்பர். இதன் விளைவாக இப் பேய்பிசாசுகள் விரட்டி யோட்டப்படுவன. இதை ஒப்பிட்டு நோக்கும் பொழுது இருக்கு வேதத்திற்கும் அதர்வ வேதத்திற்கும் இடையில் உள்ள வேறுபாட்டை உணருகின்றோம்.

அதர்வ வேதங் கூறும் தெய்வங்களுக்குச் சிறப்பியல்புகள் எதுவும் இல்லை. ஏற்கனவே கூறியபடி மாந்திரிக நூலாகவே பெரும்பாலும் அமைந்துள்ள இவ்வேதம் கூறும் கிரியை 'மாந்திரிகமே.' இம்மாந்திரிகம் எவ்வாறு கையாளப்பட்டது என்பதைத் தொடர்ந்து நோக்குவோம். இவ்வேதத்தில் உள்ள மந்திரங்கள் பெரும் சக்திவாய்ந்தவை. சில நோய் நீக்கவல்லன. சில நீண்ட வாழ்வை அளிப்பன. சில செல்வச் செழிப்பைத் தருவன.சில குறைகளைக் களைவன. ஒன்றியிருக்கும் காதலரைப் பிரிக்கவல்ல மந்திரங்கள் சில. பிரிந்த காதலரை ஒன்று சேர்ப்பனவும் சில. தீமையைப் பகைவருக்கு விளைவிக்கும் தனி நோக்குடையவை சில.பகைவரை அழித்து அரசருக்கு வெற்றியை ஈட்டுவதற்கெனச் சில மந்திரங்கள் இருக்கின்றன. அரசன் அரசுகட்டில் ஏறும் வேளை நிகழ்த்தும் கிரியைகளில் பிரயோகிக்கப்படும் மந்திரங்களும் அதர்வ வேதத்தில் இருக்கின்றன. இதைவிட, யாகாதி கிரியைகளில் தனி இடம் வகிக்கும் 'பிரமா' எனப்படும் வேட்பவர் ஆற்ற வேண்டும் கிரியைகளையும் நாளடைவில் ஏற்று, அதர்வ வேதம் விரிந்த கிரியை நூலாகவே ஆகிவிட்டது. இனி இவை எல்லாவற்றையும் ஒவ்வொன்றாகக் கவனிப்போம்.

அதர்வ சங்கிதை அக்கால மக்களின் சமயத்தை விளக்கிக் கூற மிகவும் பயன்படும். இருக்கு வேதத்தில் வேள்வி வேட்கும் ஒரு குழுவினருடன் தொடர்புபட்ட நிகழ்ச்சிகள் கூறப்படுவன. அதர்வ வேதம் வேட்பவர்களைப் பற்றிக் கூறாது பொதுமக்களிடை காணப்பட்ட பழக்க வழக்கங்களையே கூறுகின்றது. பேய் பிசாசுகள், அரக்கர்கள் அடிக்கடி குறிப்பிடப்படுவர். மாந்திரிகம் நிகழத்தப்படும் முறையும்



இங்கு கூறப்பட்டுள்ளது. இவை எல்லாம் கருத்து வளர்ந்த வகையையும், சமய வரலாற்றையும் கூறப் பயன்படும்.

அதர்வ சங்கிதையிற் காணப்படும் ஒரு சில பாட்டுக்கள் நோய் நீக்கவல்ல மந்திரங்களாக விளங்குகின்றன. இவை பேஷஜானி என்னும் இனத்தைச் சார்ந்தவை. இவற்றுட் சில நோய்களைக் கை, கால் முதலிய உறுப்புக்களை உடையன வாய் உருவகப்படுத்தி அவற்றை விளித்துப் பாடிய பாட்டுக் கள்; சில அரக்கர்களைக் குறித்துப் பாடப்பட்டவை. இவர் கள் நோயைத் தோற்றுவிப்பவர்கள். நோயைப் பெருகச் செய்யும் இவர், புறத்தே நின்று தம் தொழில் புரிவர். இதை விட, தாம் தாக்குவதற்கு விரும்பும் மக்களைப் பீடித்து அவர் களில் ஆவேசமாகி நோயால் அவர்களை அல்லலுற வைப்பர். அதர்வ வேதத்தில் வரும் சில மந்திரங்கள் நோயைத் தீர்க்க வல்ல மூலிகைகளை விளித்துக் கூறப்பட்டுள்ளன.இம்மந்திரங் களுக்கும் நோய் நீக்கும் ஆற்றல் உண்டு. நோய் நீக்கவல்ல தான நீரை அபிமந்திரிக்கும் பொழுது பிரயோகிக்கப்படும் மந்திரங்கள் சில உண்டு. சில அரக்கர்களைத் துரத்தும் வலிமைமிக்க அக்கினியை விளித்துக் கூறுவன. இவையும் நோய் நீக்குவதற்காகப் பிரயோகிக்கப்படுவனவே. மந்திர சக்தி வாய்ந்தன எனக் கருதப்படும் இப்பாடல்களும் இவற் றின் பிரயோகத்தைப் பற்றிய பகுதிகளுந்தாம் இந்திய மருத்துவ நூலின் தோற்றுவாயாகக் கொள்ளப்படுகின்றன. இப்பாடல்களில் நோய்களின் இயல்புகள் தெளிவாகக் கூறப் பட்டுள்ளன. எனவே, மருத்துவக் கலையைப் பற்றிப் படிப் பவர்களுக்கு இவை விஷயங்களைச் சுவைபட எடுத்துக் கூறும் முதல் நூல்களாக விளங்குகின்றன. வெப்ப நோய் நீக்கும் மந்திரத்தைக் கவனித்தால் மருத்துவ நூல்களுக்கு முதல் நூலாக இப்பாடல்கள் அமையும் இவ்வுண்மை புலனாகும். நீங்கும் நோய்கள், வேறு மக்களைப் போய் அடைந்து பீடிக்க வல்லவை என்றும், தூரத்தில் இருக்கும் வேற்றாருக்குச் செல்லும் இயல்பு வாய்ந்தவை என்றும், நோயைப் பற்றிக் கருத்துக்கள் அதர்வ வேதத்தில் நிலவக் காண்கின்றோம். கொடிய அரக்கர்களையும், பேய்களையுந் தவிர, அப்சரஸ் பெண்

களும் கந்தருவர்களும் இரவில் மக்களை அணுகிப் பீடிப்பவர். அப்சரஸ்களும் கந்தருவர்களும், பெரும்பாலும் ஆறுகளையும் காட்டில் அடர்ந்துள்ள மரங்களையும் அடுத்து வசிப்பவர்கள். இவர்களை விரட்டி ஓட்ட 'அஜசிருங்கி' என்னும் மூலிகை உரிய மந்திரத்துடன் பிரயோகிக்கப்படும். பிசாசுகளும் மக்களின் வீட்டை விட்டகன்று ஆறுகளையும், மரங்களையும் சென்று அடையும் வண்ணம் வேண்டப்படுவன. கந்தருவர்களும் அப்சரஸ்களும் சங்கீதத்திலும் நாட்டியத்திலும் வல்லவர்களாய் இவற்றைப் பயன்படுத்தி, ஆடவர்களதும் பெண்களதும் மனதைக் கவர்ந்துவிடுவது இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நிகழ்ச்சிகள் எல்லாம் ஜெர்மனி முதலிய மேலைத் தேசங்களில் வேறுபாடெதுவும் இன்றி மிகப் பழைய காலத்தில் காணப்பட்டதால், இப்பழக்க வழக்கங்கள் மிகப் புராதனமான 'இந்தோயூரோபிய' நாகரிகத்தைப் பற்றியன என்பர்.

பேஷஜானி என்னும் இனத்தைச் சார்ந்தவை, நீண்ட வாழ்வை அளிக்க வல்லவையான ஆயுஷ்ய சூக்தங்கள். "நோயை நீக்கினால் மட்டும் போதாது; வாழ்வும் நீண்டு அமைதல் வேண்டும்' என்னும் உண்மையை இக்கால மக்கள் உணர்ந்ததை இவை எடுத்துக் காட்டுகின்றன. நோய் நீக்குவதற்காகப் பிரயோகிக்கப்படும் மந்திரங்களிலும் இவை வேறுபட்டவை அல்ல. வீட்டில் விசேஷ நிகழ்ச்சிகள் நிகழும் பொழுதுஇவைபிரயோகிக்கப்பட்டன. 'சௌளம்உபநயனம், முதலிய கிரியைகள் இவ்வாறு வீட்டில் நிகழும் கிரியைகள். "நூறு சரத் காலங்கள் வாழ்வு அமைதல் வேண்டும். நூறு மழைக் காலங்கள் வாழ்தல் வேண்டும்" என்று இம் மந்திரங்கள் எடுத்தியம்புகின்றன. இவற்றின் ஈற்றடிகள் ஒரே வகையாகத் திரும்பத் திரும்பக் கூறப்பட்டுள்ளன. பதினெட்டாம் காண்டத்தில் வரும் ஒரு சூக்தம் முப்பது பாடல்களையுடையது. இது ஆயுஷ்ய சூக்தம் என வழங்குகின்றது. நோய் நீக்குவதற்கு மூலிகைகளையோ, நீரையோ மந்திரிப்பது போல் ஆயுளைப் பெருக்குவதற்கு 'ரக்ஷை' எனப்படும் தாயத்தை மந்திரித்துக் கழுத்தில் தரிக்கும் வழக்கம் இருந்திருக்கலாம் என ஊகிக்க முடிகின்றது.



இதைவிட பௌஷ்டிகாணி என்று கூறப்படும் மந்திரங்கள் சில உண்டு. இவை நன்மை விளைவிப்பன. உழவனும் வர்த்தகனும் தங்கருமங்களில் சித்தியையும் இன்பத்தையும் பெறுவர். புதிதாக வீடுகட்டும் பொழுதும், உழும் பொழுதும், விதைக்கும் பொழுதும், பயிர் வளரும் பொழுதும், கிருமிகளும் புழுக்களும் பயிரை அழிக்கும் பொழுதும், நெருப்பினால் அபாயம் நிகழும் பொழுதும் பிரயோகிக்கப்பட வேண்டிய மந்திரங்கள் உண்டு. மழையைப் பெய்விக்கவும், மாட்டு மந்தையைச் செழிக்க வைக்கவும், அதைத் திருடர்கள் கவராது தடுக்கவும், வர்த்தகம் நன்கு நடைபெறவும், சூதாட்டத்தில் வெற்றி ஈட்டவும், பாம்பைக் கட்டி வசப்படுத்தவும் பிரயோகிக்கத்தக்க மந்திரங்கள் இங்கு இருக்கின்றன.

அம்ஹஸ் என்னுஞ் சொல் இவ் வேதத்தில் துன்பம், இன்னல் என்பதை மட்டுமல்லாமல், பாபம், அபராதம் என்னும் கருத்துக்களையும் உணர்த்தும். இழைத்த தவறை நீக்கும் நோக்குடன் இயற்றப்படும் கிரியை பிராயச்சித்தம் எனப்படும். இன்னல் நீக்குவதற்கெனக் கூறப்பட்ட மந்திரங்களைப் போன்றவையே இப் பிராயச்சித்த சூக்தங்களும், ஒழுக்கம் நன்னெறி முதலியவற்றிலிருந்து பிறழ்தலால் வரும் தீமையைப் போக்குவது மட்டுமன்றிச் செய்யப்படும் கிரியைகளைச் சிறு சிறு தவறுகளை இயற்றித் தெரிந்தும் தெரியாததும் உரியவாறு செய்யாது விடுவதனால் விளையும் குறைகளை நீக்கும் ஆற்றல் வாய்ந்தது பிராயச்சித்தம். எவ்வகைத் தவறுகளாலும் வரும் தீமைகளை அவற்றி இது நன்மையையே பயக்கும். நோய், இன்னல், பாவம், தவறு முதலியன நேருவது தீமை விளைவிக்கும் அரக்கர்களாலே என்பது அதர்வ வேதத்தின் கருத்து. பாவம் இழைத்தவனும், நோயினால் பலம் குன்றியவனைப் போன்றவனே. இவன் கொடிய பிசாசினால் பீடிக்கப்பட்டுள்ளான் என அதர்வ வேதம் கூறும். நோயை விளைவிக்கும் தீயசக்திகளே கெட்ட நிகழ்ச்சிகளையும் திடீரென நிகழும் கோர சம்பவங்களையும் தோற்றுவிப்பன. கழுத்திற் கட்டப்படும் ரட்சையைப் பற்றி இருபத்தைந்து பாடல்களா

லான ஒரு சூக்தத்தில் இது எத்தகைய தீங்குகளையும் நிகழ வொண்ணுது தடுக்க வல்லது என்றும், ஏனையோர் எதிராகப் பிரயோகிக்கும் மாந்திரிகத்தின் வயப்படாத பெருமையுடையது என்றும், தீய கனவுகள் தீய நிகழ்ச்சிகள் நிகழாது தடுக்கும் ஆற்றல் படைத்தது என்றும், தரித்துக் கொள்பவன் மட்டுமன்றி அவன் தாய்தந்தையரும் அவன் உடன் பிறந்தோரும் நெருங்கிய உறவினர் ஏனையோரும் இழைத்த பாவங்களையும் பரிகரிக்க வல்லது என்றும் கூறப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

குடும்பத்தில் நிகழும் பிளவு, தீய அரக்கர்களாலும் பேய் பிசாசுகளாலும், தீமை விளைவிக்கவல்ல மாந்திரிகர்களாலும் தோற்றுவிக்கப்படுவது என்பது அதர்வ வேதம் கூறும் கருத்து. பிளவை நீக்கி ஒற்றுமையைத் திரும்பவும் தோற்றுவிக்கும் ஆற்றலுடைய மந்திரங்களும் அதர்வ வேதத்தில் இடம் பெறுகின்றன. இவை நன்மையைப் புதிதாகத் தோன்றும்படி நிகழ்விக்கும் பௌஷ்டிகாணி என்னும் மந்திரங்களைப் போன்றவை அல்ல. ஏனெனில் இவை தீமையை அகற்றுவதால் ஏற்கனவே இருந்த நன் நிலையைத் திரும்பவும் வருவிப்பன. இவ்வாறே இவை பிராயச்சித்த மந்திரங்களினின்றும் வேறுனவை. ஏனெனில், தவறு, பிழை, பாவம் முதலியன நிகழ்வதன் விளைவாகத் தோன்றும் தீமையையல்லவா பிராயச்சித்த மந்திரங்கள் களைவன. எனவே இவ்விருவகை மந்திரங்களின் இயல்புகளும் வாய்ந்து இரண்டினது நடுவழி நிற்பவை இம்மந்திரங்கள் என நாம் கருத இடம் உண்டு. இவை குடும்பத்தில் தோன்றிய பிளவுகளை ஒன்றுபடுத்துவன. குடும்பத் தலைவனின் கோபத்தைத் தணிக்கப் பயன்படுவன. சபையில் ஒருவனைச் செல்வாக்கு உடையவனுக உயர்த்தி வைப்பன. நீதி மன்றத்தில் கூறப்படும் தீர்ப்பையும் பிரயோகிப்பவன் சார்பாக அமையச் செய்வன.

கணவன் மனைவியரிடையே தோன்றும் பிளவை நீக்கி ஒற்றுமையைத் தோற்றுவிக்கவல்ல மந்திரங்கள் இங்குமிகுதியாக உள்ளன. காதல், விவாகம் முதலியன ஒன்றுக்கொன்று



தொடர்புறும் வண்ணம் விஷயங்களைக் கூறும். அதர்வ வேதப்பாடல்களுக்கு ஸ்திரீகர்மாணி எனப் பெயரிட்டுள்ளார்கள். பெண்களின் நன்மைகளையும் தீமைகளையும் கருதிச் செய்யப்படும் கிரியைகள் இவை. இக்கிரியைகளையும் நன்மை பயப்பவை, தீமை பயப்பவை என இருவகையாகப் பிரித்துள்ளார்கள். விவாகத்தைப் பற்றியும், மக்கட் பேற்றைப் பற்றியும் கூறும் தூய்மை வாய்ந்த மந்திரங்கள் நன்மை விளைவிப்பனவே. தான் விரும்பும் அழகிய ஆடவனை இம் மந்திரங்களின் துணைக் கொண்டு ஒரு பெண் அடைவள். இதே போன்று ஆடவனும் தான் விரும்பும் பெண்ணை மனைவியாகப் பெற்று வாழ்வான். இவ்விதம் பெற்று இணைந்து நிற்கும் புதுத் தம்பதிகளை வாழவைக்கவல்ல மந்திரங்கள் அதர்வ வேதத்தில் உண்டு. ஒருங்கு வாழும் இத்தம்பதிகளிடம் மக்கட் பேற்றை உண்டாக்குவதையும், இவர் பெறும் மகவு ஆண் மகவாய் இருத்தலையும் இம்மந்திரங்கள் நிகழ்த்த வல்லன. கருவுற்றிருக்கும் அன்னைக்கும், அன்னையின் கருப்பையுளிருக்கும் கருவிற்கும் காப்பை அளிப்பன. சில மந்திரங்கள். பிறந்த பிள்ளையின் ஆயுளையும், காப்பையும் தரவல்லன சில. இரண்டாம் பிரிவைச் சார்ந்த மந்திரங்கள் எண்ணிறந்தவை. இவை பெரும்பாலும் பேய் முதலியவற்றை விரட்டி ஓட்டுவன. சில சபிப்பன. சில காதலர்க்கிடையே ஊடல், பிணக்கு முதலியவற்றைத் தோற்றுவிப்பன. சில கணவரின் கோபத்தையும் வெறுப்பையும் நீக்குவன. சில மனைவியைத் திரும்ப கணவனிடம் சேர்ப்பன. சில உறக்கத்தை உண்டு படுத்துவன. சிலவிருப்பில்லாத ஆடவனிடத்து அல்லது பெண்ணிடத்துக் காதலைத் தோற்றுவிக்கும் வலிமை உடையன. ஒருவனின் படத்தைத் துணைக் கொண்டு அவனைத் தன் வயமாக்கவும், அவனுக்குத் தீங்கிழைக்கவும் வல்ல மந்திரங்கள் சில. ஒரு பெண்ணைக் காதலியாக அடைய விரும்பும் ஒருவன் செய்ய வேண்டுவதை ஒரு பாடல் கூறும். ஒரு பெண்ணும் இப்படியே தான் விரும்பும் ஆடவனை வலிந்து அவனை தன்னை அடையும் வண்ணம் செய்வள். ஆடவனின் உருவத்தை அமைத்துத் தன் நிறுத்திச் சூடேற்றப்பட்ட அம்புகளால் அதன் அங்கங்களைத் துளைப்பள். தம் பகைவரை

அழிக்கப் பெண்கள் கையாளும் மந்திரங்கள் அவர்கள் கொண்டுள்ள வெறுப்புணர்ச்சியையும், தீங்கு செய்ய விழைதலையும் தெளிவாகக் காட்டுகின்றன. சில பாடல் பெண்ணைக் கருவுறச் செய்யாது தடுப்பதற்கும், ஆடவனை ஆண்மை குன்றியவனாக ஆக்குவதற்கும் ஆற்றல் படைத்தவை. இப்பாடல்கள் எல்லாம் அங்கிரஸர்களுடன் தொடர்புபட்டவை. இதுவரை கூறியவாறு சபிப்பன சில; அரக்கர்களைக் கெடுப்பன சில; சத்துருக்களையும், மாந்திரீகர்களையும் அழிப்பன சில. இவற்றிற்கு அபிசாராணி என்று இன்னொரு பெயரும் உண்டு.

அரசர்களின் நன்மை கருதி அவர்களின் பொருட்டே பிரயோகிப்பதற்கெனச் சில மந்திரங்கள் உண்டு. சில பகைவரின் மீது ஏவப்படுவன. சில அரசர்க்கு ஆசி கூறுவன. அக்காலத்து அரசர்கள் தங்கள் நலம் கருதி வேண்டிய கிரியைகளைச் செய்யப் புரோகிதர்களை அமர்த்தி வந்தனர். இப்புரோகிதர்கள் அரசன் நலங் கருதிச் செய்யப்படும் அதர்வக் கிரியைகளில் திறமை மிக்கவர்கள். இக்கிரியைகள் ராஜகர்மாணி எனப்பட்டன. இக்கிரியைகளைச் சார்ந்த மந்திரங்கள் இங்கு உள்ளன. இதிலிருந்து அதர்வவேதத்திற்கும், அரசர் இனத்திற்கும் இருந்த தொர்டர்பு தெளிவாகின்றது. அரசன் அரசுகட்டில் ஏறும் வேளை செய்யவேண்டும் பட்டாபிஷேகம் இங்கு விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது. அதர்வம் வல்லோர் இதனை நிகழ்த்துவர். அரசர் பகைவரை வென்று தலைசிறந்த அரசனாய்த் திகவுழம், ஆற்றலையும் புகழையும் பெறவும், வேண்டிய வலிமையை அளிக்கும் மந்திரங்களும் இங்கு உண்டு. சில மந்திரங்கள் அரசன் கவசங்களையணியும் பொழுது உச்சரிக்க வேண்டியவை. சில போர்க் கோலம் கொண்டு தேரில் ஏறும் பொழுது சொல்ல வேண்டியவை. அரசனைத் தேர்ந்தெடுக்கும் அதிகாரம் வருணனது என ஒரு மந்திரம் கூறும். இது "தேர்ந்தெடுப்பவன்" என் வருணன் பெயர் அமைந்துள்ளது என்பதைக் காட்டி விளங்க வைக்கின்றது. போர்க்காலத்தில் உச்சரிக்கவேண்டியமந்திரங்களும் உண்டு. வீரரை ஊக்கத்துடன் போர் புரியவும் வெற்றி ஈட்டவும் தூண்ட முழங்கப்படும் முரசங்களுடன் தொடர்புள்ள மந்திரங்களும் காணப்படுகின்றன.



அரசர்களுக்கு நன்மை விளைவிக்கத் தக்கவாறு இருப்பது போன்று, பிராமணர்களுக்கும் நன்மையைப் பெருகச் செய்யக் கூடிய மந்திரங்களும் இவ்வேதத்தில் இடம் பெற்றுள்ளன. இவைகளுட் சில அரசர்களைச் சார்ந்து கடமையாற்றும் புரோகிதர்களைப் பற்றியன. மந்திரங்களையும் மாந்திரிகர்களையும் கண்டிக்கும் பகுதிகள் சமய நூல்களிற் பெருமளவிற் காணப்படுகின்றன. எனினும், சத்துருக்களை அழிக்கப் பிராமணன் அதர்வ வேதத்தைப் பிரயோகிக்கலாம் எனக் கூறும் பகுதிகளும் உண்டு என்பது உன்னற்பாலது. பிராமணர்களுக்கு நன்மை விளைவிக்கும் மந்திரங்கள் பலவகைப்பட்டன. பிராமணர்களின் பொருளைத் தீண்டுதல் கூடாது. அவர்களின் பொருளைத் தொடுபவருக்கும், அவரது உயிரை அழிப்பவருக்கும் நாசம் விளைவிக்கப் பிரயோகிக்கப்பட வேண்டிய மந்திரங்கள் பல இங்குள்ளன. பிராமணர்களுக்கு யாகங்களில் அளிக்கப்படும் தட்சணை பற்றிய விவரங்களும் இங்கு கூறப்பட்டுள்ளன. பிராமணனைக் கொல்வது பெரும்பாவம் என்னுங்கருத்து இங்கு வற்புறுத்தப் பட்டுள்ளது. இதைவிட அறிவுப் பெருக்கத்தையும், புகழையும், தத்துவக் கருத்துக்களையும் குறிக்கும் பாடல்கள் பல இங்குள்ளன. ஆனால் இவை காலத்தால் பிந்திய பாடல்களே.

வேள்வி முறை பற்றிக் கூறும் சில பாட்டுக்களும், மந்திரங்களும் இங்கு இடம் பெற்றுள்ளன. இவற்றை இங்கு கூறுவதனால்தான் இவ்வேதத்தின் மதிப்பு உயர்ந்தது என்பது ஏற்கனவே எடுத்துக்காட்டப்பட்டது. இதுபற்றியே அதர்வவேதம் ஏனைய வேதங்களுடன் தனி இடம் பெற்றது. இருக்கு வேதத்தில் போன்று இங்கும் 'ஆப்ரீ சூக்தங்கள்' உள்ளன. இருக்கு வேதங் கூறுவது போல் விஷயத்தை எடுத்துக் கூறுவதாய் யசுர்வேத உரைநடையையும் விளக்கங்களையும் நிகர்த்துச் சில பகுதிகள் இங்கு இருக்கின்றன. இறந்தவர்களைக்குறித்துச் செய்யப்படும் கிரியைகளைக் குறிப்பிடும் பாட்டுக்களும் இவ்

வினத்தைச் சார்ந்தன. இருக்கு வேதத்தில் பத்தாவது மண் டலத்தில் வரும் யம சூக்தம் முதலியன அப்படியே இங்கும் இடம் பெற்றுள்ளன. இவற்றுட் சில சிறிது விரிந்து அமைந் துள்ளன. இருபதாங் காண்டத்தில் உள்ள பல இருக்குவேதப் பாடல்கள் சோம யாகத்தைப் பற்றியவை. இருக்கு வேதத் தில் இருக்கும் தானஸ்துதிகளை நிகர்க்கும் 'குந்தாப சூக்தங்க ளும்' இருபதாங் காண்டத்தில் இடம் பெற்றுள்ளன.

அதர்வ வேதத்தில் தத்துவக் கருத்துக்கள் நிறைந்து காணப்படும் சூக்தங்கள் பிற்காலத்தன. சில உலகஅமைப்பை விளக்குவதற்காகப் பாடப்பட்டன. ஆனால் இவ்வகைப் பாடல்கள் கூட, ஏனைய அதர்வ மந்திரங்கள் போல், மந்தி ரங்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. தத்துவ விசாரணை யில் ஈடுபடும் பொழுது உண்மைகளை எடுத்துக் கூறும் இப் பாடல்கள் உச்சரிப்பவர்களுக்கு மாந்திரிக சக்தியை வளரச் செய்து, எண்ணிய கருமங்களை நிறைவேற்றுவதற்கே பயன் படுவன. எனினும், இவை கருத்து வளம்பெற்றவை. உப நிடதம் கூறும் முக்கிய பொருள்களையும், உலகை ஆக்கவும் காக்கவும் வல்ல பிரஜாபதியையும், உலகத் தோற்றத்துக்குக் காரணமான பரம் பொருளையும், பிரமம், தபஸ், அசத்து, பிராணன், மனஸ் போன்ற உயர்ந்த தத்துவக் கருத்துக்களை யுஞ் சுட்டும் சொற்களை உடையன இப்பாடல்கள். அக்காலச் சூழ்நிலையில் தோன்றி மிகவும் பரந்து பயின்று வந்ததற்கு இவ்வேதத்தில் காணப்படும் சான்று. அதர்வ வேதத்தின் உயர்ச்சியைக் குறிப்பிடுகின்றது. இருக்கு வேதத்தில் தோன் றிக் காணப்படும் தத்துவக் கருத்துக்கள் உபநிடதங்களில் வளர்ச்சி பெற முன் உள்ள இடைநிலை அதர்வ வேதத்தில் வரும் இப்பகுதிகளில் காணப்படும் இக்கருத்துக்களே ஆகும். கால தத்துவமே உலகம் இயங்குவதற்கு முதற்காரணம் என எடுத்துக் கூறும் பாடல் அக்கால தத்துவ விசாரணையினுயர் வையே சுட்டுகின்றது.

அதர்வ வேதத்தின் பதின்மூன்றாவது காண்டத்தில் 'ரோஹித சூக்தங்கள்' இருக்கின்றன. செந்நிறத்தவனைசூரி



யனைக் குறித்து இவை பாடப்பட்டன. நாளடைவில் சூரி யனது ஆத்ம சக்தியே படைத்தற்கு அதி தெய்வமாக உயர்த் தப்பட்டது. இவன் விண்ணுலகையும் மண்ணுலகையும் படைத்தான். பூமியை ஆளுவதற்கு அரசன் தோற்றுவிக்கப் படுகிறான். தெய்விக அரசனை ரோஹிதனுக்கும், நிலவுலக மன்னனுக்கும் தொடர்பு கூறப்படுகின்றது. இதன் நடுவில் பகைவரைத் தண்டிப்பதற்கு வேண்டிய மந்திரங்கள் இடம் பெறுகின்றன. ரோஹிதன் உயரிய பரம் பொருளாகக் கூறப் படுகிறான். இதே சூக்தத்தில் ஒவ்வொரு பாட்டின் இறுதி யிலும் பிராமணனைத் துன்புறுத்துவோரைக் கோபித்துத் தண்டிக்கும்படி ரோஹிதன் வேண்டப்படுகிறான். எருது, பசு என்னும் இரண்டும் உயர்த்திக் கூறப்படும் பாட்டும் ரோஹித சூக்தம் போன்றது. இங்கும் உயரிய தத்துவக் கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. 'பிரமசாரி சூக்தமும்' 'விராத்ய சூக்தமும்' இவ்வினத்தைச் சேர்ந்த பாடல்களே.

அதர்வ வேதத்தில் காணப்படும் மொழியமைப்பு இருக்கு வேதத்தில் இருக்கும் மொழியமைப்பினின்றும் மிக வேறு படாதது. யாப்பு முறையும் அப்படியே. இருந்தும் அதர்வ வேதத்தில் வரும் சில சொல்லுருவங்கள் மிகப் பிற்காலத் தைச் சேர்ந்தன. இங்கு காணப்படுவது மிகப் பழைய உரை நடை. இவற்றை எல்லாங் கருத்திற் கொண்டு அதர்வ வேதத்தின் காலத்தையும் அது தொகுக்கப்பட்ட காலத்தை யும் வரையறுத்து நிறுவுதல் எளிதல்ல. எனினும் இவ்வேதம் பற்றிப் பல உண்மைகளை உணரக்கூடியதாக இருக்கின்றது. ஒன்று, மக்களிடை மிகப் பழைய காலந்தொட்டு வழங்கிவரு மளவிற்கு அதர்வ வேதம் கூறும் கருத்து தொன்மை வாய்ந் தது என்பது. மற்றது, அதர்வ வேத சங்கிதை இருக்கு வேத சங்கிதையிலும் பிந்தியது என்பது. இதற்குப்பல ஆதாரங்கள் இருக்கின்றன. அதர்வ வேதம் சுட்டும் நாகரிகம் பிற்காலத் தையே சார்ந்து நிற்கிறது. இங்கே குறிப்பிடப்பட்டிருக்கும் பாரதநாடு இருக்கு வேதத்தில் கூறப்பட்டதைக் காட்டிலும் அகன்று காணப்படுகின்றது. அதர்வ வேதம் கூறும் இந்தியா, தென் கிழக்கே விரிந்து செல்லுகின்றது. கங்கைப் பள்ளதாக்கு

வரை மக்கள் சென்று வசித்தனர். வங்காளத்திலேயே பெரிதும் காணப்படும் புலி மிகவும் வல்லமைவாய்ந்ததும். ஏனைய மிருகங்களைக் கொன்று தின்னும் ஆற்றல் வாய்ந்ததுமாகக் கூறப்படும். வங்காளத்தைப் பற்றிய குறிப்பெதுவும் இல்லாத இருக்கு வேதத்தில் இது கூறப்படவில்லை. அரசன் முடிசூட்டு விழாவில் புலித்தோல் மீது ஏறும் நிகழ்ச்சி பற்றிக் குறிப்பு இங்கு உண்டு. அதர்வ வேதத்தில் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் நான்கு வருணத்தினரும் கூறப்பட்டுள்ளனர். பிராமணர் உயரிய இடம் பெறுகின்றார்கள். அபிசாரம் முதலிய துஷ்பிரயோகங்களுக் கேற்ற மந்திரங்களும், பிராமணர்களின் தொடர்பால் தம் இயல்பான நிலை இழந்து சீராக்கி மாற்றியமைக்கப்பட்டு, கவர்ச்சிகரமான வேற்றுருவம் பெற்றன என மேல்நாட்டாராய்ச்சி வல்லவர்கள் கூறுவர். இப்பாட்டுக்களில் பெரும்பாலானவற்றைப் புரோகிதர்களே ஆக்கித் தொகுத்தனர். பிராமணர்களுக்கு உணவளிப்பதையும், அவர்களுக்கு யாகங்களில் கொடுக்கவேண்டிய தட்சணையையும், இன்னும் இது போன்ற பல விஷயங்களையும் கூறும் பகுதிகள், புரோகிதர்கள் இவ்வேதத்துடன் கொண்டுள்ள தொடர்பையும், அவர்களது கருத்துக்கள் இங்கு சுவறுவதையும் தெளிவாகச் சுட்டுகின்றன. மக்களிடை பெரிதும் பயின்று வந்த அதர்வ வேதத்தில் பழைய மாந்திரிகம் பற்றிப் பாடல்கள் இருப்பதுதான் இயல்பு. இவ்வாறன்றி இவ்வேதம் உயரிய தத்துவக் கருத்துக்களையும் எடுத்துக் கூறும் வகையில் வேறு வகையில் உருவாக்கப்பட்டது. இந்நிலையில் காணப்படும் அதர்வ வேதம் தான், இருக்கு வேதத்தைக் காட்டிலும்பிந்தியதெனக்கொள்ளப்படும் உண்மையை நிலை நிறுத்துகின்றது. இருக்கு வேதத்தில் வந்த தெய்வங்களே இங்கும் திரும்பவும் கூறப்படுகின்றன. ஆனால் அதர்வ வேதம் கூறும் மாந்திரிகச் சூழ்நிலைக் கேற்பச் சிறிது வேறுபடுத்திக் கூறப்பட்டுள்ளன. இதுவும் அதர்வ வேதம் பிந்தி எழுந்ததென்பதையே சுட்டும்.

கவிதை நயம் செறிந்த பகுதிகளும் இங்கே இடையிடையே காணப்படுகின்றன. எனினும், இவை தனியே எடுத்துக் கூறக்கூடிய அளவிற்குச் சிறப்பு வாய்ந்தன வல்ல. ஆனால் கவிதையின் மிகப் பழைய உருவம் இருக்கு வேதத்திற் போன்று, இங்கும் காணப்படுகின்றதென்பதை ஒருவரும் மறுக்க முடியாது. இது இந்தியாவில் எழுந்த கவிதையின் ஆதி வரலாற்றை அறியப் பயன்படும். மாந்திரிகம், நோய், இருவரை ஒன்று சேர்த்தல், சேர்ந்த இருவரை வேறாகப் பிரித்தல் முதலிய விஷயங்களைக் கூறும் நூலில் இதை நாம் அதிகம் எதிர்பார்த்தல் முறையன்று.



• •

யாகங்களில் கடமையாற்றும் பலவகைப் புரோகிதர்களின் தேவையை ஒட்டியே வேதங்களின் சங்கிதைகள் தனித்தனிப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அத்வர்யுக்கள் வேட்பவருள் ஒரு பிரிவினர். இவர்களின் தேவையை ஒட்டி எழுந்ததே யசுர் வேதம். அத்வர்யுக்களின் வேதம் நூற்றொரு பிரிவினதென்று கூறப்பட்டுள்ளது. அத்வர்யுக்கள் இயற்ற வேண்டிய கிரியைகளைப் பற்றிப் பல்வேறு அபிப்பிராயங்கள் நிலவியதாற் போலும், இவ் வேதத்தில் இவ்வாறு தனித்தனிப்பிரிவுகள் தோன்றின. இவற்றுள் ஐந்து பிரிவுகளைப் பற்றி மட்டுமே நாம் இன்று அறியக்கூடியதாய் இருக்கின்றது. இவ்வைந்தனுள் நான்கு கிருஷ்ண யசுர் வேதத்தைச் சார்ந்தவை. அவை காடக சங்கிதை, கபிஷ்டல-கட சங்கிதை மைத்ராயணீ சங்கிதை, தைத்திரீய சங்கிதை எனப்படுவன. இவை ஒன்றுடன் ஒன்று தொடர்பு பூண்டுள்ளன. ஐந்தாவது பிரிவான வாஜசநேயி சங்கிதை, கண்வ சாகை எனவும் மாத்தியந்தின சாகை எனவும் பெயர் பெற்று இருவகையினதாக விளங்கும். இதுவே சுக்கில யசுர் வேதம் எனக் கூறப்படுவது. வாஜசநேயி சங்கிதையில் இருப்பன மந்திரங்களே. இவை வேட்கும் வேளைகளில் அத்வர்யு ஓத வேண்டிய மந்திரங்கள். கிருஷ்ண யசுர் வேதத்திலோவெனின் இவ்வகை மந்திரங்களை மட்டுமல்லாமல், வேள்வியுடன் தொடர்புடைய பல்வேறு கிரியைகளைச் செய்யும் முறையையும், இவைபற்றிய விளக்கங்களையும், விவாதங்களையும் காண்கின்றோம். எனவே இப்பகுதிகள் மந்திரங்களை மட்டும் பேருமளவிற் பெறுவதுடன் மட்டும் அமையாது, பிராமணங்களைப் பெரும்பாலும் நிகர்த்தும் காணப்படுகின்றன. அத்வர்யுக்கள் இயற்றவேண்டிய கிரியைகளைக் கூறி, அவர்க்குப் பயன்படலொன்றையே தனிநோக்காகக் கொண்டு அமைக்கப்பெற்ற இவ்வேதத்தில் யாகக் கிரியைகளின் விளக்கம் கூறப்பப்படுவது இயல்பே.

கிருஷ்ண யசுர் வேதமே வாஜசநேயி சங்கிதையைக் காட்டி லும் பழையது என்பது தெரிகின்றது. யசுர் வேதம் செப்ப னிட்டு உருவாக்கப்பட்ட வேளையில், ஏனைய வேதங்களை நிகர்த்து இவ்வேதமும் மந்திரங்களை மட்டுமே கொண்டமை தல் முறை என்னும் கருத்து மனதில் தோன்றியதனால் போலும், கிருஷ்ணயசுர் வேதம் ஏற்கனவே உருவாகிய இடத் தும் சுக்கில யசுர் வேதம், பிராமணங்கள் வேறாயமைதல் வேண்டும் என்னுங் கொள்கை பற்றி, இருக்கு சங்கிதையை நிகர்த்து அமையும் வண்ணம் நாளடைவில் உருவாக்கப்பட் டது. இவ்விதம் கிருஷ்ண யசுர் வேதம், சுக்கில யசுர் வேதம் என வெவ்வேறு பிரிவுகள் காணப்படுவதனால், இவை காலத் தால் மிகவும் வேறுபட்டவை எனக் கருதுதல் தவறு. இனி இவ்வேதத்தின் இயல்பை நோக்குவோம். வாஜசநேயி சங் கிதையின் உட்பிரிவுகளையும், அமைப்பு முறையையும் இங்கு எடுத்துக் கூறினால், அது ஏனைய பிரிவுகளுடைய கிருஷ்ண யசுர் வேதத்தைப் பற்றியும் அறிவதற்கு ஓரளவிற்கு உதவும். எனவே வாஜசநேயி சங்கிதையைப் பற்றி இங்கு விரிவாகக் கவனிப்போம்.

வாஜசநேயி சங்கிதையில் நாற்பது உட்பிரிவுகள் உண்டு. ஈற்றில் வரும் பதினைந்து பிரிவுகள் காலத்தால் பிந்தியவை யாகக் கருதப்படுவன. முதல் இருபத்தைந்து பிரிவுகள் மிக வும் முக்கியமான வேள்விகளுக்கு வேண்டிய மந்திரங்களைக் கொண்டுள்ளன. முதல் இரு பிரிவுகள் தர்ச பூர்ணமாசத் துக்கு வேண்டிய மந்திரங்களை உடையன. இதைச் சார்ந்த பிண்ட பித்ரு யஞ்ஞத்திற்கு வேண்டிய மந்திரங்களும் இங் குள. மூன்றாம் பிரிவில் நித்தியாக்னி ஹோத்திர மந்திரங்கள் உண்டு. அக்கினியை முதலில் தோற்றுவித்துப் பிறகு அதை வளர்த்துக் காலையிலும் மாலையிலும் நிகழ்த்த வேண்டும். கிரியை கூறப்படும் நான்காம் பிரிவுக்கும் எட்டாம்பிரிவுக்கும் இடையில் வரும் பிரிவுகளில், அக்கினிஹோத்திரத்தைப்பற்றி யும், நான்கு மாதங்களுக்கொருமுறை நடக்கும் சா ர்மாஸ் யம் என்னும் கிரியைப்பற்றியும் எடுத்துக்காட்டப்பட்டிருக் கக்காண்கின்றோம். சோமயாகத்தில் ஓதவேண்டிய மந்திரங்க



ளும் இங்கு காணப்படுவன. சோமயாகத்தில் ஒருநாள் முழு தும் நிகழும் கிரியைகளும் உண்டு. வாஜபேயம் என்னும் வேள்வி முறை ஒரே நாளில் நிகழ்வது. இவ்வேள்வி பெரும் பாலும் வீரர்களாலும், மன்னர்களாலும் வேட்கப்படுவது. இங்கு தேர் ஓட்டப் போட்டி நிகழும். இவ் வேள்வியில்சோம பானம் நிகழும். அரசர்க்கு மட்டுமெனச் சிறப்பாகக் கூறப் பட்டுள்ளது இராஜசூய வேள்வி. இதில் பழைய காலப் பழக்க வழக்கங்கள் பல குறிப்பிடப்பட்டுள்ளன. சில உண்மைகளைக் குறிப்பாக உணர்த்தும் நோக்குடன், போலியாக நிகழும் படை மோதல், தாயவிளையாட்டு, மாந்திரீக நிகழ்ச்சிகள் எல்லாம் இவ்வேதத்தில் இடம் பெற்றுள்ளன. இவ்விருவகைச் சோமயாகங்களைப் பற்றி யசுர் வேதத்தின் ஒன்பதாம் உட் பிரிவுகள் கூறும். குண்டம், வேதி முதலியனவற்றையமைக் கும் பொழுது ஓதவேண்டிய மந்திரங்கள் பதினோராம் பிரிவு முதல் பதினெட்டாம் பிரிவுவரை காணப்படுகின்றன. இது வருஷம் முழுவதுமே தொடர்ந்து நிகழும் நிகழ்ச்சி. இதில் பொதிந்து காணப்படும் உட்பொருள் விளக்கங்களை எல்லாம் பிராமணங்கள் எடுத்து விளக்கிக் கூறுகின்றன. அக்கினி குண் டம் அக்கினியெனவே கூறப்படும். இக்குண்டம் பதினோரா யிரத்து எண்ணூறு கற்களால் கட்டப்படும். அது சிறகுகளை அகலவிரித்து நிற்கும் பறவையை நிகர்த்து நிற்கும். இதை யமைக்கும் விவரங்கள் எல்லாவற்றையும் விரிவாக இப்பிரிவு கள் விளக்கிக் கூறுகின்றன. பத்தொன்பதாம் பிரிவு முதல் இருபத்தோராம் பிரிவுவரை சௌத்ராமணி யாகத்திற்குள்ள மந்திரங்களும், அந்த யாகத்தைப் பற்றிய விவரங்களும் கூறப்பட்டுள்ளன. ஈற்றில் காணப்படும் இருபத்திரண்டாம் பிரிவிற்கும், இருபத்தைந்தாம் பிரிவிற்கும் இடையில் வரும் பகுதிகள் அசுவமேத வேள்வியைப் பற்றிக் கூறுவன.

இவ்வேதத்தின் இறுதியில் வரும் பதினைந்து பிரிவுகளும் காலத்தால் சிறிது பிந்தியவை என்பது எல்லோரும் ஏற்றுக் கொண்டதொன்றே. இதுபற்றியே இப்பகுதிகளைக் 'கிலங்கள்' எனக் கூறுவர். இவை அநுபந்தங்கள் என்பதையே கிலம் என்னும் பெயர் உணர்த்தி நிற்கின்றது. இவற்றை மேலும்

நோக்கினல், அவைகூறும் விஷயங்கள் தெளிவாகும். இருபத்தாறும் பிரிவிலிருந்து, இருபத்தொன்பதாம் பிரிவுவரை உள்ள பகுதிகளில் இது வரை கூறிய பிரிவுகளுடன் தொடர்பு கொண்டுள்ள மந்திரங்கள் அநுபந்தமாக இணைக்கப்பட்டுள்ளன. முப்பதாம் பிரிவில் மந்திரங்களெதுவும் கூறப்படவில்லை. புருஷமேதத்தைப் பற்றிய சுருங்கிய குறிப்பு மட்டும் காணப்படுகின்றது. ஏறக்குறைய நூற்று எண்பத்து நான்மர் இங்கு பலியிடப்படவேண்டியவர் எனக் கூறி, ஒவ்வொருவரையும் தனித்தனி குறிப்பிடுகின்றது. இங்கு கூறப்பட்டிருக்கும் விளக்கங்களிலிருந்து இவ்வாறு பலி நிகழ்ந்ததென்பதற்கு அறிகுறிகளெதுவுமில்லை. இவ்விளக்கங்கள் மறைபொருளாகப் பல உண்மைகளை உணர்த்துகின்றன. இதையே இருக்கு வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் வரும் தொண்ணூருவது சூக்தமும் கூறும். புருஷனை அடிப்படையாகக் கொண்டது இவ்வுலகம் என்ற உண்மையினை உணர்த்துவது இச் சூக்தம். உலகிற் காணும் ஒவ்வொரு பகுதியும் புருஷனின் ஒவ்வோருறுப்பினின்று தோன்றிற்றென்று இச் சூக்தம் எடுத்துரைக்கின்றது. இங்கு புருஷன் உயரிய தத்துவமாகக் கூறப்பட்டுள்ளான். புருஷமேதத்திற் பிரயோகிக்கப்பட வேண்டியதான இம்மந்திரம், உபநிடதம் என்னும் பெயரையும் பெற்றுள்ளது. இந்த யசுர்வேத சங்கிதையின் முப்பத்திரண்டாம் பிரிவும் உபநிடதம் என்ற பெயரில் இதே போன்ற வேறு விஷயங்களைக் கூறுகின்றது. இங்கு பிரஜாபதி புருஷனெவும் பிரமமெனவும் கூறப்படுவன். முப்பத்தி நான்காம் பிரிவில் முதல் ஆறு பாடல்களும் உபநிடதம் என்று கூறப்படும். இதைச் சிவசங்கல்பஉபநிடதம் என்பர். முப்பத்திரண்டாம் பிரிவிலிருந்து முப்பத்தினன்காம் பிரிவு வரை சர்வமேதம் என்னும் வேள்விக்குவேண்டிய மந்திரங்கள் காணப்படுகின்றன. வேட்பவன் இவ்வேள்வியில் தனக்குள்ள பொருளனைத்தையும் தானமாக விநியோகித்துவிட்டுத் துறவறம் மேற்கொண்டு காட்டையடைவன். அங்கு அவன் தன் வாழ்க்கையின் இறுதி நாட்களைக் கழிப்பான். முப்பத்தைந்தாம் பிரிவில் பெரும்பாலும் இருக்கு வேதத்தில் இருந்து எடுக்கப்பட்ட பகுதிகள் உள. இவை ஈமக்கிரியை



களுக்கு வேண்டப்படும் மந்திரங்கள். முப்பத்தாறும் பிரிவிலிருந்து முப்பத்தொன்பதாம் பிரிவுவரையுள்ள பகுதியில் பிரவாக்கியம் என்னும் கிரியைபற்றி விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன. நாற்பதாம் பிரிவில் ஓர் உபநிடதம் காணப்படுகின்றது. இது முக்கிய உபநிடதங்களிலொன்ருன 'ஈசோபநிடதம்' எனப்படுவது. இவை தாம் வாஜசநேயி சங்கிதையின் உட்பிரிவுகள். இச்சங்கிதையின் இறுதியிற் காணப்படும்பகுதிகளிலிருந்து இவை காலத்தாற் சிறிது பிந்தியவையென்பது மிகவும் இலகுவாக ஊகிக்க முடிகின்றது. மந்திரங்களைப் பொறுத்த மட்டில் கிருஷ்ணயசுர் வேதத்தில் முதலரைப் பகுதியை மட்டுமே சுக்ல யசுர் வேதம் நிகர்த்து நிற்பது. காலத்தைப் பற்றிய இவ்வுண்மையை இன்னும் தெளிய வைக்கின்றது.

மந்திரங்களும் இவைபோன்ற பிரயோகங்களுமே யசுர் வேதத்திற் காணப்படுவன. மந்திரங்கள் இருக்குகளெனப்படுவன. இவை தவிர்க்க ஏனைய பகுதிகள் பாட்டாயமையாது, குறுகிய உரைப் பகுதிகளாயமைந்துள்ளன. இவை மந்திரங்களே. இவைதாம் இவ்வேதத்திற்கு எனச் சிறப்பாக எடுத்துக்காட்டத்தகும் பகுதிகள். இவை வேள்வியில் பெரிதும் உபயோகப்படுவன. எனவே இவை 'யசுஸ்' எனப் பெயர் பெறலாயின. இவ்வுரைப் பகுதிகள் ஓசை நயம் மிகுந்து செவிக்கின்பம் விளைவிக்கும் வகையிலமைந்துள்ளன என்பது எடுத்துக் கூருமலே தெரிகின்றது. இவை செய்யுள் நடையிலே இதுகாறும் பயின்றவர்கள் புதிதாக எடுத்துக் கூறும் உரைகள் அல்லவா? இங்கு காணப்படும் பாட்டுக்கள் பெரும்பாலும் இருக்கு வேதத்தினின்றும் எடுக்கப்பட்டவை. இருக்கு வேதத்தில் இருந்து எடுக்கப்பட்ட பாட்டுக்கள் தாமும் முழுவதுமே இங்கு கூறப்படுவதில்லை. மிகமிகச் சிலவற்றையே முழுவதாக இங்கே காணுகின்ருேம். யாகங்களுக்குத் தேவையான மந்திரங்கள் மட்டுமே பிரித்தெடுக்கப்பட்டு இச் சங்கிதையில் சேர்க்கப்பட்டுள்ளன. இம் மந்திரங்கள் மட்டுமின்றி, விளக்கங்களுடனும் கூடி விரிவாக அமைந்துள்ளது கிருஷ்ண யசுர் வேதம். இவ்வமைப்பு முறையினின்

றும் வேறுபட்டு மந்திரங்கள் மட்டும் கொண்டமைவது சுக்கிலயசுர் வேதம். இலக்கிய அமைப்பையும், கூறியுள்ள கருத்துக்களையும் மட்டும் கருத்திற்கொண்டு இவற்றைப் பார்ப்பவருக்குக் கவர்ச்சியளிக்கும் வகையில் சிறப்பியல்பு எதுவும் இங்கு காணப்படுவதில்லை. எனினும் இவ்வேதத்தில் இருக்கின்ற உரைநடைப் பகுதிகள் மிகவும் கவர்ச்சிகரமானவை. இந்நடையின் தோற்றம், வளர்ச்சி முதலியனவற்றை அறியவும் அக்காலத்தில் உரைநடை கையாளப்படு மாற்றை உய்த்துணரவும் வழிகோலும் இப்பகுதிகள், மொழி வளர்ச்சியையறியவும் மிகப்பயன்படுகின்றன. இவ்வகை உரைப்பகுதிகள் தொடக்கத்தில் மிகச் சிறு வாக்கியங்களாக அமைந்து காணப்பட்டன. "இது அக்கினிக்கு உரியது" "அக்கினிக்கு நன்மை உண்டாகட்டும்" என்னும் சிறு வாக்கியங்களை எடுத்துக்காட்டுகளாக இங்கு குறிப்பிடலாம். இத்தகைய பல சொற்றொடர்களில், அக்கினி முதலிய தெய்வங்களைக் குறிப்பன சில; அவற்றின் பெருமைகளை விரித்துக் கூறுவன சில. "நான் சொரியும் அவி குறிப்பிட்ட இத்தெய்வத்தைச் சாரட்டும்! இது எனக்கன்று" என்பன போன்ற கருத்துக்களைக் கூறும் சிறு வாக்கியங்களையும் இங்குக் காணலாம்.

இருக்கு வேத சங்கிதையிற் போன்று, தெய்வங்களின் சிறப்பை விரிவாக எடுத்துக்கூறி, அவற்றின் பெருமையையுணர்த்தும் பகுதிகள் இங்கு கிடையா. யாகங்களில் உபயோகிக்கப்படும் உபகரணங்களே தெய்வங்களுக்குரிய பெருமையையும், சிறப்பையும் பெற்றுவிட்டன. உபகரணங்கள் தெய்வத்தன்மை பெற்றுத் தெய்வங்களாகவே உயர்த்தி மதிக்கப்பட்டன

தூய்மை மிக்க வேள்வித்தீ, கடை கோல்களைக் கொண்டு கடைந்து தோற்றுவிக்கப்படும். இரு கடை கோல்களும் தாய் தந்தையரைத் தனித்தனி குறிப்பன. அவற்றின் நடுவே தோன்றுமக்கினியே இவர்க்குப் பிறக்கும் குழந்தை. இவ்வாறு உருவத்திற் கூறும் குறிப்பு இருக்கு வேதத்திலேயே



காணப்படுகின்றது. இதே போன்ற கருத்துக்களும் இங்கே விரிவாக இடம்பெறக் காண்கிறோம்.

இவ்வேதத்திலுள்ள மந்திரங்கள் பல, வாசிப்போர்க்குத் தெளிவான கருத்துக்களை உணர்த்தாதனவாய், மந்திர சக்தி வாய்ந்தனவாக மட்டும் கொள்ளப்படுன. சில மந்திரங்கள், உச்சரிப்பவர்கள் தம் மனதிலிருக்கும் ஆசைகளை வெளியிட்டுக் கூறுவனவாய் அமைந்துள்ளன. இவ்வகை மந்திரங்கள் இவ் வேதத்திலேயே சிறப்பாகக் காணப்படுவன.

இதே போன்று படிப்பவர்க்கு உடனே புலனாகாது. தெளிவற்றவையாய்—ஆயினும் மறைபொருளாய்க் கருத்தை நுண்ணறிவுடையோர்க்கு மட்டும் உணர்த்தி நிற்கும் பகுதிகளும் இடம்பெற்றுள்ளன.

யசுர் வேதத்தில் உரைநடையிற் காணப்படும் மந்திரங்கள், அதர்வ வேத மந்திரங்களினியல்பு வாய்ந்தவை அதர்வ மந்திரங்களைப் போன்று தீயவற்றை விரட்டி ஓட்டவும், சபிக்கவும் ஆற்றலுடைய மந்திரங்களே இவை. வேள்விக் கிரியைகளிற் சில பகைவனைத் துன்புறுத்தவும் பயன்படத்தக்கவை. இவ்வாறு நன்மையை மட்டுமின்றித் தேவை நேரிடின் தீமையையும் ஏனையோருக்கு விளைவிக்கப் பயன்படுத்தும் வழி வகுப்பது யசுர் வேதம் என்பது தெளிவாகின்றது.

சில நொடிகளும் இங்கு காணப்படுகின்றன. இவை உயரிய தத்துவங்களைக் குறிப்பிடுவன. இவற்றைப் 'பிரமோத்தியம்' எனக் கூறுவர். பிரமோத்தியம் என்னும் இச்சொல், பிரமத்தைப் பற்றிக் கூறும் பகுதி என்பதை உணர்த்தும். இது போன்ற பகுதிகள் இருக்கு வேதத்திலும், அதர்வ வேதத்திலும் காணப் படுவனவே. யசுர் வேதம் கூறும் வேள்வி முறையில் இவை தனியிடம் பெற்றுவிட்டன. இவற்றுட் சில பிராமணங்கள் வேள்விகட்குக் கூறும் உயரிய விளக்கங்களைப் போன்றும், உபநிடதங்களில் காணப்படும் தத்துவக் கருத்துக்களைக் குறிப்பது போன்றும் காணப்படுவன.

இங்கு கூறப்படும் மந்திரங்கள் இருக்கு வேத மந்திரங்களைப் போல் வழிபடுதற்குப் பிரயோகிக்கப்படுவன அல்ல. இவை பெரும்பாலும் தெய்வங்களை ஏத்திப் போற்றிக் கூறும் முறையில் அமைந்திருப்பதையும் நாம் காணுவதில்லை. வேட்பவன் இம் மந்திரங்களைக் கருவியாகப் பயன்படுத்தித் துணைக் கொண்டு தான் விரும்பியவற்றையெல்லாம் நிகழச் செய்வான். வேட்பவர்கள் இவ்வாறு உணவு முதலியவற்றை அவியாகத் தேவர்களுக்கு அளிக்க விரும்புவர்; தேவர்களும் அதை உணவாகப் பெற அவாவுவர். மேலும் கூற வேண்டுவதை நேரே புலனுக்காது, சுருக்கமாக, குறிப்பாக, மறைபொருளாய் உணர்த்துதலையே தேவர்கள் விரும்பினர் என்பதை இந்நூல்களே எடுத்துக் கூறியுள்ளன.

வழிபாட்டு முறையில் புதியதொரு திருப்பத்தை யசுர் வேதம் தோற்றுவித்துள்ளது. பிற்காலத்து வழிபாட்டு முறையில் உயர்ந்ததோர் தனியிடத்தைப் பெற்றுள்ளது. இம்முறை சிறப்பாகத் தென்னாட்டில் பெரிதும் கையாளப்பட்டு வருகின்றது. இதுவும் ஏற்கனவே கூறியவாறு, தெய்வங்களை வசீகரித்துத் தன்வயமாக்கும் முறையைச் சார்ந்து நிற்பதாகவே தெரிகின்றது. தெய்வத்திற்குப் பல பெயர்களைக் கூறும் இப்புதியதொரு முறை யசுர் வேதத்தில்தான் முதன் முதலாகக் குறிப்பிடப்பட்டிருக்கக் காண்கிறோம். இப்பெயர்களிற் சில சிறப்புப் பெயராயமைவன; சில காரணப் பெயர்கள்; சில பொதுப் பெயர்கள்; சில தெய்வங்களின் பண்பை மட்டுங் கூறுவன. இத்தகைய பெயர்கள் நூறாகவும் ஆயிரமாகவும் தொகுக்கப்பட்டுப் புராணங்களிற் காணப்படுகின்றன. தென்னாட்டு வழிபாட்டில் அன்றன்றாடு நிகழும் நிகழ்ச்சியில் இவ்வாயிரம் பெயர்கள் பயன்படுத்தப்படுகின்றன. பெயர்கள் பல கூறும் இம்முறையினை யசுர் வேதத்தில் வரும் 'சதருத்திரியம்' என்னும் பகுதியில் முதன் முதலாகக் காண்கின்றோம். இங்கு உருத்திரனின் நூறு பெயர்கள் கூறப்பட்டுள்ளன.



யசுர் வேதத்தில் சிறப்பியல்பு வாய்ந்த இன்னொரு வகை மந்திரங்களும் உண்டு. இவையும் பலவகை நன்மைகளையும் தீமைகளையும் விளைவிக்கும் ஆற்றல் வாய்ந்தவையெனக் கொள்ளப்படுவன. இவற்றுட் சில ஓரெழுத்தால் ஆனவை. சில இரண்டு அல்லது மூன்றெழுத்துக்களால் ஆனவை. உலகியலில் வைத்துச் சாதாரணமாக நோக்கில், இவற்றிற்கு கருத்தெதையுங் காண்பதரிது. இவை குறிக்குங்கருத்தென்னவென்பதை யறிவதற்கு இவற்றின் அமைப்பு முறை எவருக்கும் இடந்தராது. இவை மிகவும் கவர்ச்சிகரமான குரலில் மனதில் ஆழப்பதியக் கூடியவாறு யாகங்கள் நிகழும் பொழுது உரிய வேளைகளில் ஒலிக்கப்படுவன. இவை மிகவும் தூய்மையானவை; மந்திரசக்தி வாய்ந்தவை. இவைகளில் 'சுவாஹா' என்பது மிக முக்கியமானது. அவியாக ஒவ்வொரு பொருளையும் அக்கினியிற் சொரியும் பொழுது வேட்போர் இதை ஒலிப்பர். இதே போன்று பிதிரர்களுக்கு உணவு அளிக்கப்படும் பொழுது 'சுவதா' என்னும் ஒலி எழுப்பப்படும். இத்தன்மை வாய்ந்த வேறு பல ஒலிகளும் இங்கு இருக்கின்றன. இவை 'வஷட், வேட், வாத்' என்பன. யாகங்கள் நிகழும் பொழுது இவற்றை உரியவாறு பயன்படுத்துவர். இவற்றுட் தனிச் சிறப்பு வாய்ந்தது 'ஓம்' என்பது. "ஓம்" என்பது ஒருவர் மனத்தில் தோன்றிய சம்மதத்தைத் தெரிவிக்கவே முதலில் எடுத்தாளப்பட்டது. இது இன்றுவரை மிகவும் தெய்விகமானதாகவும், உட்கருத்துக்கள் பல பொதிந்து விளங்குவதாகவும் போற்றப்பட்டு வருகின்றது. உபநிடதங்கள் இதைப் 'பிரமம்' எனச் சுட்டுகின்றன. இதற்கடுத்த நிலையில் பூ:, புவ:, சுவ: என்னும் மூன்று அட்சரங்கள் மிகவும் உயர்த்தி வைக்கப்பட்டுள்ளன. இவை விசேடமாகக் கூறப்பட்டவை என்னுங் கருத்தை உணர்த்துவதால் 'வியாகிருதி' எனப்பெயர் பெற்றவை. இம்மூன்றும் விண்ணையும், இடையையும், மண்ணையும் குறிக்க வரும் பெயர்கள் என்பர். வியாகிருதிதான் பிரமம். இதே உண்மை. இதே ஒழுங்கு. "பூ:, புவ:, சுவ: என்னும் இம்மூன்றும் இன்றேல் வேள்வியும் இல்லை" என வேதங்கள் எடுத்தியம்புவன.

பிற்காலத்தில் விரிந்தெழுந்து, பெரிதும் கடைப்பிடிக்கப் பட்டு வந்த 'தந்திர' சாஸ்திரங்களில் இதுபோன்ற 'மந்திரங் கள்' பல கூறப்பட்டுள்ளன. இவை 'ஊம், ஆம், ஹ்ரீம், உம், ஏம், க்ரோம், பட்' முதலானவையாம். இருக்கு, யசுர் ஆகியவற்றின் மூலப்பகுதிகளான பாடல்களையும், உரைப் பகுதிகளையும் குறித்த மந்திரமென்னுஞ் சொல் நாளடைவில் அவை மந்திரசக்தி வாய்ந்த இவ்வொலிகளையே குறிப்பதா யிற்று. ஆனல் யசுர்வேதத்தில் காணப்படுவது பழைய நிலைக் கும், புதிய நிலைக்கும் நடுவிலுள்ள இடை நிலையே.

யசுர் வேதம், இலக்கியம் என்ற முறையில் கவர்ச்சி மிக்க சிறப்பெதுவுமில்லாததெனச் சிலர் கருதலாம். எவ்வாறு யினும் சமய நூல்களில் இதற்குத் தனித்தனி இடம் உண்டு. தத்துவ நூல்களை நன்கு விளங்கவும் இதனறிவு இன்றியமை யாது வேண்டப்படுவதொன்றே. இந்தியச் சமய வளர்ச்சியின் தொடக்க நிலையை மட்டுமல்லாமல் உலகத்துக்கே பொது வான சமய வரலாற்றை எடுத்துக் கூறுவதற்கும் இது பெருந் துணை புரியும். சமய வரலாற்றில் மந்திரங்களுக்குரிய நிலையை விளக்கிக் காட்டவும் இது பெரிதும் பயன்படும். பிற்காலச் சமய நூல்களையும் தத்துவ நூல்களையும் செவ் வனே விளங்க வேண்டின், இவ்வேதத்தை முதலில் படித் தறிதல் வேண்டும். யசுர் வேதத்தை முதலில் விளங்கிக் கொண்டால்தான் பிராமணங்கள் கூறுவதென்னவென்பது எமக்குத் தெளிவாகும். பிராமணங்களையறிந்தவர்களே உப நிடதங்களை அறிய வாய்ப்புடையவர்கள். உபநிடதங்களை அறியாதவர் இவை ஊடுருவி நிற்கும் தத்துவ நூல்களை எவ் வாறு விளங்கும் ஆற்றலைப் பெற வல்லவராவர்?

• •



# VI
# சாம வேதம்



சாமசங்கிதையிலும் பல சாகைகள் இருந்ததாக நாம் அறியக் கூடியதாக இருக்கின்றது. புராணங்களில் ஆயிரம் வகையான சாம சங்கிதைகள் கூறப்பட்டுள்ளன. எனினும் மூன்று சாம சங்கிதைகளே எமக்குக் கிடைத்துள்ளன. இம் மூன்றனுள், 'கௌதும சாமசங்கிதை' பிரசித்தி பெற்றது. இதில் இருபிரிவுகள் இருக்கின்றன. இப்பிரிவுகள் 'ஆர்ச்சிகம்', 'உத்தராார்ச்சிகம்' என்பன. ஆர்ச்சிகம் என்பது பாட்டுக் களின் முதல் தொகுதி எனப் பொருள்படும். உத்தராார்ச்சிகம் என்பதற்குப் பாட்டுக்களின் பின் தொகுதி என்பது கருத்து. ஆர்ச்சிகம் என்னும் பெயர் இங்கு குறிப்பிடப்படுவதிலிருந்து இத்தொகுதியில் பாட்டுக்கள் மட்டுமே காணப்படுவன என் பது தெரிகிறதல்லவா? இங்கு ஆயிரத்து எண்ணூற்றுப்பத்துப் பாட்டுக்கள் இருக்கின்றன. இவை பெரும்பாலும் இருக்கு வேதத்தில் இருந்து எடுக்கப்பட்டவை. சில பாட்டுக்கள் திரும்பத் திரும்ப வருகின்றன. இவ்விரு பகுதியில் இப்படித் திரும்ப வருவனவற்றை நீக்கிக் கணக்கிடுவோமேயானல் ஆயிரத்து ஐநூற்று நாற்பத்தொன்பது பாட்டுக்கள் இருக் கின்றன என்பது தெளிவாகின்றது. இவற்றுள் எழுபத் தைந்து பாடல்களைத் தவிர ஏனைய எல்லாம் இருக்கு வேதத்தி லிருந்தே எடுக்கப்பட்டன. இப்பாடல்கள் தாமும் இருக்கு வேதத்தில் எட்டாம் ஒன்பதாம் மண்டலங்களிலே வருவன. இவை பெரும்பாலும் காயத்ரி யாப்பு முறைக்கு அமைய ஆக்கப்பெற்றுள்ளன.'காயத்ரியும்','ஜகதியும்' ஒன்று கலந்து வரும் 'பிரகதா' என்னும் யாப்பு முறைக்கிணங்க அமைந்த பாட்டுக்களும் சில உள. இவ்வாறு காணப்படும் பாட்டுக்கள் நெடுங் காலமாக ஓசை நயத்துடன் பாடுவதற்காகவே ஆக்கப்பட்டன எனத் திடமாகக் கருத இடம் உண்டு. இருக்கு வேத சங்கிதையில் காணப்படாத எழுபத்தைந்து பாடல் களுட் சில வேள்வி முறை கூறும் ஏனைய நூல்களிலிருந்து எடுத்துத் தொகுக்கப்பட்டுள்ளன. சிலவற்றை எங்களுக்கு

இன்று அகப்படாததான ஏனைய சாகைகளிலிருந்து எடுத்து, இருக்கு வேதத்திலிருக்கும் பகுதிகளுடன் கலந்து இவ்வேதம் வகுத்தவர் அமைத்துள்ளனர். இருக்கு வேதத்தில் எடுக்கப்பட்டுச் சாம வேதத்தில் இடம் அளிக்கப்பட்ட பகுதிகளில் பாட்டுக்களைத் திரிபு படுத்தப்பட்ட வெவ்வேறு நிலைகளில் நாம் காண்கிறோம். இவை மிகவும் பழைய சாம சங்கிதையிலிருந்து எடுக்கப்பட்டனவா எனச் சந்தேகிக்கப்படுகின்றது. காரணம் எதுவுமின்றி, வேண்டுமென்றே அன்றித் தானாக நிகழ்ந்த திரிபினாலோ இவ்வகை வேறுபாடுகள் தோன்றியிருக்கலாம். என 'ஔப்ரெச்ட்' என்னும் அறிஞர் கருதுகின்றார். இசை அமைக்கும் நோக்குடன் பாட்டுக்களைப் பிரித்து வகுக்கும் பொழுது இவ்விதம்திரிபுகள் நிகழ்வது இயற்கையே. சாமவேதம் முழுவதிலுமே பாட்டுக்கள் துணைக் கருவிகளாகக் கருதப்படுகின்றன. இங்கு இசையே முக்கியம். இவ்வேதத்தின் இரு பகுதிகளும் இசையறிவைப் பெருக்குதலைத் தனி நோக்கமாக உடையன. இவ்வேதத்தை ஓதுவதற்கு உரிமை உள்ளவனை 'உத்காதாவாகப்' பயிற்சி பெறுபவன் முதன் முதலாக இராகங்களைப் பாடும் அறிவைப் பெறுதல் வேண்டும். இதைப் பெறுவதற்குத் துணைபுரிவது ஆர்ச்சிகம். இவ்வார்ச்சிகத்தை அறிந்த பின்னரே இதைப் போற்றிக் கூறும் பாட்டுக்கள் அனைத்தையும் மனனஞ் செய்தல் முறை. வேள்விகளில் பயன்படும் இப்பாடல்கள் உத்தரார்ச்சிகத்தில் அடங்கியுள்ளன.

சாம வேதத்தின் முதற்பகுதியான ஆர்ச்சிகத்தில் ஐநூற்றெண்பத்தைந்து தனிப் பாட்டுக்கள் (இருக்குக்கள்) உண்டு. இவற்றிற்குப் பலவகையான 'சாமங்கள்' (இசைகள்) இருக்கின்றன. இவை வேள்விகளில் பயன்படுவன. சாமம் என்ற சொல் பாடுவதற்கென்றே தொகுக்கப்பட்ட இம்மூன்றும் வேதத்தைக் குறிப்பினும், இராகம், இசை என்ற கருத்துக்களையே இயல்பாக உணர்த்தும். இன்ன இராகம் இப்பாட்டில் அமைத்துப் பாடப்படுகின்றது எனக் குறிப்படும் வழக்கம் நம்மிடை இன்றும் வழங்கிப் பாட்டுக்கும் இசைக்கும் இடையில் உள்ள தொடர்பை எடுத்துக் கூறுகி



இசை தோன்றுவதற்கு நிலைக்களனாய் விளங்குவது பாட்டு என்ற இக்காரணத்தினாலே பாட்டில் இருந்து இசைதோன்றுவதாகக் கருதப்பட்டது. இருக்கு எனப்படும் பாட்டே யோநி எனப்படும். யோநி என்பதற்குக் கரு என்றும், தோற்றும் இடம் என்றும் பொருள் உண்டு. ஒரே பாட்டுப் பல இராகங்களில் பாடத்தக்கது. ஓர் இராகத்தைப் பல பாடல்களில் இசைக்க முடியும். இவ்வாறாயினும் இங்கு காணப்படும் பாட்டுக்களிற் சில கருவாய் அமைந்த பாடல்களாய்க் கருதப்பட்டுக் குறிக்கப்பட்ட இராகங்களில் மட்டுந்தான் பாடப்படலாம் என விதிக்கப்பட்டுள்ளது. எனவே, ஆர்ச்சிகங்களை ஐநூற்று எண்பத்தைந்து யோநிகளின் தொகுதி எனவுங் கூறலாம். இவை ஏறக்குறைய இரு மடங்கான இராகங்களிற் பாடப்படுவன.

உத்தராச்சிகத்தில் நானூறு பாடல்கள் உண்டு. ஒவ்வொரு பாடலிலும் மும்மூன்று பாட்டுக்கள் இருக்கின்றன. இதிலிருந்துதான யாகங்களிற் பாடப்படவேண்டிய பாட்டுக்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. ஆர்ச்சிகத்தில் சில பாட்டுக்கள் காப்பு முறைபற்றி அமைக்கப்பட்டுள்ளன. சில தெய்வங்களை அடிப்படையாகக் கொண்டு வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. அக்கினி, இந்திரன், சோமன் முதலிய தெய்வங்கள் மீது உள்ள பாடல்கள் ஒன்றன் பின் ஒன்றாக வருவதைக் காணலாம். உத்திரார்ச்சிகத்தில் பலவகை வேள்விகளை அடிப்படையாகக் கொண்டுதான் பாட்டுக்கள் சேர்த்து வைக்கப்பட்டுள்ளன. முழுப்பாடல்களும் உத்தரார்ச்சிகத்தில் காணப்படுகின்றன. இப்பாடல்களில் அமைத்துப் பாடவேண்டிய இராகங்கள் பாடுபவருக்கு ஏற்கனவே தெரிந்திருத்தல் அவசியம். இதிலிருந்து உத்தரார்ச்சிகம், ஆர்ச்சிகத்தைக் காட்டிலும் காலத்தால் பிந்தியது என்பதை ஆராய்ச்சியாளர் எடுத்துக் காட்டுவர். ஆர்ச்சிகத்தில் உத்தரார்ச்சிகத்தில் வரும் பாட்டுக்களிற் காணப்படாத பல யோநிகள் உண்டு. எனவே, பல இராகங்களும் உண்டு எனக் கூறலாம். உத்தராச்சிகத்தில் வரும் சில பாட்டுக்களின் இராகங்கள் ஆர்ச்

சிகத்தில் கூறப்படவில்லை. இதெல்லாம் உத்தரார்ச்சிகம் ஆர்ச்சிகத்திலும் காலத்தாற் பிந்தியது என்னும் உண்மை யையே வலியுறுத்தும். எனினும் உத்தரார்ச்சிகம் இன்றியே ஆர்ச்சிகம் மட்டும் கூறவேண்டியதெல்லாவற்றையும் நிறைவு படுத்தவல்லதன்று. சாமம் கற்போர் முதலில் ஆர்ச்சிகம் கற்றுப் பாடப் பயிலுதல் வேண்டும். பின் உத்தரார்ச்சிகம் பயின்று சிறந்த உத்காதாவாக விளங்கலாம்.

சாம சங்கிதையின் இவ்விரு பகுதிகளும் சிதைவின்றி—வேறுபாடுகள் எதுவும் தோன்றாது பேணப்பட்டுப்—பழைய நிலையிலேயே இன்றுங் காணப்படுவன. அவற்றின் இராகம் முதலியவற்றைப் பயிற்றுவிப்பவரிடம் இருந்து அவர் வாயால் பாடக்கேட்டுப் பயில்வதே, இச் சங்கிதையைப் பயில்பவர்கள் கையாள வேண்டும் முறை. இவ் வேதத்தை ஓதும்வேளை ஓதுபவர்கள் துணைக்காக ஏதாவது இசைக் கருவி யையும் பயன்படுத்தி இருக்கலாம் என ஊகிக்க முடிகின்றது. சாம வேதத்தில் வரும் கானங்கள் என்னும் பகுதி இரா கங்களை இன்னவை எனக் குறிப்பிடுகின்றது; இது இசையை யும் விளக்கிக் கூறுகின்றது. இது பிற்காலத்தில் இயற்றப் பட்டது. 'அக்ஷரங்களை' நீட்டியும் சிலவற்றைத் திருப்பித் திருப்பிக் கூறியும் சில சொற்களை மேலதிகமாக உள்ளே நுழைத்தும் சாமகானம் நிகழ்த்தப்படும். இவ்வாறு உள்ளே நுழைக்கப்படுவனவற்றிற்கு 'ஸ்தோபங்கள்' எனப் பெயர் உண்டு. சாமம் பாடும் பொழுது பாடுபவர்கள் தம் வலக்கை விரல்களை ஒன்றாக நெருக்கி நீட்டிப் பிடித்து, அதன்பின், கையை மேலே உயர்த்தியும் கீழே தாழ்த்தியும் இசை பெருக் கிப் பாடுவர். ஆர்ச்சிகத்துடன் இரு பகுதிகள் இணைக்கப் பட்டுள்ளன. ஒன்று 'கிராமகேய கானம்.' மற்றது 'அரண்ய கானம்.' அரண்ய கானப் பகுதியுள் உள்ளவை பயங்கரமான வையும், தீமை விளைவிக்கக் கூடியவையுமாம். இவை கிரா மங்களிற் படிக்கத் தகாதவை. இதைப் படிப்பவர்கள் காடு களில் ஒதுக்குப் புறங்களில் வைத்தே இவற்றைப் படிப்பர். இதை விட இன்னும் இரு பிரிவுகள் உண்டு. இவை ஊஹ கானம், உஹ்யகானம் என்பன. இவை யாகங்களிற் பயன் படும் வண்ணம் பாட்டுக்களைக் கொண்டு அமைந்து விளங்கு வன. இவை இரண்டும் ஏற்கனவே குறிப்பிடப்பட்டுள்ள கிராமகேய கானத்துக்கும், அரண்ய கானத்துக்கும் தொடர்பு கொண்டு விளங்குவன.



ஒருகாலத்தில் இராகங்கள் பலவாக இருந்திருக்கலாம். அவ்வாறாயின் இவை ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பெயர் இருந்தென என்று ஊகிக்க இடம் உண்டு. இப்பெயர்கள் எல்லாம் 'கல்ப சூத்திரங்களில்' குறிப்பிடப்பட்டுள்ளன. இப் பெயர்களனைத்திற்கும் தனித்தனி சிறப்பான கருத்துக்கள் உண்டு. பிராமணங்களிலும், ஆரணியகங்களிலும், உபநிட தங்களிலும் கூட இவை உள்ளுறையான கருத்துக்களைக் கூறி நிற்பன. இவற்றுள் 'பிருஹத்' 'இரந்தரம்' என்னும் இரண்டும் இருக்கு வேதத்திலேயே குறிப்பிடப்பட்டுள்ளன.

இந்திய வேள்வி முறையின் வரலாற்றை எழுதுபவர்க ளுக்குச் சாம சங்கிதை பல விஷயங்களை எடுத்துக்கூறும். இவ் வேதத்துடன் இணைத்துக் கூறப்படும் கானங்கள் இந்திய சங்கீதத்தின் வரலாற்றை உருவாக்கப் பெரிதும் பயன்படும். எனினும், இதுவரை இவ்வாறு பயன்படுத்தி இத்துறையில் முன்னேறக்கூடிய வகையில் ஒருவரும் முழுமனதுடன் ஈடுபட வில்லை. எவ்வாறாயினும், ஏனைய வேதங்களிற் காணப் படாது, இவ்வேதத்தில் மட்டும் சிறப்பாய் அமைந்து இலக் கியச் சுவை பயக்கும் பகுதி இது எனச் சுட்டிக் கூறுவதற்கு எதுவும் இல்லை.

● ●

ஒவ்வொரு வேதத்திலும் சங்கிதையை அடுத்துக் காணப்படும் பகுதிகள் 'பிராமணங்கள்' எனப்படுவன. இவை மிகவும் விரிந்த நூல்கள். இந்நூல்களுக்கு இந்திய இலக்கிய வரலாற்றில் முக்கிய இடம் உண்டு. சாதாரணமாக இதை வாசிப்பவர்களின் மனதைக் கவரவல்ல சிறப்புக்கள் இங்கு கிடையா. பிராமணங்கள் வேள்வி பற்றிய விளக்கங்களை மட்டுமே கூறுவதனுலும், அவ்விளக்கங்களை மிகவும் விரித்துக் கூறுவதனுலும் சமய அறிவை நாடி நிற்பவர்கள் மட்டுமே இதைப் பொறுமையுடன் ஆறி அமர்ந்து முழுதாக வாசிக்கலாம். இவை யசுர் வேதத்தைக் காட்டிலும் விரிவாக அமைந்துள்ளன. சமய நூல்களையும், தத்துவ நூல்களையும் விளக்குவதற்கு இவற்றின் அறிவு இன்றியமையாதது. இந்திய சமயங்களின் உண்மை நிலையினை நன்கு விளக்குவதற்கும் இவை வேண்டப்படுபவை. வேள்வி முறை தோன்றி வளர்ந்த வரலாற்றையும், விளக்கிக்கூற இவை பெரிதும் உதவுவன.

பிராமணம் என்ருல், வேள்வித் துறையில் வல்லவர்கள் கிரியைகளைப் பற்றி விரித்துக் கூறும் விளக்கம் எனப் பொருள் படும். இது தொகுத்துச் சுட்டும் பொதுப் பெயராக அமைவதுடன், பலர் கூறிய விளக்கங்களால் உருவான நூல் என்பதையும் உணர்த்தும். எனவே, இவ்விலக்கியம் பலர் கூறிய விளக்கங்களின் தொகுதி என்பது தெளிவாகின்றது. இந்நூலில் வேள்விகளுடன் தொடர்பு பெருத பகுதிகளே கிடையா. உலக அமைப்பைப் பற்றிய குறிபபுக்கள், பழைய வரலாறுகள் முதலியன இங்கு காணப்படுவது உண்மையே. எனினும், இவை வேள்விகளுடன் ஏதாவது தொடர்பு கொண்டு காணப்படுவன. வேள்விகளின் இயல்புகளுள் எதை யாவது விளக்கிக் காட்டவே இவை இங்கு எடுத்துக் கூறப் பட்டுள்ளன. பிராமணங்கள் கூறும் வேள்விகளின் விளக்கங்

களையே யசுர் வேதத்தைச் சார்ந்த வாஜசநேயி சங்கிதையும் கூறுகின்றது. ஆனால், யசுர் வேதம் இவ்விஷயத்தைச் சுருக்கமாகக் கூறும். பிராமணங்களோவெனின் வேள்விக் கிரியைகளைப் பற்றித் தனித்தனி விவரங்களை விரிவாகத் தருவன. கிரியைகளுக்குள் ஒன்றுக்கொன்று உள்ள தொடர்பும், மந்திரங்களுக்கும், கிரியைகளுக்கும் இடையில் உள்ள தொடர்பும் இங்கு கூறப்பட்டுள்ளன. இவ்வாறு கூறுமிடங்களில் எல்லாம் மந்திரங்கள் முழுவதும் கூறப்படுவதில்லை. அவற்றின் தொடக்கமாக வரும் தலைப்பு மட்டுமே சுருக்கமாகக் குறிப்பிடப்படும். மந்திரங்கள் முழுவதுமே கூறப்படும் இடங்களும் சில உள. பிராமணங்கள், மந்திரங்களுடன் கிரியைகள் கொண்டுள்ள தொடர்பை மட்டுமின்றி இவை உணர்த்தும் 'மறை பொருட் கருத்துக்களை'யும் கூறுகின்றன. கிரியைகளைப் பற்றிய கருத்துக்கள் வேறுபடுத்திக் கூறப்படும் இடங்களில் எல்லாம் இத்துறையில் வல்லவர்கள் கொண்டுள்ள அபிப்பிராயங்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கூறி ஆராய்ந்து முடிவு கொள்ளப்படுகின்றது. கிரியை முறைகள் பரந்த தேசத்தின் பல பாகங்களில் வழக்கிலிருப்பது அனைவருமறிந்ததே. இதனால் கிரியை முறைகள் இடத்திற்கிடம் வேறுபட்டுக் காணப்படும். இவற்றின் விவரங்களும் அவை வேறுபடும் முறையும் இங்கு கூறப்பட்டுள்ளன. கிரியைகள் எவ்வாறு சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு திருத்தி அமைக்கப்படுவன என்பதைச் சில பகுதிகள் விளக்கிக் கூறும். யாகத்தில் நிகழும் ஒவ்வொரு கிரியையும் எடுத்துக் கூறும் பொழுதெல்லாம் அததற்கு உரிய 'தட்சணையையும்' இந்நூல்கள் வரையிட்டுக் கூறக் காண்கின்றோம். மேலும், வேட்பிப்பவர்கள் வேள்விகளின் மூலம் இம்மையிலோ மறுமையிலோ அடையக்கூடும் பெறுபேறுகளும் விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன. சுருங்கக் கூறின், பிராமணங்கள் யாகங்களைப் பற்றிய பல்வகை அறிவை விளக்கவல்ல பெரும் நூல்கள் எனலாம்.

பிராமணங்கள் எண்ணிறந்தவைகளாக அக்காலத்தில் இருந்தன எனக் கருத இடம் உண்டு. பரம்பரையாக வழக்கில் இருந்துவரும் வரலாற்றை ஆதாரமாகக் கொண்டு



இதை நாம் ஊகிக்க முடிகின்றது. இதைவிட எமக்குக் கிடைக்கக்கூடிய பிராமணங்களிலேயே வழக்கொழிந்த இவ்வகை நூல்கள் பலவற்றில் இருந்து எடுத்துத் தரப்பெறும் மேற்கோள்கள் பல காணப்படுகின்றன. இப்பொழுது எமக்குக் கிடைக்கக்கூடிய பிராமணங்களும் பெருந்தொகையினவே. இந்தியாவில் எழுந்த நூல்களுள் விரிவாக அமைந்து காணப்படும் நூல்களை எடுத்து நோக்குவோமேயானால் இவ்விரிந்த நூல்களுள் பிராமணங்களும் முக்கியமான இடம் வகித்து நிற்பதைக் காண்போம். நான்கு சங்கிதைகளையும் தனித்தனி சார்ந்து பிராமணங்கள் இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு சங்கிதைக்கும் அததற்குரிய சாகைகளை அனுசரித்தே பிராமணங்கள் பலவாகப் பெருகிக் காணப்படுவன. கிருஷ்ண யசுர் வேதத்தில் ஏனைய சங்கிதைகளிற் போன்று, மந்திரங்கள் மட்டுமின்றி யாகங்களின் பொருளும், அவற்றின் நோக்கமும், அவை பற்றிய பலரின் அபிப்பிராயங்களும் இடம்பெற்றுள்ளன என்பது ஏற்கனவே எடுத்துக் கூறப்பட்டது. யசுர் வேதத்தில் பிராமணங்களை நிகர்த்து விளங்கும் இப்பகுதிகளையே பிராமணங்களின் முதற்றொடக்கமாகக் கூறலாம். கிருஷ்ண யசுர் வேதத்தில் காணப்படும் விளக்கங்கள் மந்திரங்களுடன் தொடர்பு பூண்டவையாய் அவற்றையும் அவற்றின் பிரயோகங்களையும் விளக்கிக் கூறுகின்றன. இதை அடுத்து, ஒவ்வொரு சங்கிதையில் உள்ள மந்திரங்களை விளக்கிக் கூறும் முறையும் இதே வகையில் உருவெடுத்தது. நாளடைவில், சங்கிதைகள் எல்லாமே தனித்தனி பிராமணங்களைக் கொண்டு அமைதல் வேண்டும் என்னும் நியதி ஏற்பட்டது. இது பிராமணங்கள் எண்ணிறந்து பெருகிக் காணப்படுவதன் காரணத்தை மட்டுமின்றி, சில காலத்தால் மிகவும் பிந்தியவை என்பதையுங் குறிப்பிடுகின்றது. சாம வேதத்தின் பிராமணங்களை நோக்கினால் அவை பழைய பிராமணங்களைப் போலல்லாமல் வேதாங்கங்களாகவே அமைந்து காணப்படுவது தெளிவாகும். இது இப்பிராமணங்கள் பிந்திய காலத்தவை என்பதை வற்புறுத்தும். அதர்வ வேதப் பிராமணமாகிய 'கோபத பிராமண'மும் இத்தகையதே. அதர்வ வேதம் வேதமாகக் கொள்ளப்பட்டு

வேத இலக்கியத்தில் இடம்பெற்ற பொழுது ''பிராமணங்கள் வேதங்களின் இன்றியமையா உறுப்புக்கள்; இவை இல்லாத வேதங்கள் வேதமாகா'' என்னுங் கொள்கை நிலவியமையி னுற் போலும், அதர்வ வேதத்தை வேதம் என நிலை நிறுத் தும் நோக்குடன் இப்பிராமணம் தோன்றி அதர்வ வேதத் துடன் இணையும் வாய்ப்பு ஏற்பட்டது. பிராமணங்களுள் முக்கியமானவை பின்வருமாறு: இருக்கு வேதத்தைச் சார்ந் தவை 'ஐதரேய பிராமணம்', 'கௌஷீதகி பிராமணம்' என் பன.' 'தாண்டிய மகா பிராமணமும்' 'ஷட்விம்ச பிராமண மும்' ஜைமி நீய பிராமணமும்' சாம வேதப் பிராமணங்கள். யசுர் வேதப் பிராமணங்கள் இரண்டனுள் ஒன்முன 'நைத் திரீய பிராமணம்' கிருஷ்ண யசுர் வேதத்தைச் சார்ந்தது. மற்றதான சதபத பிராமணம் சுக்கில யசுர் வேதத்தின் பாற்படுவது.

ஐதரேய பிராமணத்தில் நாற்பது அத்தியாயங்கள் உண்டு. ஒவ்வொரு தொகுதியும் ஐவைந்து அத்தியாயங்க ளைக் கொண்டு வரும் வண்ணம் இப்பிராமணம் எட்டுப் பகு திகளாக வகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பகுதியும் 'பஞ்சி கை' எனப்படும். 'மஹிதாச ஐதரேயர்' இதை இயற்றியவர் எனக் கர்ண பரம்பரையான வரலாறு கூறும். இப்பிராமணங் களில் காணப்படும் விஷயங்கள் 'சோமயாகம்' 'அக்கினி ஹோத்திரம்' 'ராஜசூயம்' முதலியனவாம்.

கௌஷீதகி பிராமணம், சாங்காயன பிராமணம் எனவும் பெயர் பெறும். இதுவும் இருக்கு வேதத்தைச் சார்ந்தது இங்கு காணப்படும் முப்பது அத்தியாயங்களில் முதல் ஆறு அத்தியாயங்கள் அக்கினி சயனம், அக்னிஷ்டோமம், தர்ச பூர்ணமாசம், சாதுர்மாஸ்யம் முதலியவற்றைப் பற்றிக்கூறும் எஞ்சிய இருபத்திநான்கு அத்தியாயங்களில்'சோமயாகம்'பற் றிக் கூறப்பட்டுள்ளது. இது பெரும்பாலும் ஐதரேயப் பிரா மணங் கூறுவதை நிகர்த்து நிற்கின்றது. ஐதரேயத்தின் நின் றும், கௌஷீதகி காலத்தாற் பிந்தியது. ஐதரேயம் ஒருவரின் தனி ஆக்கமன்று; இது தொகுப்பு நூலே. கௌஷீதகி அங் ஙனமன்று. இது ஒழுங்கு பற்றி அமைந்த தனி நூலாக விளங்குவது.



தாண்டிய மகாபிராமணம் பஞ்ச விம்ச பிராமணம் என வும் பெயர் பெறும். இருபத்தைந்து பிரிவுகளைக் கொண்டு அமைந்திருப்பதனுல் இது பஞ்ச விம்ச பிராமணம் எனப் பெயர் பெற்றது. இது பிராமணங்களுள் மிகப் பழையது என்பர். பழைய வரலாறு ஒன்று இங்கு உண்டு. விராத்தியர் எனப்படுவோரைப் பிராமணருடன் இணைக்கும் விராத்தியஸ் தோமம் இங்கு கூறப்பட்டுள்ளது. ஷட்விம்ச பிராமணம் இதன் தொடர்ச்சியாக-அதாவது இருபத்தாருவது பிரிவாக அமைந்துள்ளது. இதன் இறுதியிற் காணப்படும் பகுதியை அற்புதப் பிராமணம் என்பர். இது வேதாங்கம் போன்று அமைந்து அற்புதநிகழ்ச்சிகளையும் சில சூசகங்களையும் பற்றிக் கூறும்.

ஜைமிநீய பிராமணம், தாண்டியமகாபிராமணத்திலும் பழைய நூல். வரலாறுகள் பல இங்கு கூறப்பட்டிருப்பத ஞல், சமய வரலாற்று நூல் எழுதும் பொழுது இது பயன் படும். ஆயினும் இப்பிராமணம் முழுவதும் கைக்கெட்டாது மறைந்து விட்டது. இதன்பகுதிகள் மட்டுமே கிடைத்திருக் கின்றன.

தைத்திரீய பிராமணம் கிருஷ்ண யசுர் வேதத்தைச் சார்ந்த தைத்திரீய சங்கிதையின் தொடர்ச்சியே. இப்பிரா மணம் கிருஷ்ண யசுர் வேத சங்கிதையிலேயே இடம் பெற் றுள்ளது; இச் சங்கிதையின் இறுதியிற் சேர்க்கப்பட்டதே தைத்திரீய பிராமணம், இங்கு புருஷ மேதம் கூறப்பட்டுள் ளது. இப் புருஷ மேதம் சங்கிதையில் காணப்படாதது குறிப்பிடத்தக்கது.

சுக்கில யசுர் வேதப் பிராமணமாகிய சதபதப்பிராமண தில் நூறு அத்தியாயங்கள் உண்டு. நூறு வழிகளையுடைய பிராமணம் என்பது இதன் பெயர் உணர்த்தும் கருத்து. பிராமணங்கள் எல்லாவற்றுள்ளும் விரிந்தது மட்டுமல்லா மல் முக்கியமானதாகவும் இதுஅமைந்துள்ளது. கண்வசாகை மாத்யந்தின சாகை என இரு சாகைகளையுடையது இப்பிரா மணம். மாத்யந்தின சாகை பதினுன்கு காண்டங்களையுடை

யது. வாஜசநேயி சங்கிதையின் முதல் பதினெட்டுப் பிரிவுகளின் விளக்கமாக இப் பிராமணத்தின் முதல் ஒன்பது காண்டங்களும் விளங்குகின்றன. பதினான்காவது காண்டத்தின் இறுதியில் யாஞ்ஞவல்கியர் சதபதப்பிராமணத்தை இயற்றியவர் எனப்படுகிறார். இவர் கொள்ளுங் கருத்துக்களே பிராமணங்களில் இறுதியாகக் கூறப்படும் துணியாகக் கொள்ளபடுகின்றது. ஆறுங் காண்டத்திலிருந்து ஒன்பதாங் காண்டம் வரை உள்ள நான்கு காண்டங்களிலும் அக்கினி சயனம் கூறப்படுகின்றது. இங்கு கொள்ளப்படும் முடிவுகள் எல்லாம் சாண்டில்யர் வாயிலாகக் கூறப்படுகின்றன. பத்தாம் காண்டம் அக்கினி ரஹஸ்யத்தை விளக்கிக் கூறும். பதினோராவது காண்டம் முதல் பதினான்காம் காண்டம் வரை உள்ள பகுதிகளில் ஏற்கனவே கூறப்பட்ட பகுதிகளுக்கு அநுபந்தங்களாகக் கூறப்படும் விஷயங்களுடன் உபநயனம், ஸ்வாத்யாயம், ஈமக்கிரியைகள், அசுவமேதம், புருஷமேதம், சர்வமேதம் முதலியன பற்றிப் பல விளக்கங்களும் காணப்படுகின்றன. இதன் ஈற்றில் பிருகதாரணியக உபநிடதம் இடம் பெற்றுள்ளது.

பிராமணங்கள் வெவ்வேறு வேதங்களைச் சார்ந்து பல உருவங்களில் காணப்படினும் இவற்றுள் காணப்படும் வேற்றுமைகள் மிகச் சிலவே. தாம் சாரும் வேதத்திற்கு ஏற்பத் தனி இயல்பு தாங்கி அமைதலே இவற்றின் சிறப்பு. இது எவ்வாறு உள்ளது என்பதை நோக்குவோம். இருக்கு வேதத்தைச் சார்ந்த பிராமணங்கள் இருக்கு வேத மந்திரங்களை யாகங்களில் ஓதும் கடப்பாடுடைய ஹோதாவுக்கு வேண்டிய கிரியைகளைக் கூறுதலைக் குறிக்கோளாக உடையன. அங்ஙனமே சாமவேதப் பிராமணங்கள் சாமம்பாடுஉத்காதாக்கள் செய்யும் கிரியைகளைக் கூறுவன. அத்வர்யுக்கள் ஆற்றுங் கிரியைகளை கூறுவன யசுர் வேதப் பிரமணங்கள். இவ்வேறுபாடுகள் மட்டுமே உடைய பிராமணங்களில் பொதுவாகக் காணப்படும் பண்புகள் பல உள. இவை எல்லாம் ஒரேஇயல்பினவாய் யாகங்களையும், அவற்றுடன் தொடர்புள்ள விஷயங்களையும், மட்டுமே கூறுவனவாய் தாம் கூறும் விஷயங்களைத் தமக்குரிய முறையிலேயே விளக்கும் மரபினவாய் சங்கிதைகளுக்கு விரிவுரைகளாய்த் தமக்கென உரிய பொதுவான சாயல் பதிந்து விளங்குகின்றன. பிராமணங்களில் ஐம்பதுக்கு அதிகமான ஆசிரிய பரம்பரைகள் கூறப்பட்டுள்ளன. இப்பரம்பரையினரது பெயர்களை விட வேறு பலரது பெயர்களும் பல பிராமணமாக எடுத்துக் கூறப்படும் பொழுதெல்லாம் குறிப்பிடப்பட்டுள்ளன. பிராமணங்களைத் தொகுத்து அமைத்தவரும், ''வேள்வி முறை தோன்றியது பன்னெடுங் காலத்துக்கு முன்னரே'' என்பர். வேள்வி முறை தோற்றம் பெற்று வளர்ந்து பிராமணங்களிற் சுட்டப்படும் நிலையை எய்தப் பல நூற்றாண்டுகள் ஆகியிருக்கும் என்பது தெளிவாகத் தெரிகின்றது.



பிராமணங்கள் இவ்வாறு தோன்றி வளர்ந்த நூற்றாண்டுகள் எவை என வரையிட்டுக்கூறுதல் முடியாது. சங்கிதைகளின் காலம் எங்ஙனம் முடிவாகக் கூறப்படவில்லையோ அங்ஙனமே பிராமணங்களின் காலத்தையும் உரியவாறு மட்டிட்டுக் கூற முடியாது. எனினும் இதிலிருந்து ஒருண்மை மட்டும் தெளிவாகின்றது. பிராமணங்கள் வேள்வி ஆற்றும் முறையை விளக்கிக் கூறத் தொடங்கிய காலத்துக்கு மிகவும் முன்பே இருக்கு வேத சங்கிதையிற் காணப்படும் பாட்டுக்கள் உருவம் பெற்று விளங்கின. இவ்வாறு நிலை பெற்றுப் பிரசித்தி பெற்ற பாடல்கள் தாம்நாளடைவில் வேள்விமுறை தோற்றுவதற்குக் காரணமாய் அமைந்தன. மேலும், பிராமணங்களில் யாகங்களைப் பற்றி எழுந்துள்ள ஊகங்களும் விளக்கங்களும், மந்திரங்கள் நிறைந்த அதர்வ வேதத்தின் பெரும்பாலான பாடல்களையும், யசுர்வேதத்தின் பெரும் பகுதியையும், இசையின் தோற்றுவாயான சாம வேதத்தையும் விடப்பிற்காலத்தன என்பதை எல்லோரும் ஒருமுகமாக ஏற்றுக்கொள்ளுவர். யசுர் வேத சங்கிதையும் அதர்வ சங்கிதையும் பெரும்பாலும் பிராமணங்கள் உருவேற்ற காலத்திலே தொகுக்கப்பட்டிருக்கலாம். எனவே, பிற்காலத்தைய எனக் கருதப்படுவனவும் சங்கிதையிற் காணப்படுவனவுமான சில

பகுதிகளும், பிராமணங்களின் தொடக்க காலத்தனவான
பழைய பகுதிகளும் ஏறக்குறைய ஒரே காலத்தன எனக் கூற
லாம். மேலும், அதர்வ சங்கிதையும், யசுர் வேத சங்கிதை
யும் பிரதிபிம்பிக்கும் பண்பாடு, வாழ்க்கை நிலை இவை சுட்
டும் நிலப் பரப்பு முதலியன பிராமணங்களில் கூறப்பட்
டுள்ள பண்பாடு, வாழ்க்கை நிலை முதலியவற்றை நிகர்த்து
நிற்பன. இருக்கு வேதம் காட்டும் பண்பாடு முதலியனவோ
வெனின் அப்படியல்ல. இவை பிராமணங்கள் கூறுவதின்
நின்றும் மிகவும் பழையவை எனக் கூறுமளவிற்கு வேறுபட்
டுள்ளன. இருக்கு வேதங் கூறும் நிலப்பரப்பு இந்து நதிப்
பிரதேசத்தைச் சார்ந்தது. அதர்வ வேதம் முதலியன குறிப்
பிடுவது இதனின்றும் அகன்று பரவிய கங்கை, யமுனை முத
லிய ஆறுகள் பாயும் இடம் வரை உள்ள நிலப்பரப்பினையே
யாம். இவை குரு பாஞ்சாலப் பிரதேசங்களையே குறிக்கின்
றன. குருக்ஷேத்திரம் யாகம் வேட்பதற்கு உகந்த சிறப்பு
மிக்க பூமியாகக் கூறப்பட்டுள்ளது. கங்கை, யமுனை என்னும்
இரு நதிகளையும் அடுத்த வெளிக்கு மேற்கே சரஸ்வதி, திரு
ஷத்வதி என்னும் ஆறுகளுக்கு நடுவே, அமைந்துள்ளது குரு
க்ஷேத்திரம். இன்றும் இது பிரமாவர்த்தம் எனப் பெயர்
பெற்று விளங்குகின்றது. இது யசுர் வேதத்தினதும், பிராம
ணங்களினதும் பிறப்பிடமாக அமைவதுடன் மட்டும் நின்று
விடவில்லை. இதை அடுத்து வளர்ந்த வைதிகப் பண்பாடு
விரிந்து எல்லாத் திசைகளிலும், நாட்டின் ஏனைய பகுதி
களுக்கும் பரவுவதற்கு ஏற்ற நடு இடமாக விளங்கிற்று.

இருக்கு வேதம் சுட்டும் சூழலையும் சமய நிலையையும்விட
மிகவும் வேறுபட்ட நிலையையே பிராமணங்கள் காட்டுகின்
றன. அதர்வ வேதத்திற் போலவே யசுர் வேதத்திலும் பிரா
மணங்களிலும் தெய்வங்களைப் பற்றிய குறிப்புக்கள் இருக்
கின்றன. இத்தெய்வங்களின் நிலைப் பெருமை மிகக்குன்றிய
தொரு நிலையாகவே தெரிகின்றது. இந்திரன், அக்கினி முத
லிய தேவர்கள் வேள்வியிலேயே முழுவதும் தங்கி இருக்கின்
றார்கள். இவர்களின் பெருமையை விளக்குவதும் உயர்த்திக்
காட்டுவதும் பிராமணங்கள் கூறும் வேள்வியே. எனவே



தேவர்களைவிட வேள்விக்கு முக்கியத்துவம் ஏற்படுகின்றது.
இது மட்டும் அன்று; இருக்கு வேதத்தில் மிகவும் அருகிக்
குறிப்பிடப்பட்டுள்ள விஷ்ணுவும் உருத்திரனும் பிராமணங்
களில் பெருந்தெய்வங்களாக உயர்த்திக் கூறப்படுகின்றனர்.
இங்கு பிரஜாபதியும் முக்கிய தெய்வங்களுள் ஒருவன். இவன்
சுரர்களுக்கும் அசுரர்களுக்கும் ஒப்பற்ற தலைவன் எனப்படு
கின்றான். ஒப்பற்ற வருணனுக்குத் தனி அடைமொழியாக
வழங்கிய 'அசுர' என்னுஞ் சொல், "தெய்விகம் வாய்ந்த
வன்; உயிர்ப்பை அளிக்கும் தெய்விக சக்தி வாய்ந்தவன்"
என்னுங் கருத்தை உணர்த்தியே இருக்கு வேதத்தில் வருவ
தாக ஏற்கனவே எடுத்துக் காட்டப்பட்டதல்லவா? அச்
சொல், பிராமணங்களில் தேவர்களின் பகைவரைக் குறிக்
கின்றது. சுரர்கள் என்பார் தேவர்கள். இவரொழிந்த ஏனை
யோர் அசுரர்கள் எனப்படுதல் முறையே. அசுரருக்கும் சுர
ருக்கும் இடையில் நிகழ்ந்த போர்களைப் பிராமணங்கள்
அடிக்கடி கூறுகின்றன. அசுரர், சுரர் என்னும் இருவர்க்கிடை
நிலவிய பகை இந்திரனுக்கும் விருத்திரனுக்கும் இடையில்
உள்ள நிரந்தரமான பகைமையைப் நிகர்ப்பதன்று. சுரர், அசுர
ரென்னும் இரு பிரிவினர்களுக்குள் யார் வலிமை மிகுந்தவர்
என நிச்சயிக்க அவாக் கொண்டனர். யாகத்தைத் துணைக்
கொண்டே இப்போட்டி நிகழ்ந்தது. இதை எடுத்துக் கூறும்
சந்தர்ப்பத்தில் நிகழ்ந்ததே அசுரர், சுரர் என்னும் பாகுபாடு.
தேவர்களும் தாம் விரும்பியதைப் பெறுவதற்காக யாகஞ்
செய்ய நேர்ந்தது. பிராமணங்களில் எல்லாம் முக்கியமாகக்
கூறப்படுவது யாகங்களே. "இவை ஒரு குறிக்கோளை நோக்கி
வேட்கப்படவில்லை. வேள்வி வேட்டலே வாழ்க்கையின் குறிக்
கோளாக அமைந்துவிட்டது" என்று கூறினும் பொருந்தும்.
யாகம், வேட்பவனுக்குப் பெரும் வலிமையைப் பயப்பது.
இதனால் இதற்குக் 'கிரது' எனப் பெயர் ஏற்படலாயிற்று.
"யாகம்தான் பிரஜாபதி" என்னும் வாக்கியம் அடிக்கடி
காணப்படுகின்றது. இது மட்டும் அன்று; யாகத்துடன்
தொடர்பு கொண்டவை எல்லாம் மந்திர சக்தி வாய்ந்தவை.
யாகத்தில் பயன்படும் உபகரணங்கள், பிரயோகிக்கப்படும்
மந்திரங்கள், கடைப்பிடிக்க வேண்டிய விதிகள், பாட்டுக்

களாயுள்ள மந்திரங்களில் அமைந்துள்ள யாப்புக்கள், சாம கானம் நிகழ்த்தப்படும் பொழுது இசைக்கப்படும் இராகங் கள் முதலியன எல்லாமே மந்திர சக்தி வாய்ந்தவை; இவை எல்லாம் தெய்விகமானவை. இம்மந்திர சக்தியினுல் சந்தர்ப் பத்துக்குத் தக்கவாறு நன்மை தீமை இரண்டும் பெறுபேருக விளையும். வேள்வி நிகழும் வேளை, சிறு பிழை நேரிடினும் விளையுந் தீமை சொல்லுந் தரமன்று. யாகக் கிரியைகள் உரிய வேளைகளில் முறை தவருது செய்யப்படுவன. மிகமிகச் சிறு தவறேனும் நிகழ்தல் கூடாது. கிரியைகளைத் தவறெதுவும் நேரிடாது நிகழ்த்தும்ஆற்றல் வாய்ந்தவர் 'பிராமணர்'எனப் படுவர். பிராமணங்கள் இவர்களை மிகுந்த உயர் நிலையில் வைத்துக் கூறுகின்றன. இவர்கள் தெய்வங்கள் எனவும் கூறப்படுவர். "பிராமணர்கள் அவனியில் நடமாடும்தெய்வங் கள்" என்பன பிராமணங்கள். நல்லொழுக்கம்,அறிவுமுதிர்ச் சியினுல் வரும் புகழ், மக்களை உயர்நிலை எய்துவிக்க வேள்வி முதலியவற்றை நிகழ்த்துதல் முதலியனவே இவர்களிடம் அமைய வேண்டும் பண்புகள். இவர்களைச் சார்ந்த மக்களும் இவர்களுக்கு மரியாதை செலுத்துதல், பொருளளித்தல், இவர்க்குத் தீங்கு நிகழாது இவர்களதுயிரைப் பேணுதல் முத லியவற்றைத் தம் கடமைகளாகக் கொண்டு, இவர்களை மகிழ் விக்கும் கடப்பாடு உடையவர்கள். பிராமணர்களின் பொருளை அரசனும் தீண்டுதல் கூடாது. இவன் இவர்களுக் குக் கிராமங்களையும் பெரும் பொருளையும் தட்சணையாகக் கொடுப்பவன். பிராமணனைத் துன்புறுத்தும் அரசனுக்குத் தீங்கு நேரிடும். பிராமணனைக் கொல்லுதல் (பிரமஹத்தி) மாபெரும் பாவமாகக் கருதப்பட்டது.

பிராமணங்கள் கூறும் விஷயம் முழுவதையுமே விதி என் றும், அர்த்தவாதம் என்று பிரித்துக் கூறுவார்கள். விதி என் பது யாகாதி கிரியைகள் நடக்க வேண்டிய ஒழுங்கை முறை யாகக் கூறும்பகுதி.அர்த்த வாதம் என்பது இவைகள்உணர்த் தும் கருத்துக்களை விளக்குவதும், இவை சம்பந்தமான விவா தங்களை எடுத்துரைப்பதுமான பகுதி. பிராமணங்கள் கிரி யைகள் செய்ய வேண்டும் முறையை முதலில் கூறுகின்றன.



இதை அடுத்து இக்கிரியைகளின் நோக்கம், விளக்கம், உட் கருத்து என்பன இது பற்றிய விரிவுரைகளாக இணைக்கப் பட்டுள்ளன.

சொற்களைப் பிரித்துக் காட்டி அவற்றிற்கு விளக்கங் கூறும் பகுதிகள் இங்கு பல உள. இவ்வாறு கூறும் முறை பெரும்பாலும் இச் சொற்களின் இயல்புக்குப் பொருந்தாத வையாகவே காணப்படுகின்றன. வேண்டுமென்றே இவை பிழையாக விளக்கும் நோக்கத்துடன் இவ்வாறு திரித்துக் கூறப்படுகின்றன என்பதைப் பிராமணங்களே எடுத்துக் கூறு கின்றன. 'இந்த்' என்னும் வினையடி, தூண்டுதல் என்னும் பொருளைக் குறிக்கும்.இதிலிருந்தே 'இந்த'என்னும் பெயர் முதலில் பிறப்பிக்கப்பட்டது. இதே இயல்பாக எழுந்த பெயர். இதில் வேண்டும் என்றே தவறைத் தோற்றுவித்து 'இந்த' என்பதை 'இந்த்ர' எனத் திரித்து, இச்சொல்லை உரு வாக்கியோர் வேறுருவாக்கினர். இப் பெயர் இந்திரனைக் குறிப்பது. இதுதான் பிராமணங்கள் சொல்லமைப்பை விளக்கி, சொல் உருவத்தின் அமைப்பு இலக்கணங் கூறும் முறை. மறைமுகமாய் நிற்றலைப் பெரிதும்விரும்புவார்களல் லவா, தேவர்கள்! எனவே, தாம் சுட்ட விரும்புபவனை 'இந் தன்' என்று இயல்பாக உணர்த்த வேண்டும் வகையில் பெய ரிட்டு உணர்த்தாது, அவன் பெயராகிய இந்தன் என்பதைச் சிறிது திரித்து இந்திரன் என உணர்த்தினர். இவ்வழிப்பற்றி கூறும் பொருளையெல்லாம் நேரே சுட்டாது, அடையாளம் மட்டும் கூறி மறை பொருளாய் முதலில் உணர்த்தி, அவன் பின் இவ்வாறு மறைபொருளாய் உணர்த்தப் பட்டவற்றை இதுதான் இங்கு கூறப்படுவது எனத் தெளிவாக்கிக் கூறும் பகுதிகள் பிராமணங்களில் பெருகிக் கிடக்கின்றன. இவை யசுர் வேதத்திற் காணப்படுகின்றன வெனினும் பிராமணங் களில் அளவிறகதிகமாக இருக்கின்றன.

அர்த்தவாதமாக அமைந்து யாகாதி கிரியைகளுக்கு விளக்கங் கூறும் பகுதிகளில் கதைகள், பழைய வரலாறுகள், இதிகாசங்கள் (நிகழ்ந்த சம்பவங்கள்) எல்லாம் எடுத்துக்

கூறப்பட்டுள்ளன. இவை பிராமணங்களுக்குப்பின் எழுந்த இதிகாசம், ஆக்யானம், புராணம் என்பவற்றிற்குத் தோற்றுவாயாக இருக்கின்றன. இப்பகுதிகளே இந்நூல்களை வாசிப்பவர்களுக்குச் சுவை பயப்பன என்று சில விமர்சகர்கள் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

சதபத பிராமணத்தில் காணப்படும் புரூரவஸ்-ஊர்வசி வரலாறு மிகப் பழையது. இருக்கு வேதத்திலும் இது காணப்படுகின்றது. பெரு வெள்ளம் கரைபுரண்டு பிரவாகிப்பதனால் உலக அழிவு நேர இருந்த வேளை, உயிர்களின் அழிவை மநு காப்பாற்றிய வரலாறு இங்கு கூறப்பட்டுள்ளது. ஐதரேய பிராமணத்தில் இருக்கும் சுனஸ்சேபன் வரலாறும் மிகச் சுவைபட அமைந்துள்ளது. இவ்வகை வரலாறுகள் எல்லாம் யாகத்துடன் தொடர்பு பூண்டவை. இல்லாவிடில் இவற்றிற்கு இங்கு இடம் ஏது? "யாகங்கள் எவ்வாறு தோன்றின? ஏன் வேட்கப்படுகின்றன? இவை எத்துணைச் சிறப்பு வாய்ந்தவை?" என்னுங் கேள்விகள் யாகங்களைப் பற்றிப் பேசும் பிராமணங்களில் எழுந்து காணப்படுதல் இயல்பே. இவ்வகையான கேள்விகளுக்கெல்லாம் விடை கூறுவதுபோல் அமைந்துள்ளன இவ்வரலாறுகள். இவ்வரலாறுகளிற் சில பிராமண காலத்துக்கு முன்னர், நெடுங்காலமாக வழங்கி வந்தவை. சில, வரலாறுகள் எடுத்துக் கொண்ட கருத்தை விளக்குவதற்காக அக்காலத்திலேயே தோற்றுவிக்கப்பட்டவை போற் காணப்படுகின்றன. பிரஜாபதிக்கு ஆகுதி கொடுக்கும் பொழுது ஏன் தாழ்ந்த குரலில் மந்திரங்களை உச்சரித்தல் வேண்டும் என்பதை விளக்கும் வரலாறு இதற்கு எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது. கவர்ந்து செல்லப்பட்ட சோமலதையைப் பற்றிக் கூறும் பொழுது உருவகப்படுத்தப்பட்ட பேச்சின் (வாக்கின்) வரலாறு சதபத பிராமணத்தில் இடம் பெற்றுள்ளது. நான்கு வருணங்கள் தோன்றிய வரலாறு இருக்கு வேதத்தின் பத்தாவது மண்டலத்தில் வரும் தொண்ணூறாவது சூக்தத்தை அடிப்படையாகக் கொண்டு இங்கு விரித்துக் கூறப்பட்டுள்ளது. படைத்தல் நிகழும் முறையை விளக்கும் வரலாறும் சதபதப் பிராமணத்தில் வருகின்றது.



இவ்வகை வரலாறுகள் பிரஜாபதியையே படைத்தலுடன் பெரும் தொடர்பு படுத்திக் கூறுகின்றன.

இந்தியப் பண்பாட்டை விரித்து விளக்கி முதலில் இருந்து இறுதிவரை தொடர்ச்சியாகக் கூறும் வரலாற்று நூல் ஒன்றை நாம் எழுதுவோமேயானால் அதில் பிராமணங்கள் கூறும் கருத்துக்கள் முக்கியமான இடத்தைப் பெறும் என்பதில் ஐயமில்லை. இருக்கு வேதம் முதலிய சங்கிதைகளிற் றோன்றி வளர்ந்த கருத்துக்கள் எவ்வாறு பிராமணங்களில் விரிந்து, மேலும் பல கருத்துக்களைத் தோற்றுவித்தன என்பதையும், இக்கருத்துகளின் விளைவாக ஆரணியகங்களும் அதையடுத்து உபநிடதங்களும் தோன்றி எவ்வாறு உயரிய கருத்துக்களைப் புகட்டும் சிறப்பையும் வாய்ப்பையும் பெற்றன என்பதையும் இவ் வரலாற்று நூல்கள் எடுத்துக் காட்டும் பொழுதுதான் பிராமணங்களின் உயர்தனிப் பெரும்நிலை இன்னதெனத் தெளிவாகத் தெரியும்.

பிராமணங்களில் யாகங்களைப் பற்றிக் கூறப்பட்டிருக்கும் முறைகள் விரிந்து இவ்வாறு வளர எவ்வளவு காலம் ஆகி இருக்கலாம்? கல்பம், இதிகாசம், புராணம், காதைகள் அரசரையும் வீரரையும் போற்றும் புகழ்மாலைகள் என்பன எல்லாம் வளர்ந்த விதத்தைச் சாயனரும் எடுத்துக் கூறியிருக்கின்றார். அக்கால மக்களின் சுறுசுறுப்பையும் அவர்களது இடையறா உழைப்பையும் திட்டம் வகுத்துக் காரியங்களைச் செய்யும் ஆற்றலையும் இது எடுத்துக் கூறுகின்றது. வேதாங்கங்கள் எனப்படும் இலக்கணம், சிக்ஷை முதலியன ஏற்கனவே அதாவது பிராமணங்களுக்கு முன்னரே வேள்வி நிகழ்த்தும் முறையை அடிப்படையாகக் கொண்டு தோன்றியிருக்கலாமென ஊகிக்க இடம் உண்டு.

● ●

பிராமணங்கள்தாம் முதன் முதலில் தோன்றின. இவற்றைத் தொடர்ந்தே தத்துவக் கருத்துக்கள் உருவெடுத்தன எனக் கொள்ளுதல் பொருந்தாது. பிராமணங்கள் தோன்றுவதற்கு முன்னரே தத்துவ விசாரணை நிகழத் தொடங்கிவிட்டது. இருக்கு வேதத்திலேயே சந்தேகத்தை அடிப்படையாகக்கொண்ட தத்துவ விசாரணை விரிந்ததற்குள்ள அடையாளங்கள் உண்டு என்று முன்னர்க் கூறப்பட்டது. அதர்வ வேதத்தில் தத்துவக் கருத்துக்கள் செறிந்து காணப்படும் பாடல்களிலிருந்தும், யசுர் வேதத்தில் மிகவும் சுருக்கமாகவும் குறிப்பாகவும் இக்கருத்துக்கள் கூறப்படுவதிலிருந்தும் இவை எவ்வாறு இடையில் அற்றுப்போகாது தொடர்ச்சியாக அங்கங்கே நினைவு கூரப்பட்டு வழங்கி வந்தன என்பது புலனாகின்றது.

பிராமணங்கள் எடுத்துக்கூறும் யாகங்களில் பெரிதும் ஈடுபட்டவர்களல்லாத ஒரு தனிக் குழுவினரிடையேதான் தத்துவ விசாரணை தோன்றி வளர்ந்திருக்கலாம் எனச் சிலர் ஊகிப்பர். அரச குலத்தைச் சார்ந்தவர்களும் இவ்விசாரணையில் ஈடுபட்டனர். கௌஷீதகி பிராமணத்தில் 'பிரதர்தனன்' என்னும் மன்னனொருவன் யாகங்களைப் பற்றிய விசாரணையில் ஈடுபடுவதைக் காண்கின்றோம். சதபத பிராமணத்தில் 'ஜனக மன்னன்' தன் தத்துவ ஞானத்தால் யாகங்களில் ஈடுபடுபவர்களுக்குத் தம் கோட்பாடுகளைக் கூறிக் குழப்பம் விளைவிக்கின்றார். 'யாஞ்ஞ வல்கியர்' ஜனகனை அடைந்து அவன்பால் தத்துவ அறிவைப் பெற விழைந்ததைச் சதபத பிராமணங் கூறும் 'சௌல்வாயனர் என்பாருக்கு அறிவூட்டும் 'அயஸ் தூணன்' அரச குலத்தைச் சார்ந்தவன் என்பர். உபநிடதங்களில் அரசர்கள் மட்டுமின்றிப் பெண்களும் தத்துவ விசாரணையில் ஈடுபட்டிருக்கக் காண்கின்றோம்.

பிராமணங்களின் இறுதியில் வரும் பகுதிகளுக்கு 'ஆரணியகங்கள்' எனப் பெயர் உண்டு. இவை காட்டு நூல்கள் எனினும் பொருந்தும். இதில் இரகசியக் கருத்துக்கள் அடங்கியுள்ளன. இதைத் தகுதி அற்றவர் அறிவாராயின் பெருங் கேடு நேரிடும். இவ்வாறு பயம் விளைவிப்பதன் காரணமாக இவை மக்கள் வசிக்கும் இடங்களில் ஓதப் பெறுவதில்லை. காடுகளிலேதான் இவற்றைப் படித்தலும் படிப்பித்தலும் நிகழ்வன. பிராமணற்களிற் போன்று இந்நூல்களில் யாகங்கள் வேட்கும் முறை விரிக்கப்படவில்லை. கிரியைகள் பற்றிய பல்வேறு விளக்கங்கள் இங்கு கிடையா. யாகங்கள் மறை பொருளாய் உணர்த்தும் உண்மையையும், யாகம் எவ்வெவற்றை யெல்லாம் குறிப்பது என்பதையும் விளக்கிக் கூறும் நூல்களே இவ்வாரணியகங்கள். 'ஆச்சிரமங்கள்' முறையே 'பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம்' என வகுக்கப்பட்டபின் மூன்றும் ஆச்சிரமத்தினரான வானப்பிரஸ்தர்களுக்கென இவ்வாரணியகங்கள் எழுந்தன எனச் சிலர் கொள்ளுவர்.

மிகப் பழைய உபநிடதங்கள் எல்லாம் இவ்வாரணியகங்களுள், அவற்றின் ஓர் உறுப்பாக அடங்கியுள்ளன. ஆரணியகங்களையும், உபநிடதங்களையும் பிரித்துத் தனித்தனியாக வரையறுத்துக் காட்டல் எளிதன்று. இந்நூல்களெல்லாம் 'வேதாந்தங்கள்' எனப் பெயர் பெறுவன. இவைவேதங்களின் இறுதிப் பகுதிகள் என்பதையே இப்பெயர் உணர்த்தும். அறிவை நாடி நிற்கும் மாணவர்களுக்கு வாயால் புகட்டி அறிவுறுத்தவேண்டி, யாக்கப்பட்ட நூலின் முதற் பகுதி வேள்வி முதலியவற்றைப் பற்றியது. இலகுவில் விளங்காதவாறு மறைபொருளாய் உணர்த்தப்படும் தத்துவ விசாரணையாற் கொள்ளப்பட்ட முடிபுகளைக் கூறுவது ஈற்றில் வரும் பகுதி. ஆரணியகங்களும், உபநிடதங்களும் இவ்வாறு வேதங்களின் இறுதியில் அமைந்து வேதாந்தங்கள் எனப் பெயர் பெறலாயின. பிற்காலத்தில் தத்துவ நூலறிஞர்கள் இவற்றை வேதங்களின் முடிவு நூல்களாக மட்டும் காணவில்லை. அன்றி வேதங்கள் துணிந்து கூறும் முடிபை விவரிக்கும் அறிவு நூல்களாகவே கருதுவர்.



வேதங்களின் முடிபான ஆரணியகங்களும் மிகப் பழைய உபநிடதங்களும் பல்வேறு வேதங்களைச் சார்ந்து காணப்படுகின்றன. இவை பிராமணங்களில் அடங்கியுள்ள பகுதிகள். இருக்கு வேதத்தைச் சார்ந்த ஐதரேய பிராமணத்துள் அடங்கி இருப்பது ஐதரேய ஆரணியகம். ஐதரேய ஆரணியகத்துள் அடங்கி இருப்பது ஐதரேய உபநிடதம். இருக்கு வேதத்தைச் சார்ந்த இன்னொரு பிராமணமான கௌஷீதகி பிராமணத்திலும் இவ்வாறே கௌஷீதகி ஆரணியகமும் கௌஷீதகி உபநிடதமும் அடங்கியிருக்கின்றன. கிருஷ்ண யசுர் வேதத்தைச் சேர்ந்த தைத்திரீய ஆரணியகமும், இதன் இறுதியில் தைத்திரீய உபநிடதமும் மகாநாராயண உபநிடதமும் காணப்படுகின்றன. சுக்கில யசுர் வேதப் பிராமணமான சதபதப் பிராமணத்தின் பதினான்காவது பிரிவில் முற்பகுதி ஆரணியகம். இறுதியில் வருவது பிருகதாரணியக உபநிடதம். சாமவேத பிராமணமான தாண்டிய மகா பிராமணத்தின் இறுதியில் வருவது சாந்தோக்கிய உபநிடதம். இதன் முதற் பகுதி முழுவதுமே ஆரணியகமாக அமைந்திருக்கின்றது. 'கேந' உபநிடத்தை உள்ளடக்கி வரும் ஜைமினீய ஆரணியகம், தலவகார சாகையைச் சார்ந்த சாம வேத பிராமணத்துள் அடங்கியுள்ளது.

• •

உபநிடதங்கள் அறிவுப் பொக்கிஷம். இந் நூல்கள் கூறும் அறிவு பேரறிவு. உலகில் பலருக்குப் பெரும் அறிவை மட்டுமல்லாமல் உள்ளத்தில் அமைதியையும் மனச் சாந்தியையும் அளித்ததை உபநிடதங்கள் பற்றி எழுந்த நூல் களும் கட்டுரைகளும் எடுத்தியம்புகின்றன. அறிவுரைகள் பல நிரம்பிய இவ்வுபநிடதங்களைப் பற்றி இனி நோக்குவோம்.

வடமொழியில் 'சத்' என்னும் வினையடி 'இருத்தல்' என் னும் பொருளை உணர்த்தும். உப, நி ஆகிய இரு உபசர்க்கங் கள் தொடக்கத்தில் வரும்வண்ணம் உருவாகும் உபநிஷத் என்னும் சொல் "நெருங்கிக் கீழே அமர்தல்" என்னும் கருத் தையே முதலில் உணர்த்திற்று. ஆசிரியருக்கு அண்மையில் மாணவன் அமர்ந்திருத்தலையே இது குறிக்கின்றது. பின்னர் இது அருகில் நெருங்கி அமர்ந்திருக்கும் நிலையில் தோன்றிய அறிவுரைகளைக் குறிக்கலாயிற்று. மாணவனும் ஆசிரியனும் நெருங்கி இருக்கும் பொழுது கூறப்படுவது அவர்கள் இருவ ருக்குமட்டுந் தெரிந்ததே. எனவே இது இரகசியம் என்னும் பொருளையும் பெறலாயிற்று. நாளடைவில் உபநிடதம், இரக சியம் என்னும் இரு சொற்களும் ஒரே கருத்தைக் கூறும் சொற்களாயின. இக்கருத்தை உணர்த்தும் சொற்றொடர்கள் உபநிடதங்களிலேயே இருக்கின்றன. இக்கருத்தையே தமிழ்ச் சொல்லாகிய மறை என்பது உணர்த்துவது, இப் பிரம வித் தையைத் தந்தை தன் மூத்த மைந்தனுக்கு அல்லது தலை சிறந்த மாணவனுக்குப் புகட்டுவான். "எத்தகைய விலையு யர்ந்த பொருளைக் கொடுத்தாலும் கொடுக்கலாம். விலைமதிப் பிறந்த இவ்வரும் பொருளை எவர்க்காயினும் கொடுக்கவே கூடாது. கொடுப்பதாயின் தகுதி வாய்ந்த மாணவனுக்கு அல்லது தன் மைந்தனுக்குக் கொடுத்தல் வேண்டும்" என் னுங் கொள்கை வழங்கலாயிற்று. மாணவன் குருவை நாடிப்

பலமுறையணுகி உபதேசம் வேண்டி நிற்பதையும், அவன் தகுதியை நன்கு அறிந்த பின்னரே குரு அறிவுரை வழங்குவதையும் உபநிடதங்களே அழகாக எடுத்துக் கூறுகின்றன.

சென்ற அத்தியாயத்தினிறுதியிற் கூறப்பட்ட உபநிடதங்களுள், மகாநாராயண உபநிடதம் ஒன்று நீங்கிய ஏனையவை பழையவை. நடையிலும் மொழியமைப்பிலும் இவை தத்தம் பிராமணங்களைப் போன்றவை. எளிய நடையில் அமைந்துள்ள இவ்வுபநிடதங்கள் கவர்ச்சிகரமாக அமைந்துள்ளன. இவை, கூறும் கருத்தைத் தெளிவாகக்கூறுகின்றன. இவற்றை எடுத்துத் தனித்தனியே நோக்கும் பொழுது ஒவ்வொரு உபநிடதத்திலும் பழைய பகுதியையும், புதிய பகுதிகளையும் ஒருங்கே காண்கின்றோம். மொழியமைப்பைக் கருத்திற் கொண்டு நோக்கும் பொழுது புதிய இயல்பு வாய்ந்த பகுதிகளும், பழைய உபநிடதங்களே என்பது தெளிவாகும். சாந்தோக்கியம், பிருகதாரணியகம்ஆகிய இருபெரும்உபநிடதங்களிலும் அடங்கியுள்ள பகுதிகள் பல உரைத் தொகுதிகளை ஒன்று சேர்த்தமைத்தலால் உருவாகியுள்ளன என ஊகிக்க இடமுண்டு. இவ்வுரைத் தொகுதிகள் தனித்தனி உபநிடதங்களாகவும் ஒருகாலத்தில் இருந்திருக்கலாம். ஒரே உரைகள் பல உபநிடதங்களில் வருவது இக் கொள்கையை வலியுறுத்தும். பெரும் உபநிடதங்கள் பிராமணங்களுடனும், ஆரணியகங்களுடனும் நெருங்கிய தொடர்பு உடையனவாகவும், புத்தருக்கும் பாணினிக்கும் முற்பட்டவையாவும் இருந்தன என்பது மறுக்க முடியாத உண்மை. உபநிடதங்கூறும் கருத்துக்களின் தொடக்க நிலையை இப் பெரிய உபநிடதங்களான ஐதரேயம், சாந்தோக்கியம் தைத்திரீயம், கௌஷீதகி, கேநம் முதலியவற்றில் காண்கின்றோம். இங்குதான் பழைய வேதாந்தக் கருத்துக்கள் இருக்கின்றன.

சில உபநிடதங்கள் முழுவதுமே செய்யுள் நடையில் விளங்குகின்றன. இவை காலத்தாற் பிந்தியவை. எனினும் இவை புத்தர் காலத்துக்கு முந்தியவை என்பதை மறுக்க முடியாது. இவை வேதங்களுடன் இணைத்துக் கூறப்படுவன.



எனவே, ஏற்கனவே கூறப்பட்ட உபநிடதங்களைப் போன்ற ஆரணியகங்களின் பகுதிகளாக அமையவில்லை. கடோபநிடதம், சுவேதாஸ்வதரம், மகாநாராயணீயம், ஈசோபநிடதம் முண்டகம், பிரச்னம்என்பன இவ்வினத்தைச் சார்ந்தவை. கடோபநிடதம் கிருஷ்ண யசுர் வேதத்தைச் சேர்ந்தது. சுவேதாஸ்வதரம், மகா நாராயணீயம் என்னும் இரண்டும் கிருஷ்ண யசுர் வேத உபநிடதங்களே. ஈசோபநிடதம், வாஜசநேயி சங்கிதையில் காணப்படுவது. எனவே இது சுக்கில யசுர்வேதத்தைச் சார்ந்தது. பாதி உரைநடையிலும், பாதி செய்யுளிலும் அமைந்த பிரச்ன உபநிடதமும், முண்டக உபநிடதமும் அதர்வ வேத உபநிடதங்கள். இவ்வாறு உபநிடதங்களிலும் வேதாந்தக் கருத்துக்கள் காணப்படினும் இங்கு ஒரு கடவுட் கொள்கையும், சாங்கியக் கருத்துக்களும், யோக உரைகளும் சுவறிக்கிடக்கக் காண்கிறோம்.

மைத்திராயணீ உபநிடதம் கிருஷ்ண யசுர் வேதத்தைச் சேர்ந்தது. இது புத்தர் காலத்துக்குப் பிந்தியதென்பர். இவ்வுபநிடதம் பழைய உபநிடதங்கள் போல் உரை நடையில் அமைந்துள்ளது. இதிலே வைதிக மொழியின் சாயல் மிகுந்து காணப்படவில்லை. இது பெரும்பாலும் சம்ஸ்கிருத மொழியிலேயே அமைந்து, இச்சம்ஸ்கிருத இனத்தைச் சார்ந்ததாகவே காணப்படுகின்றது. அதர்வ வேதத்தைச் சார்ந்த மாண்டூக்ய உபநிடதமும் இதே காலத்தது எனக் கருத இடமுண்டு. பிரம சூத்திர உரையில் ஏனைய உபநிடதங்களைக் குறிப்பிடும் சங்கரர், மைத்திராயணீ உபநிடதத்தையும், மாண்டூக்ய உபநிடதத்தையும் கூறாது விட்டுவிட்டார். இவை இரண்டும் பிந்திய காலத்து உபநிடதங்கள் எனக் கொள்ளப்படினும், ஏற்கனவே கூறப்பட்ட பன்னிரு உபநிடதங்களுடனும் வைத்து எண்ணத்தக்க பழைமை வாய்ந்தவை. இந்திய தத்துவக் கருத்துக்களை விளக்குவதற்கு இவை இரண்டும் ஏனைய பழைய உபநிடதங்கள் போல் முதல் நூல்களாகக் கொள்ளும் தகுதி வாய்ந்தவை. இவற்றை வைதிக உபநிடதங்கள் என்றும் கொள்ளலாம்.

இருநூற்றுக்கதிகமான வேறு உபநிடதங்கள் காணப்படுகின்றன. இவை வேதங்களுடன் இணைத்துக் கூறப்படினும், நெருங்கிய வைதிகத் தொடர்பு எதுவும் கொண்டனவாகத் தெரியவில்லை. இவற்றில் தத்துவக் கருத்துக்களைக் காட்டிலும் சமயக் கருத்துக்களே மிகுந்து காணப்படுகின்றன. இவற்றுள் பெரும்பாலானவை புராணங்களுடனும் தந்திர சாஸ்திரங்களுடனும் தொடர்பு உடையவை. வேதாந்தக் கொள்கை செறிந்த உபநிடதங்கள், யோகநெறி புகட்டும் உபநிடதங்கள், சந்நியாசத்தை எடுத்து விளக்கும் உபநிடதங்கள், விஷ்ணுவைப் போற்றும் வைஷ்ணவ உபநிடதங்கள், சிவனைப் பரம்பொருளாக உயர்த்திக் கூறும் சைவ உபநிடதங்கள், சக்தியே பிரமம் எனப் புகட்டும் சாக்த உபநிடதங்கள், அறுமதத்தில் கூறப்படும் ஏனைய தெய்வங்கள் ஒவ்வொன்றையும் உயர் பொருளாய் விளக்கும் உபநிடதங்கள் என இவ்வுபநிடதங்கள் பலவகைப்படும். இவற்றுட் சில செய்யுணடையிலமைந்தவை; சில உரைநடையில் உள்ளன. சில இரண்டும் கலந்த நடையில் இருக்கின்றன. சில இதிகாச புராணங்களிலுள்ள சுலோகங்களில் அமைந்துள்ளன. இவை புராணங்களையும் தந்திரங்களையும் போன்றவை. எனினும் இவற்றை வேதங்களுடன் தொடர்புபடுத்தியே கூறுவர். ஜாபால உபநிடதம் இவ்வினத்தைச்சேர்ந்தது. சங்கரர் உரையில் இது கூறப்படுகின்றது. பரமஹம்ச உபநிடதமும் இதே விடயத்தைக் கூறும். கபால உபநிடதத்திலிருந்து இராமானுஜர் மேற்கோள் காட்டியுள்ளார். இது உலக அமைப்பு உடலமைப்பு, உள அமைப்பு, தத்துவக் கருத்துக்கள் முதலிய விஷயங்களைப்பற்றிக் கூறும் 'கருப்ப' உபநிடதம் கருவைப் பற்றிக் கூறும். கருவிற்றோன்றிப் பிறந்திறந்து உழலாது, வீடு பெறத் தியானிப்பதற்குத் தூண்டும் இயல்பு வாய்ந்தது. 'அதர்வசிரஸ்' என்னும் சைவ உபநிடதம் பாபங்களைக் கழுவி அகற்ற வல்லது. வஜ்ர சூசக உபநிடதம் வேறொன்றுஞ் சுட்டாது தானே தனித்து விளங்கும் பிரமத்தை அவ்வாறு அறிந்தவனே பிராமணன் எனக் கூறும். இது மிகவும் பிந்திய காலத்ததல்ல. இவ்வுபநிடதங்கள் எல்லாம் வேதத்துக்குப் புறம்பானவை. இவை எண்ணில்லாதனவாய் இருப்



பது மட்டுமல்லாமல் காலத்தாற் பிந்தியனவாயும் இருக்கின்றன. எல்லா உபநிடதங்களுக்கும் பிந்தியதாகக் கருதப்படும் முக்திகோபநிடதத்தில் நூற்றெட்டு உபநிடதங்களையும் கற்பதனல் ஒருவன் வீடுபேற்றை அடைவானெனக் கூறப்படுகின்றது. இங்கு நூற்றெட்டு உபநிடதங்களும் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் பத்து உபநிடதங்கள் இருக்கு வேதத்தையும், பத்தொன்பது சுக்கில யசுர் வேதத்தையும், முப்பத்திரண்டு கிருஷ்ண யசுர் வேதத்தையும், பதினறு சாமவேதத்தையும், முப்பத்தொன்று அதர்வ வேதத்தையும் சார்ந்தன எனக் கொள்ளப்படுகின்றது. வேதச் சாயல் பெறுதவை எல்லாம் அதர்வ வேதத்தைச் சார்ந்தவை என்று கொள்ளப்படும்.

பழைய உபநிடதங்கள் கூறுவதிலிருந்து அங்கு பல்வேறு வகையான கருத்துக்கள் தெரிந்துள்ளன என்பதையும், உபநிடதம் எவ்வகைக் கருத்துக்களைக் கொண்டமைதல் வேண்டும் என்பதையும் ஊகித்தறியலாம். உபநிடதம் புதிர் போன்று அமைந்தது. அதிற் கூறப்பட்டிருக்கும் கருத்துக்கள் பாமர மக்களின் பொருட்டல்ல. அறிவு முதிர்ந்த குறிப்பிட்ட சிலருக்கே. இங்கே ஆழமான தத்துவக் கருத்துக்கள் உண்டு. மறைபொருளாய் உணர்த்தப்படும் உண்மைகளும் இருக்கின்றன. கதை வடிவமாக அமைத்துக் கூறப்படும் பேருண்மைகள் மனதில் ஆழப்பதிய வல்லன. யாகத்தின் இயல்பை விளக்கி உணர்த்தும் உயர் கருத்தும் இங்கு உண்டு. இது போன்ற கருத்துக்கள் பழைய உபநிடதங்களில் பெரும்பாலும் உள்ளன.

கௌஷீதகி உபநிடத்தில் தத்துவ விளக்கங்களையும், உயர்மனோநிலையைக் குறிக்கும் கருத்துக்களையும், மறுமையைக் குறிக்கும் விளக்கங்களையும் காண்கின்றோம். இதைவிட நன்மை பயக்கும் யாகாதி கிரியைகளின் விளக்கங்களும், மோகனம் முதலிய மந்திரங்களும், சிறுவர்களாக இறத்தலைத் தடுப்பதற்குக் கிரியைகளாலமைந்த வழிவகையும், பகைவரை யழிக்கும் ஆற்றல் வாய்ந்த மறைபொருள் எனக் கருதவல்ல உபநிடதம் எனக் கருதப்படத்தக்க பகுதியும்

காணப்படுகின்றன. சாந்தோக்கிய உடநிடதம் படைத்தலை விளக்கும் தத்துவக் கருத்துக்களை உடையது. மேலும், பிர பஞ்சத்தையும் ஆன்மாவையும் பற்றிக்கூறி 'ஓம்' என்னும் பிரணவத்தின் உட்பொருளையும், நோய் நீக்கவல்ல மந்திரங் களையும் கூறும். அதர்வ வேத உபநிடதங்களுள் பாம்பு விஷத்தை அடக்கக்கூடிய மந்திரம் ஒரு முழு உபநிடதமா கவே அமைந்து விடுகின்றது. இது கருடோபநிடதம் எனப் படும்.

உபநிடதங்களில் தத்துவக் கருத்துக்கள் பல சிதறுண்டு கிடக்கின்றன. பிரமவிசாரணையும், ஆன்ம விசாரணையும், நிகழும் பல சந்தர்ப்பங்களில் பிரமம், ஆன்மா என்னும் இரு பொருள்களைப்பற்றிப் பல விளக்கங்கள் இங்கு காணப்படு வன. இவ்விளக்கங்கள் ஒன்றோடொன்று கோவைப்படுத்தப் படாதவையாகவே இங்கு இருக்கக் காண்கின்றோம். உபநிட தக் கருத்துக்களைக் கோவைப்படுத்தி, வரிசையாக்கி, கூறும் விஷயங்களைத் தொடர்படுத்திக் கூறுதல் அவசியமாயிற்று. இத்தேவையைப் பூர்த்தி செய்ய முதன் முதல் எழுந்த நூல் பிரம சூத்திரம் எனப்படும். பல்வேறு தத்துவக் கருத்துக் களின் தொகுப்புக்களான உபநிடதங்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு ஆசிரியர் இயற்றினர் என்பது பொருந்தாது. பலரது அனுபவங்களும் பலர் கண்டுணர்ந்த உண்மைகளும் வாக்கியங்களாக மறு உருவம் பெற்றுள்ளன. இவ்வாக்கியங் கள் தொகுக்கப்பட்டதும் உபநிடதங்களாக உரு ஏற்றன. இவ்வாக்கியங்களில் தலைசிறந்தவாக்கியங்கள் மகாவாக்கியங் கள் எனப்படும்.

பல்வேறு தருணங்களில் பற்பல அறிஞர்களால் நோக்கி உணரப்பட்ட உண்மைகள் பல உபநிடதங்களாகத் தொகுத் தமைக்கப்பட்டன. எனினும், இவை முழுவதும் குறிக்கும் பொருள் ஒன்றாகவே காணப்படுகின்றது. எனவே, உபநிட தங்கள் எல்லாம் ஒரே கருத்தை அடிப்படையாகக்கொண்டு, ஒரே குறிக்கோளை நோக்காகக்கொண்டு, விசாரணையில் ஈடு படுவனவாய்ப் பலவகை விளக்கங்களைக் கூறியமைந்துள்ளன.



ஏற்கனவே குறிப்பிடப்பட்ட தலை சிறந்த உபநிடதங்களில் இவற்றை எதிர் பார்க்கலாம். உப நிடதங்களில் இக்கருத்து கள் சம்பாஷணை வடிவில் எடுத்துக் கூறப்படுகின்றன. இவை அக்காலச் சூழலையும் சுட்டி விளக்குகின்றன. அக்காலத்தில் மன்னர் மாளிகைகளில் அறிஞர்களும், அறிவு புகட்டும் ஞானிகளும் ஒன்று கூடி அரசர்கள் முன்னிலையில் தத்துவ விசாரணைகள் நிகழ்த்திய வரலாறுகளை இவ்வுபநிடதங்கள் மூலம் நாம் அறிய முடிகின்றது. இத்தகைய தத்துவ விசா ரணைகளில் அரசர்களும் ஈடுபட்டனர். தத்துவக் கருத்துக் கள் கூறுத பகுதிகளும் உபநிடதங்களில் உண்டு. இவை பல் வேறு விஷயங்களைப்பற்றியவை. இவை சாந்தோக்யம், பிருகதாணியகம் போன்ற பழை உபநிடங்களிலே மிகுந்து காணப்படுவன. உபநிடதங்களில் காணப்படும் உய ரிய கருத்துக்களைச் சீர்பட அமைக்கும் நோக்குடன் எழுந்தது 'பிரமசூத்திரம்' என்னும் உயரிய வேதாந்தநூல்.

உயர்ந்த தத்துவக் கருத்துக்களை உடையனவே உபநிடதங் களின் விலைமதிப்பற்ற பகுதிகள். சிதறுண்டு கிடக்கும் இக் கருத்துக்களை எடுத்துச் சீராக்கித் தொடர்ச்சியாக அமைத்து உருவாக்கினால்தான் உபநிடத தத்துவம் தெளிவாக வெளி யாகும். உபநிடத தத்துவத்தை மிகவும் சுருங்கக் கூறின் அத் தத்துவம் "எல்லாம் பிரமம், பிரமம் ஆத்மா இரண்டும் வெவ்வேறானதல்ல" என்னும் வாக்கியங்களில் அடங்கும். உபநிடதத்தில் வரும் அறிஞர்கள் கூறுவதெல்லாம் பிரமம், ஆன்மா என்னும் இரு பொருள்களைப் பற்றியே, எனவே உப நிடத தத்துவங்களை நன்கு உணருவதற்கு இவ்விரு பொருள் களையும் நன்கு விளக்கிக் கொள்ளல் வேண்டும். பிரமம் என் பதற்குப் பல விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன. எமக்கு எட்டி யுள்ள நூல்களை எடுத்து நோக்குவோமேயானால் இதன் தொடக்க நிலை இருக்கு வேதத்தில் இருக்கின்றதைக் காண லாம். மேலும் பிரமம் என்பது வேதம், தத்துவம், தவம் என்னும் கருத்துக்களை உடையது என நிகண்டு கூறும். வேதங்களில் முக்கியமாக இருக்கு வேதத்தில் வரும் இச் சொல் முதலில் சூக்தத்தையும், பின் வேதத்தையும் குறித்

தது. பின்னர் இது பிராமணத்தையும், பிரணவத்தையும் குறிக்கலாயிற்று. இருக்கு வேதம் குறிக்கும் பிரமம் என்பது மந்திரம் எனக் கொள்ளப்படும் பாட்டுக்களையே சுட்டுகின்றது. இப்பாட்டுக்கள்தாம் வழிபடுதற்குப் பயன்படும் தோத்திரங்கள். இவை மந்திர சக்தி வாய்ந்தவை. எனவே இவற்றைக் கருவியாகக் கொண்டு வழிபடுபவர்கள் தெய்வங்களைத் தம்வயப்படுத்தித் தாம் வேண்டுவதை அடைய முற்படுவர். நாளடைவில் இம்மந்திரங்கள் தொகுதிகளாக்கப்பட்டன. இத்தொகுதிகள் ஒன்று சேர்க்கப்பட வேதம் உருவாயிற்று. இதே 'திரயீவித்யா' என்பது. ஈற்றில் இது பிரமம் எனப் பெயர் பெற்றது. வேதம், பிரமம் எனும் இவ்விருபெயர்களும் இதன் தெய்வத் தன்மையை உணர்த்துகின்றன. மேலும், வேதங்களிற் கூறப்படும் யாகமும் மனிதன் ஆற்றலுக்கு அப்பாற்பட்ட தெய்விக ஆற்றலையே குறிப்பது. வேத நெறி நிற்றலால் இவ்வகை ஆற்றலை ஒருவர் அடையலாம். வேத நெறி நிற்க வழி வகுப்பவை வேட்கும் வகையை அறிவுறுத்தும் பிராமணங்கள். இவ்வுயரிய அறிவாகிய வேதமே முதல் முதற்றோன்றிய பிரமம் எனவும், இதுதான் தோற்றம் அனைத்துக்கும் தோற்றுவாயாய் உள்ளது எனவும், இதை அடுத்துத் தோன்றியனவே படைத்தல் தெய்வமாகிய பிரமா என்னும் சுயம்புவைப் பற்றிய கருத்துக்கள் எனவும் கூறப்படும். இவ்வாறு பிரமம் என்னுஞ் சொல் மந்திரங்களைமுதன் முதலிலும், மந்திரங்களின் தொகுதியான வேதத்தை அதன் பின்னரும், அங்கு கூறப்படும் யாகங்களையும், அவற்றின் தொடர்பு உடையவர்களையும், அவற்றினால் விளையும் சக்தியையும், படிப்படியாகக் குறித்து வந்ததைக் கவனிக்கும் பொழுது, பிரமம் என்னுஞ் சொல் உணர்த்தும் கருத்துக்களின் பல நிலைகள் தெளிவாகின்றன. உபநிடதங்கள் குறிக்கும் பிரமமோ எனின் அது எல்லாவற்றிற்கும் நிலைக்களனாகி எல்லாமாய் ஒரே தனிப் பொருளாய்த் தன்னைவிட வேறொன்றிலதாய் உள்ள பொருள் என்பது தெரிகின்றது.

ஆத்மா என்னுஞ் சொல் தோன்றி வழங்கி வரும் வரலாறும் மிகத் தெளிவாக உணரற்பாலது. இச் சொல்லின்



அமைப்பு, இது சுட்டும் கருத்தைத் தெளிவாக விளக்கப் பயன்படாது. 'அன்' என்னும் வினையடியுடன் தொடர்பு கொண்டது ஆத்மா எனச் சிலர் விளக்கியுள்ளார்கள். சிலர் இதைத் 'தான், தன்னை' என்னுங் கருத்துக்களை உணர்த்தும் த்மன் என்னும் சர்வ நாமத்தில் இருந்து பிறந்ததாகக் கூறுவர். ஆத்மா என்னுஞ் சொல் தத்துவக்கருத்தைக் குறிக்கும் சொல்லாய் மட்டும் அமையாது. ஏற்கனவே சுட்டப்பட்ட கருத்திலேயே சம்ஸ்கிருதத்தில் அடிக்கடி காணப்படுவது. இவ்வாறு வழக்கிலிருக்கும் சொல் நாம் எளிதில் விளங்கக் கூடியதாயன்றோ இருத்தல் வேண்டும். 'தான் தன்னை' என்று ஒவ்வொருவரும் தம்மைச் சுட்டவும் தம்மைக் குறிக்கவும் இது பயன் படுகின்றது. எனவே, இச்சொல், புற உலகில் காணும் பொருள்களின்றும் வேறாக்கி ஒருவர் தமமைச்சுட்டவும், தம்முடம்பையோ, உடம்பினுள் நின்றியங்கும் உயிரையோ — அதாவது உடம்பினின்றும் வேறான உயிரையோ குறிப்பிடவும் பயன்படுகிறது.

பிரமம், ஆத்மா ஆகிய இவ்விரு பொருள்களும் உபநிடதங்கள் கூறும் தத்துவங்களில் ஒன்றாய்ப் பிணைப்புண்டு நிற்பன. சாண்டில்யன் புகட்டும் உண்மையும் இதே அடிப்படையில் அமைந்துள்ளது. இவை அனைத்தும் பிரமமே எனத் தொடங்கும் இவ்வறிவுரை விரிந்து ஆன்மாவின் இயல்பு கூறும் விளக்கங்களுடன் முடிவெய்துகொள்கின்றது. ஈற்றில் பிரம்மமும் ஆன்மாவும் ஒன்றே, என்னும் உண்மை வற்புறுத்தப் பெறுகின்றது.

உலகில் காணப்படுவனவற்றின் பொருள் யாவும் பிரமத்தால் அமைவதனால் அது பிரமமயமானது. உலகில் நிகழும் தோன்றல், நிலைத்தல் அழிதல் முதலியன பிரமத்தால் நிகழ்வன. எல்லாம் ஈற்றில் ஒடுங்குவது பிரமத்திலேயே. இது சாசுவதமானது; என்றும் உள்ளது; எல்லை அற்றது; தெய்விகமானது; இதுவும் ஆன்மாவும் ஒன்று. புறத்தே அமைந்து காணப்படும் எமது பண்புகளை எல்லாம் நாம் களைந்து கொண்டே போகும் பொழுது ஈற்றில் எஞ்சி நிற்கும் சாரம்

மிருந்த ஒரு பொருளைக் காண்போம். "அது ஒப்புயர்வற்றுத் தனித்து நிற்பது. அதே ஆன்மா எனப்படுவது" என்று சிலர் உபநிடதங்கூறும் கருத்துக்களை எடுத்துக் கூறிப் பொருளைத் தெளிவாக்குவர். இவ்வுண்மையினையே உபநிடதங்களில் வரும் மகா வாக்கியம் அறைந்து கூறும். இதே, தத்துவ ஞானிகளுக்கு உண்மை நிலையினைத் தெரிய வைத்துள்ளது. தத்-த்வம்- அஸி என்பது இம்மகாவாக்கியம். இப்பிரபஞ்சம் பிரமம் எல்லாம் நீயே. இப்பிரபஞ்சம் நீ உணரும் அளவிற்கே உளது. அதாவது, உன்னில் வேறானதும், வெளியே புறம் பாகத் தெரிவதுமான பிரபஞ்சம் ஒன்று என மனதிற் கருதும் வரைதான் பிரபஞ்சம் உளது. உலகமும் பிரமமும் பிரமமும் ஆன்மாவும் ஒன்றே. இவ்வாறு உலகம் பிரமம், ஆன்மா என்னும் இவற்றில் காணப்படும் ஒருமையை விளக் கும் முகமாகவே உபநிடதங்களில் ஆங்காங்கு வரும் அறி வுரைகள் பெரும்பாலாக அமைந்துள்ளன.

பிரம (அதாவது ஆன்ம) விசாரணையில் அக்காலத்து அறிஞர் காட்டிய ஆர்வமும் அதில் எடுத்துக்கொண்ட ஓயா ஊக்கமும் முடிவான உண்மையினை நன்கு ஆய்ந்து அறிய அவர்கள் கொண்ட முயற்சியும் எத்தகையன என்பதை உப நிடதங்களை வாசிக்கும் பொழுது நாம் எளிதில் தெளிவாக அறியக் கூடியதாக இருக்கிறது.

மனிதனுள் அறிவதில் ஈடுபட்டு அறிவதாக எது அமைந் துள்ளதோ, அதே ஆன்மா எனப்படும். இது ஆன்மாவை விளக்கும் வரைவிலக்கணம். ஆன்மா உலகுடன் ஒன்றாய் அமைந்த ஒரு பொருள். அறியும் பொருள் உண்டு என உண ரும் வரை ஒவ்வொரு பொருளும் வேறாக இருக்கும். இவ் வுண்மையினைக் கூறி விளக்கும் முறையில் அமைந்துள்ளது யாஞ்ஞ வல்கியர், மைத்ரேயி ஆகிய இருவர்களுக்கும் இடை நிகழ்ந்த சம்பாஷணை.

உபநிடதங்களில், ஆன்மாவுக்கு உள்ள பெயர்களில் ஒன்று பிராணன் என்பது. உபநிடதங்களில் பிராணன் பற் றிய குறிப்புகள் பல இடங்களில் காணப்படுகின்றன. இது வும் அறிவும் ஆற்றல் வாய்ந்த ஆன்மாவுடன் இணைந்து தொடர்புபடுத்தப் பெற்றுள்ளது.



பிராணன் 'ஆத்ம தத்துவ'த்துடன் தொடர்புகொண்டு நிற்பது உபநிடதங்களில் எடுத்துக்கூறப்படுகின்றது. இதைத் துணைக்கொண்டே பிரமத்துடன் ஒன்றி வீடுபேறு பெறும் வரை ஆன்மா அடையும் விழிப்பு, நித்திரை, ஆழ்ந்த நித் திரை, இறப்பு முதலிய நிலைகளைப் பற்றியும் உபநிடதங்களில் விளக்குகின்றன. ஆன்மா பல உடல்களுள் புகுந்து பிறவி களைப் பெறும் என்னுங் கருத்து இதில் இருந்து பிறந்ததே. இதைத் தொடர்ந்து 'கன்மம்' என்னும் கருத்தும் தோன்றி வளர்ந்து வரலாயிற்று. செயல் ஒவ்வொன்றிற்கும் அதற்கு உரிய பயன் தொடர்ந்து வருதல் வேண்டும் என்பதே இயற் கையின் நியதி. உபநிடதங்களில் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட கன்மம் பௌத்த மதத்தில் விரிவாக விளக் கப்பட்டு அங்கே தனி இடம் பெற்றுவிட்டது.

உபநிடதங்கள் கூறும் உயரிய குறிக்கோள் பிரமத் துடன் ஒன்றுதல், இது அவித்தை கெட, அதன் விளைவாய் எழும் உணர்வினால் அடையவல்லது. ஆன்மா பரமான்மா ஆகிய இரண்டின் ஐக்கியத்தை உணர்ந்தவனே வீடுபேற்றை அடைவன். இவ்வீடுபேறு பிரமத்துடன் நெருங்கி ஒன்றி 'ஐக்கியம்' அடைதல். நல்வினை, தீவினையாகிய இரண்டினை எய்துவிக்கும் செயல்களை நீக்கினால்இந்நிலையை அடையலாம். வேள்வி முதலிய நற்செயல்கள் திரும்பத் திரும்பப் பிறப்ப தற்குக் காரணமாய் உள்ளன. 'வித்தை' ஒன்றே சம்சாரத்தி தில் இருந்து விடுதலை அளித்து என்றென்றும் ஒன்றாய் உள்ள உண்மைப்பொருளை அடைய உதவுவது.

வித்தை எனப்படும் அறிவு எத்தகையது என்பதைஅதன் பல நிலைகளை ஆராய்ந்து அறியலாம். வேள்விகளைப் பற்றிய அறிவு மறைபொருளாக இருந்து வந்தது. இவ்வறிவை ஒரு வன் பெறுவதால் சிறந்த நன்மைகளைப் பெறுவான் என்னுங்

கருத்து ஆரணியகங்களிலும், பிராமணங்களிலும் திரும்பத் திரும்பக் கூறப்பட்டுள்ளது. இன்பம், உயர்ந்த பேறு, இம்மைச் செல்வம், சுவர்க்க போகம் என்பன எல்லாம் இதை அறிபவன் அடைவன் என்பது உபநிடதம் அடிக்கடி கூறும் உறுதி. அறிவு பலம் என்பது மட்டும் அல்ல. இதுவே மிக உயரிய குறிக்கோளாய் விளங்கியது. இதுவே உபநிடதங்கள் வற்புறுத்துவது. 'இந்திரன் பிரஜாபதியை அடைந்து பத்து ஆண்டுகள் குற்றேவல் புரிந்தது அறிவை அடையவே. அறிவைப் பெறவேண்டி மாணவர்கள் அறிவு நிரம்பிய அறிஞர்களை அடைந்து அறிவூட்டும்படி இரந்து நின்ற வரலாறுகளே உபநிடதங்களிற் பெருகிக் காணப்படுகின்றன. அரசர்கள் ஆன்ம விசாரணையில் ஈடுபட்டவர்களாய் ஆன்மாவைப் பற்றியும் பிரமத்தைப் பற்றியும் அறிவைப் பெற அவாவி ஆயிரம் பசுக்களையும், அளவிறந்த பொன்னையும் பிராமணர்களுக்கு அளித்தனர். அரசர்களிடமிருந்து இதே உயர்ந்த அறிவை அறிய வேண்டிப் பிராமணரும் அவரை அணுகி அமர்ந்து விளக்கங்கேட்டு உண்மை உணர்ந்தனர். உண்மையினை அறியும் அவா அக்காலத்தில் எவ்வளவிற்கு மிகுந்து விளங்கியது என்பதை எடுத்துக்கூற 'நசிகேதன்' வரலாறு ஒன்றே போதும்.

அறிவுமிகவும் உயர்த்தி மதிக்கப்பட்டதன் விளைவாக நிலவுலக வாழ்க்கையின்பம் பொருட்படுத்தாது விடுபடுவது மட்டுமின்றி, உலகமும் அறவே வெறுத்து ஒதுக்கப்படுகின்றது. இதை 'மைத்திராயணி' உபநிடதம் கூறும்வரலாறு தெளிவாக்குகின்றது. "இவ்வுலகம் துன்பமயமானது; துக்கம் விளைவிப்பது; இங்கு நிகழ்வன எல்லாம் தீமையையே தோற்றுவிப்பன" என்னுங் கொள்கையை இவ்வரலாறு விளக்குகின்றது. இவ்வுபநிடதம் புத்தர் காலத்துக்குப் பின்எழுந்தது. பௌத்தமும் இதேகொள்கையை வலியுறுத்துகின்றது. எனினும் ஏற்கனவே உபநிடதங்களில் இக்கருத்து எதிரொலிக்கத் தொடங்கிவிட்டது. இப்புற உலகம் காணப்படுவது போல் உண்மையானதன்று. 'பிரமமே உண்மையானது. இதுவே, ஆத்மா. இது பசி, தாகம் ஆகிய உணர்ச்சிகளுக்கு அப்பாற்பட்டது. துக்கம் மோகம் என்னும் இரண்டுக்கும் புறம்பானது. மூப்பும் இறப்பும் அற்றது. இதற்குப் புறம்பான நிலையில் நிற்றல் துன்பத்தையே பயக்கும். இதைவிடத் துன்பம் தரவல்லது வேறு ஒன்றும் இல்லை. உண்மையில் இதைவிடப் புறம்பானது ஒன்றுமே இல்லை. எனவே இவ்வுலகில் நிகழும் துக்கம், இன்னல் முதலியவற்றின் அனுபவம் பொய்யானது. ஐக்கியத்தின் உண்மை நிலையை உணரும் ஒருவனுக்குப் பயம் இல்லை, துன்பமும் இல்லை. பிரமானந்த உணர்வு வரப் பெற்றவனுக்குப் பயமே கிடையாது. ஐக்கியத்தை உணர்பவனுக்கு மோகம் எங்கிருந்து வரும்? அவனுக்குத் துக்கம் ஏது? பிரமம் ஆனந்தம் எனவும் கூறப்படும். ஆன்மம், ஆனந்த மயமானது. ஆனந்தமே பிரமம். உண்மையைக் கூறுவதாயின், ஆனந்தத்தில் இருந்தே இவை எல்லாம் தோன்றின. இதனாலேதான் தோன்றியவை எல்லாம் நிலைபெற்றன. இவை மறையும்பொழுது ஆனந்தத்துள்ளேயே ஒன்றி விடுகின்றன.



உபநிடதங்களுக்குப் பிற்காலத்தில் கிளைத்தெழுந்த தரிசனங்கள் எல்லாம் உபநிடதங்களிலேயே வேரூன்றியுள்ளன. உபநிடதம் கூறும் கருத்துக்களின் அடிப்படையிலேயே 'பாதராயணரின் வேதாந்த சூத்திரம்' அமைந்துள்ளது. சங்கரர் விளக்கியுள்ள 'அத்துவித' வேதாந்தமும், இராமானுஜர் எடுத்துக்கூறிய 'விசிட்டாத்துவிதமும்' மாத்துவர் புகட்டிய 'துவிதமும்' நீலகண்டர் எடுத்து விரித்துக் கூறிய 'சிவாத்துவிதமும்' உபநிடதங்களை முதல் நூல்களாகக் கொண்டே அமைந்துள்ளன. உபநிடதம் கூறும் உயர்ந்த கருத்துக்களை நிலைக்களமாகக் கொண்டே இந்தியாவில் எழுந்த தத்துவக் கொள்கைகள் மட்டுமின்றிச் சமயக் கொள்கைகளும்-ஏன் புறசமயங்களான பௌத்தமும் கூட-தாம் தாம் கூறும் உண்மைகளை உணர்ந்து நூல்களை உருவாக்கியுள்ளன.

"அறிவு இருவகைப்படும். ஒன்று உயரிய அறிவு. இது பிரமத்தைப் பற்றியது. மற்றையது இருக்கு, யசுர், சாமம், அதர்வம், சிட்சை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜோதிஷம் என்பனவற்றைப் பற்றி எழுவது." இவ்வாறு உபநிடதம் ஒன்று எடுத்துக் கூறுவதைக் காண்கின்றோம். இத் தொடர்பில்தான் ஆறு வேதாங்கங்களும் முதன் முதலாகக் கூறப்பட்டுள்ளன எனலாம். அங்கங்கள் எனினும் உறுப்புக் கள் எனினும் பொருந்தும். வேதங்களுடன் நெருங்கிய தொடர்பு பெற்றவையாய், விளக்கங் கூறும் நோக்கம் ஒன் றையே கொண்டு, வேதங்களைத் தெளிந்து அறிவதற்கு இன் றியமையாத நூல்களாய் இவை விளங்குகின்றன. இவ்வேதங் களின் தோற்றுவாய் பிராமணங்களிலும் ஆரணியகங்களி லுமே காணப்படும். வேள்வி முறைகளை விளக்கும் சந்தர்ப் பத்தில் சொல்லின் ஒலி இயல்பு, இலக்கணம், சொல் அமையு மாறு, அதை முறையாகப் பிரித்துக் காட்டிக் கூறும் விளக்கம், யாப்பு, வேட்கும் வேளையை யறிவதற்குத் துணை நிற்கும் கோள்களின் நிலை முதலிய ஆறு விஷயங்களைப் பற்றிப் பிரா மணங்களும் ஆரணியகங்களும் குறிப்பிடுகின்றன. இவை பற்றிக் கூறப்பட்ட விளக்கங்கள் சிறிது சிறிதாக விரிந்து உருவாகத் தொடங்கின. இவ்வாறு விரித்துக் கூறப்பட்ட தோடு அமையாது இவை முறையாக ஒழுங்குபடுத்தப்பட்ட தனித்தனித் துறைகளாக அமைக்கப்பட்டன. ஒவ்வொரு அங்கமும் தனித்தனி பிரிவுகளாகக் கிளைத்தெழுந்தன. பிரா மணங்கள், ஆரணியகங்கள், உபநிடதங்கள் போன்று இவை யும் உரியவாறு வெவ்வேறு வேதங்களுடன் தனித்தனி இணைக்கப்பட்டன. இவை பற்றி எழுந்த நூல்கள் புதிய தொரு நடையில் அமைந்து விளங்கின. செய்யுள் நடையல் லாத புதியதொரு நடையைக் கொண்ட சூத்திரங்களைக் கொண்டு இவை ஆக்கப்பட்டுள்ளன.

சூத்திரமெனினும் நூலெனினும் ஒக்கும். சில சொற்களை மட்டுமே கொண்டு சுருங்கிய நடையில் அமையும் சிறு சிறு வாக்கியமே சூத்திரம் என்றும் இதை விளக்கிக் கூறலாம். நூல்கள் பலவற்றை நெருக்கி இழையோட்டித் துணியை உருவாக்குவது போல், சூத்திரங்களை ஒன்றுடன் மற்றது தொடர்புஉறும் வண்ணம் அமைத்து உருவாக்கப்படுவது இவ்வகை இலக்கிய நூல். சூத்திரங்களால் ஆக்கப்படுவதனால் இது சூத்திரம் என ஆயிற்று. பல விபரங்களை எல்லாம் எடுத்துக் கூறும் சாஸ்திரங்களின் மூல நூல்கள் யாவும் சூத்திரங்களால் அமைந்து விளங்குவது நோக்கற்பாலது. பாணினியின் அஷ்டாத்யாயீ, வேதாந்தத்தின் மூலநூல் எனக் கொள்ளக்கூடிய பிரம சூத்திரம், ஆறு தரிசனங்களின் மூல நூல்களான மீமாம்ஸா சூத்திரம், சாங்கிய சூத்திரம், யோக சூத்திரம், நியாய சூத்திரம், வைசேஷிக சூத்திரம் முதலியன இதற்கு எடுத்துக்காட்டு. இவ்வகை அமைப்பைப் பெற்ற நூல்களை உலகில் உள்ள வேறெந்த மொழியிலும் காணுதல் அரிது. கருத்துத் தெளிவும், பார்த்தவுடன் படிப்பவர்களுக்குத் தாம் கூற இருக்கும் விஷயத்தை விளங்க வைக்கும் இயல்பும் அற்றவை எனினும் சொல்ல வேண்டுவது முழுவதையும் சுருக்கிச் சொல்ல முடியும் அளவிற்குச் சுருக்கிக் கூறும் ஆற்றல் இவற்றிற்கு உண்டு. ஓராண்மகவு பிறந்தால் வரும் இன்பம் சூத்திரத்தை அரை மாத்திரை குறுக்கி அமைப்பதனால் உண்டாகும் என்னும் மரபு பற்றி ஏற்கனவே கூறப்பட்டது.

சூத்திரங்களாலமைந்த நூல்களுள் மிகப் பழையவை பிராமணங்களுடனும், ஆரணியகங்களுடனும் தொடர்பு உள்ளவை. ஐதரேய ஆரணியகத்தின் சில பகுதிகளே சூத்திரங்களாகக் காணப்படுகின்றன. இவை ஏனைய சூத்திரங்களை இயற்றியவர்களான ஆஸ்வலாயனர், சௌனகர் முதலியவர்களால் இயற்றப்பட்டன என்பர். சாம வேதத்தின் உறுப்புக்களான சில பிராமணங்கள் கூட அமைப்பில் சூத்திரங்களை நிகர்க்கின்றன. இவற்றை வேதாங்கம் எனக் கருதுதல் பொருத்தம். கல்பம் என்னும் இன்னொரு வேதாங்கம் கூறுவதையே பிராமணங்களும் கூறுகின்றன. இவ்விஷயங்களை



எடுத்துச் சீராக்கி வரிசைப்படுத்தித் தனக்கென உள்ள நடையில் கூறும் இவ்வேதாங்க நூலைக் கல்ப சூத்திரம் என்பர். வேள்வி முறை பற்றிய விதிகளைத் தொடர்ச்சியாகவும், நினைவில் எளிதில் பதியக் கூடியவாறும் நூலாக்குவதொன்றையே நோக்கமாக கொண்டு இதை இதன் ஆசிரியர் உருவாக்கினர். இது வேட்போருக்குப் பெரிதும் பயன்படும். பிராமணங்கள் கூறும் சிரௌத யாகங்களை எடுத்துரைக்கும் சூத்திரங்கள் சிரௌத சூத்திரங்கள் எனப்படும். தினந்தோறும் வீட்டில் நிகழ இருக்கும் வீட்டு நிகழ்ச்சிகளைக் கூறும் நூல்கள் கிருஹ்ய சூத்திரங்கள் எனப் பெயர் பெறுவன.

சிரௌத சூத்திரங்களில் மூவகை அக்கினிகள் மூட்டும் வகையும், அக்கினி ஹோத்திரம், பௌர்ணமாஸ்யம், சோமயாகம் முதலிய வேள்வி முறைகளின் விவரங்களும் விளக்கப்பட்டுள்ளன. வேள்வி முறையைச் செவ்வனே விளங்க இவை இன்றியமையாதவை. மேலும், இந்திய சமய வரலாறு எழுதும் பொழுது இவை பெரிதும் பயன்படுவன.

கிருஹ்ய சூத்திரத்தில் அடங்கியுள்ள விஷயங்கள் பல்வேறு வகையின. இவை சமய வாழ்க்கையின் இயல்புகளை விரிவாய் விளக்க உதவுவன. பிறந்தவுடன் மட்டுமன்றித் தாயின் கருவில் நுழையும் அக்கணம் முதற் கொண்டே இனிப் பிறக்க இருக்கும் சிசுவுக்குத் தூய்மை கருதிச் செய்ய வேண்டிய கிரியைகளை ஒன்றன் பின் ஒன்றாக வரிசைப்படுத்தி இந்நூல்கள் கூறும். இக்கிரியைகளைச் சம்ஸ்காரங்கள் என்பர். எனவே மனிதன் கருவில் தோன்றுமுன் தொடங்கும் சம்ஸ்காரங்கள் இவன் இறந்தவுடனே நின்று விடாது. இவனது ஆன்ம ஈடேற்றம் கருதித் தொடர்ந்து நிகழ்வன. இவ்வாறு வீட்டில் நிகழும் கிரியைக்களைக் கூறும் கிருஹ்ய சூத்திரங்களை கொண்டு அக்கால வாழ்க்கை முறையினை ஓரளவிற்கு விரிவாக எழுதலாம். தாயின் கருவில் சிசு தோன்றுவதற்கு முன் நிகழும் கிரியை கர்ப்பாதானம். கர்ப்பாதானம் நிகழ்ந்து நான்குமாதங்களான பின் தோன்றிய கரு ஆண் மகவாக அமைதல் வேண்டும் என அவாவிச் செய்யப்படும் கிரியை

பும்ஸவனம். கருத் தோன்றியபின் ஆறும்மாதத்தில்நிகழ்வது சீமந்தம் என்னும் கிரியை. இவ்வாறு குழந்தை பிறந்தது முதல் நிகழும் கிரியைகளான ஜாதகர்மம், நாமகரணம், அன்னப் பிராசனம், நிஷ்கிரமணம், சௌளம், உபநயனம், சமாவர்த்தனம், விவாகம் என்பன சுபகாரியங்கள். இவை பூர்வக் கிரியைகள் என்றும் பெயர் பெறுவன. இறந்தபின் நிகழும் கிரியைகள் அபரக்கிரியைகள் எனப்படும். சிதையில் இட்டுத் தீ மூட்டலாகிய தகனம், சஞ்சயனம், பாஷாணஸ்தாபனம் ஏகோதிஷ்டம், விருஷோத்சர்ஜனம், மாசிகம், சபிண்டீகரணம், ஆப்திக சிராத்தம், பிரத்யாப்திகசிராத்தம்என்றெல்லாம் இக்கிரியைகள் விரிந்து நிகழ்வன. இவை எல்லாம் வீட்டில் நிகழ்வன ஆதலின் கிருஹ்யகர்மங்கள் எனப்படும். இவையன்றி இல்வாழ்வான் நாள்தோறும் செய்யவேண்டிய ஐம்பெரும் வேள்விகளையும் இந்நூல்கள் கூறும். 'இவை தேவயஞ்ஞம், பிதிர்யஞ்ஞம், தீ வளர்த்தல், நீர்க்கடன், அதிதி ஓம்பல், பிரமயஞ்ஞம் என்பன.மேலும் காலைக் கடன், மாலை கடன், தர்ச பூரண மாஸம், அக்கினி ஹோத்திரம், சாதுர்மாஸ்யம் முதலிய சிரௌத கிரியைகள் பற்றியும் இங்கு குறிப்புக்கள் உண்டு. பிதிரர்களுக்குக் கடமை ஆற்றும் முகமாக அமைந்துள்ள சிராத்த முறைகள் இங்கு விரிவாக இடம் பெற்றுள்ளன.

சிரௌத சூத்திரங்களையும், கிருஹ்ய சூத்திரங்களையும் விட இன்னொருவகைச் சூத்திரங்களும் உண்டு. இவை தர்ம சூத்திரங்கள் என்பன. இவற்றைக் கிருஹ்ய சூத்திரங்களின் தொடர்பு நூல்கள் என்பர். இவை அறநெறி கூறுவன; ஒவ்வொருவனும் ஆற்றவேண்டும் கடமைகள் இவை என எடுத்து வற்புறுத்தி விதிப்பன. இங்கு வர்ணாச்சிரம தர்மங்கள் விரிவாகக் காணப்படுபவன. தர்ம சூத்திரங்களும். சிரௌத, கிருஹ்ய சூத்திரங்களைப் போல் வேதங்களுடன் தொடர்பு பூண்டு கிரியைகளை விளக்கும் கல்ப சூத்திரங்களின் உறுப்பு நூல்களாக இருப்பது நோக்கற்பாலது.

மேலும், சிரௌத சூத்திரத்துடன் இணைக்கப்பட்டுள்ள சுல்வ சூத்திரங்களும், கல்ப சூத்திரங்களுடன் தொடர்பு



உடையவை. யாக வேதிகளையும், குண்டங்களையும் அமைப்பதற்கு வேண்டிய அளவுகளைக் கூறும் இந்நூல்கள் இந்தியாவில் எழுந்த பழைய கேத்திர கணித முறை அமையுமாற்றைச் சுட்டுகின்றன. சுல்வம் என்பதற்கு அளக்கும் நூல் என்பது கருத்து.

சிரௌத சூத்திரங்களும், கிருஹ்ய சூத்திரங்களும் வேதங்களை விளக்கத் துணை புரியும் நூல்கள். கிரியைகள் செய்யும் முறையை மட்டும் கூறுவதுடன் நின்றுவிடாது மந்திரங்களைப் பிரயோகிக்கும் முறையையும் இவை விரித்துரைக்கின்றன. இச்சூத்திரங்களில் கூறப்பட்டுள்ள பிரயோகங்கள் மந்திரங்களின் தெளிவற்ற பகுதிகளையும் விளங்கிக் கொள்ளவும் பயனுறுகின்றன. சில சூத்திரங்கள் மந்திரங்கள் முழுவதையும் கூறுகின்றன. சில மந்திரங்களின் தொடக்கத்தை மட்டும் குறிப்பிட்டு விட்டுத் தொடர்ந்து அவற்றின் பிரயோகங்களைக் கூறுகின்றன.

கிருஷ்ண யசுர் வேதத்தைச் சார்ந்த சிரௌத சூத்திரங்களும், கிருஹ்ய சூத்திரங்களும் கிருஷ்ண யசுர் வேத சங்கிதையில் காணப்படுமாறே மந்திரங்களைக் குறிப்பிடுகின்றன. ஆனால் இப்பாடல்களின் முதற்றொடக்கம் மட்டுமே இங்கு உள்ளது. இதில் இருந்து இம்மந்திரங்கள் இச்சாகையைச் சேர்ந்தவர்களுக்குத் தெரிந்தவை என்பது தெளிவாகின்றது. இருக்கு சங்கிதை அல்லது அதர்வ சங்கிதையில் இருந்து எடுக்கப்படும் மந்திரங்கள் மட்டும் முழுவதும் கூறப்பட்டுள்ளன. இதை விடச் சில சூத்திரங்களில் சங்கிதைகளில் காணப் படாத மந்திரங்கள் சில உள. இரு கிருஹ்யசூத்திரங்களில் சூத்திரங்களின்றும் வேறாக மந்திரங்கள் அமைந்துள்ளன. கோபில கிருஹ்ய சூத்திரத்திற்கு வேண்டிய மந்திரங்களும், ஆபஸ்தம்ப கிருஹ்ய சூத்திரத்தைச் சேர்ந்த மந்திர பாடமும் கொண்டமைந்த இந்நூல் மந்திரபிராமணம் எனப் பெயர் பெறும்.

ஆபஸ்தம்பர், பௌத்தாயனர், என்னும் இருவர் வகுத்த வழி கிருஷ்ண யசுர் வேதம் பற்றியது. இவர்களால் ஆக்கப்

பட்ட கல்பசூத்திரங்கள் நான்கு பிரிவுகளால் அமைந்த சூத்திர நூல்களாக விளங்குவன. அவை சிரௌத சூத்திரம், கிருஹ்ய சூத்திரம், தர்ம சூத்திரம், சுல்வ சூத்திரம் என்பன. எனவே ஆபஸ்தம்ப சிரௌத சூத்திரம், ஆபஸ்தம்ப கிருஹ்ய சூத்திரம், ஆபஸ்தம்ப தர்ம சூத்திரம், ஆபஸ்தம்ப சுல்வ சூத்திரம் என்றும் போதாயன சிரௌத சூத்திரம், போதாயன கிருஹ்ய சூத்திரம், போதாயன தர்மசூத்திரம், போதாயன சுல்வ சூத்திரம் என்றும் இவை பெயர் பெறுவன. இந்நால்வகைச் சூத்திர நூல்கள் ஒன்றேடொன்று தொடர்புற்று விளங்குவதை நோக்குமிடத்து, இவை ஒரே நூலின் நான்கு பகுதிகளோ என எண்ணக் கூடியதாக இருக்கின்றது. கருத்துக்களைத் தெளிவாகவும், தொடர்ச்சியாகவும், முழுதாகவும் எடுத்துக் கூறுவதில் இந்நூல்கள் ஈடு இணை அற்றவை.

இதுகாறும் கூறப்பட்ட சூத்திரங்களும் வாதூல சூத்திரங்களும் வைகானச சூத்திரங்களும் தைத்திரீய சங்கிதையைச் சார்ந்தவை. சூத்திரங்களை இயற்றியவர்களுள் பௌதாயனரே முந்தியவர். பாரத்துவாசர், ஆபஸ்தம்பர், ஹிரண்யகேசி என்பவர்கள் அடுத்தடுத்து வாழ்ந்து தொடர்ந்து சூத்திரங்களை இயற்றி வந்தனர். மானவ சிரௌத சூத்திரம், மானவ கிருஹ்யசூத்திரம், மானவசுல்வ சூத்திரம் என்பனவும், மானவ கிருஹ்ய சூத்திரத்துடன் தொடர்புள்ள காடக கிருஹ்ய சூத்திரமும், மைத்திராயணி சங்கிதையைச் சார்ந்தவை.

நான்கு வகைப்பட்டு நிற்கும் சூத்திரங்களைத் தழுவி விளங்கும் கல்பசூத்திரம், "ஒவ்வொரு வேதத்திற்கும், பௌதாயன ஆபஸ்தம்ப சூத்திரங்களைப் போன்று இருந்ததா?" என்னுங் கேள்விக்கு விடை இறுத்தல் எளிதன்று. கிருஷ்ண யசுர் வேதத்தைச் சாராத நூல்களில் அங்கும் இங்குமாகச் சிரௌத கிருஹ்ய சூத்திரங்கள் மட்டும் தனியே காணப்படுவன. எனினும், இருக்கு வேதத்துடனும், சுக்கில யசுர் வேதத்துடனும் தொடர்புள்ள தர்ம சூத்திரங்கள்



கிடையா எனக் கூறலாம். 'காத்யாயன சிரௌத சூத்திரமும் பாரஸ்கர கிருஹ்ய சூத்திரமும், காத்யாயன சுல்வ சூத்திரமும், சுக்கில யசுர் வேதத்தைச் சார்ந்தன. அங்ஙனமே ஆஸ்வலாயன சிரௌத சூத்திரம், ஆஸ்வலாயன கிருஹ்ய சூத்திரம், சாங்காயன சிரௌத சூத்திரம், சாங்காயன கிருஹ்ய சூத்திரம் இருக்கு வேதத்தைப் பற்றி அமைந்துள்ளன. சாம வேதத்தைச் சார்ந்தவை 'லாட்யாயன சிரௌத சூத்திரமும்' திராஹ்யாயன சிரௌத சூத்திரமும், ஜைமிநீய கிருஹ்ய சூத்திரமும், ஜைமிநீய சிரௌதசூத்திரமும், கோபிலகிருஹ்ய சூத்திரமும், காதிர கிருஹ்ய சூத்திரமுமாம். 'ஆர்ஷேய கல்பம்' எனப்படும் 'மசக கல்ப சூத்'திரமும் சாமவேதத்தைச் சார்ந்தது. இது சாமம் இசைக்கும் முறையினை விளக்குவது; இது 'பஞ்ச விம்ச பிராமணத்'துடன் தொடர்புள்ளது; லாட்யாயன சூத்திரத்தைக் காட்டிலும் முந்தியது. அதர்வ வேதத்தைச் சார்ந்த 'வைதான சிரௌத சூத்'திரம் மிகவும் பிந்திய காலத்து நூல். அதர்வ வேதத்தின் மதிப்பை மேலும் உயர்த்தி அதை வேதமாக இடம்பெறச் செய்வதாக இது எழுந்ததாகத் தெரிகின்றது. இவ்வேதத்தைச் சார்ந்த 'கௌசிக சூத்திரமும்' பழைய நூல் மட்டும் அன்றி முக்கியமானதாகவும் கருதப்படும். இது கிருஹ்ய சூத்திரமாகப் பெரும்பாலும் அமைந்து கிருஹ்ய கர்மங்களைப் பற்றிக் கூறும். அதர்வ மந்திரங்களை மாந்திரீக ரீதியிற் பிரயோகிப்பதற்கு வேண்டிய விதிகளையும், பல்வகை முறைகளையும் விளக்கிக் கூறும் இந்நூல் அதர்வ வேதத்தின் உறுப்பு நூல். இது இந்தியாவில் வழங்கிய பழைய மாந்திரீக முறைகளை அறிவதற்கு வழிகோலும் நூல். இவ்வாறே சாம வேதத்தைச் சார்ந்த சாம விதானபிராமணமும் மாந்திரீகத்தைப் பற்றிக் கூறுவதாய்ப் பிராமணம் எனப் பெயர் பெறினும், சூத்திர நூலாகக் கருதப்படும்.

கிருஹ்ய சூத்திரங்களை அடுத்துத் தோன்றியன 'சிராத்த கல்பங்கள்' இவை சிராத்தங்கள் நிகழ்த்த வேண்டுமாற்றை விளக்குவன. 'பிதிர்மேதசூத்திரங்'களும் இத்தகையனவே. இவற்றுட் சிலவற்றை வேதங்களுடன் இணைத்து அவற்றின் உறுப்பாகக் கொள்ளுவர். சில மிகப் பிற்காலத்தில் எழுந்

தவை. இச்சூத்திர நூல்கள் கிரியை முறைகளை முற்றிலும் கூறி முடித்துவிடவில்லை. உபநிடதங்கள் புகட்டும் உண்மைகளைக் காலத்துக்குக் காலம் தொடர்ந்து எழுந்த உரை நூல்கள் விளக்கிக்கொண்டே இருப்பது போல், வைதிகக் கிரியை முறைகளை, கிரியை விளக்கங் கூறும் இத்தகைய நூல்கள் பல, விரித்துக் கூறி வந்தன. இவ்வாறு கூறுதல் நெடுங்காலமாகவே தொடர்ந்து நடைபெற்று வருவது. சிரௌத கிருஹ்ய சூத்திரங்களை அடுத்து எழுந்த நூல்கள் 'பரிசிஷ்டங்கள், சூத்திரங்கள் சுருக்கிக் கூறும் கருத்துக்களை இவை நன்கு விரித்துக் கூறுவன. 'கோபில கிருஹ்ய சூத்திரத்'துடன் தொடர்புள்ள 'கிருஹ்ய சங்கிரக பரிசிஷ்'டமும், 'கர்மப்பிரதீபமும்' முக்கியமானவை. 'அதர்வ பரிசிஷ்டங்கள்' மாந்திரீக முறைகளையும், நன்னிமித்தம், துர்நிமித்தம் ஆகிய சகுனங்களையும் இது போன்ற வேறு விஷயங்களையும் கூறுவன. அக்காலத்தில் நிலவிய சமய வழக்கங்கள் இவை என அறிவதற்கு இவை துணை நிற்பன. 'வைதான சூத்திர'த்தின் உறுப்பாய் அமைந்து விளங்கும் 'பிராயச்சித்த சூத்திரத்தின் பரிசிஷ்டங்கள் பிராயச்சித்தங்களைப் பற்றிக் கூறுகின்றன. பரிசிஷ்டங்களுள் பழைய நூல்கள் இவைகளே. கிரியை முறைகளை விளக்க இச்சூத்திர இலக்கியத்தை அடுத்து எழுந்த நூல்கள் பல்வேறு வகையின. இவற்றுட் சில 'பிரயோகங்கள்'; சில 'பத்ததிகள்' எனப்படுவன; சில 'காரிகைகள்' என்று பெயர் பெறுவன. காரிகைகள் கிரியை முறைகளை விளக்கும் ஒருவகைச் செய்யுட்கள். இவையும் ஏதாவது வேதத்துடன் தொடர்பு கொண்டு 'நித்திய நைமித்திய' கிரியைகளை விளக்குகின்றன. விவாகக் கிரியைகள், இறந்தோரைப் புதைத்தல், தீக்கடன், நீர்க்கடன், 'சிராத்தம்' முதலிய கிரியைகளைக் கூறும் இந்நூல்கள் மிக முக்கியமானவை. இவற்றுட் பெரும்பாலானவை கைப்பிரதி வடிவிலும் சில அச்சேறியும் காணப்படுகின்றன.

ஒலி இயலை விளக்கிக் கூறும் 'சிட்சை' என்னும் வேதாங்கம் கல்ப சூத்திரங்களளவிற்குப் பழைமையானவை. கல்ப சூத்திரங்கள் பிராமணங்களின் உறுப்பு நூல்களாக அமைந்துள்ளன. சிட்சை நூல்களோவெனின் வேத சங்கிதைகளுடன் நேர்த் தொடர்பு உடையவை. சிட்சை, பயிற்சி எனப் பொருள்படும். இப்பயிற்சி, வேதம் ஓதுவதற்கு மாணவன் பெறும் பயிற்சியையே குறிக்கும். இது சங்கிதை நூல்களில் வரும் வாக்கியங்களை எல்லாம் உரியவாறு உச்சரித்து வேதங்களை ஓதுவதற்கு வேண்டிய முறையைப் பயிற்றுவிக்கும் நூல்களைக் குறிப்பது. தைத்திரீய உபநிடதத்தில்தான் இவ் வேதாங்கத்தைப் பற்றிய குறிப்பு முதன் முதலில் வருகின்றது. கல்ப சூத்திரங்கள் எழுந்தவாறே, எழுத்துக்கள் 'மாத்திரை, சாமம், சந்தி,' முதலியன கூறும் சிக்ஷை நூல்களும் வழிபாட்டுக்கு இன்றியமையாதவாறு வேண்டப்பட்டு வேதங்களின் உறுப்புக்களாய் எழுந்தன. யாகாதி கிரியைகளை உரியவாறு இயற்றக் கிரியைகள் பற்றிய அறிவு மட்டும் போதாது. வேதங்களைத் தவறெதுவும் இன்றி ஓதவும் தெரியவேண்டியது அவசியம். சிட்சை தோன்றிய பொழுது சங்கிதைகள் வகுக்கப்பட்டு இப்பொழுது வழங்கிவரும் தோற்றம் பெற்றுவிட்டன என்பது இதிலிருந்து தெளிவாகின்றது.

சில ஆராய்ச்சியாளர் இருக்கு சங்கிதை இருடிகளால் முதன்முதலில் அமைக்கப்பட்ட நிலையில்இப்பொழுது காணப்படுவதில்லை என்பர். சிலர் இச்சங்கிதையிற் காணப்படும் சொல் எதுவும் நீக்கப்படவோ புதிதாக ஏதேனும் சொல் சேர்க்கப்படவோ இல்லை என்னும் உண்மையை வற்புறுத்திக் கூறுவர். இவ்விரு கொள்கைகளும் ஆராயப்பட வேண்டியவை. சொற்களை உச்சரிக்கும் முறையையும் நிலைமொழி ஈறும் வருமொழி முதலும் ஒலிக்கப்படும் முறையையும், விட்டிசைக்கப்படவேண்டிய இடங்களில் எல்லாம் விட்டிசைக்காது சேர்த்திசைக்கும் முறையையும் உற்று நோக்குவோமேயானால் இயற்கையாக ஒலிக்கும் முறையை விடுத்து ஒலியியல்பு கூறும் விதிகளைக் கடைப்பிடித்தே சங்கிதையை இன்று எமக்குக் கிடைக்கும் வடிவில் உருவாக்கினர் என்று நாம் உணர முடிகின்றது. இவ்வாறு துணிய உதவுவது பாடல்களில் அமைந்து கிடக்கும் யாப்பு முறையே. மொழியியல் வல்லுனர்களின் கைவண்ணத்தால் மெருகூட்டப்பட்

டவை, சங்கிதைகள். இச்'சங்கிதை பாடத்'தைத் தவிர 'பத பாட'மும் உண்டு. சங்கிதைப் பாடம் சிட்சை கூறும் விதிகளுக்கு அமைய விளங்குவது. பதபாடத்திலோ எனின் சொற்கள் ஒலியியல் விதிக்கு இணங்கப் பெற்ற இணைப்புகள் நீங்கியவையாய்த் தனித்தனி சொற்களாகப் பிரிந்து வருவன. இவ்வாறு சொற்கள் பிரிந்து வரும்பொழுது அவற்றின் 'ஸ்வரங்'களும் உரியவாறு வேறுபடுவது நோக்கற்பாலது.

சிட்சை என்னும் வேதாங்கத்தின் தொடர்பால் எழுந்தவையே 'சங்கிதா பாடம், பதபாடம்' என்னும் இரு பாடங்கள். இவ்வேதாங்கத்தின் பாற்படும் மிகப் பழைய நூல்கள் 'பிராதிசாக்யங்கள்' என்பன. சங்கிதையைப் பதபாடமாக அமைப்பதற்கு வேண்டிய விதிகள் இங்கு முறையாகக் கூறப்பட்டுள்ளன. உச்சரிக்கும் முறை, ஸ்வரங்களின் அமைப்பு, சொற்கள் ஆக்கம் பெறும் பொழுது நிகழும் சந்தி, சொற்களின் ஈறும் முதலும் புணரும் முறை, குறில் நெடிலாதல் முதலியன இப்பிராதிசாக்கியங்கள் கூறும் விஷயங்கள். சங்கிதையின் ஒவ்வொரு சாகைக்கும் பிராதிசாக்கியம் உண்டு. இதனுற்ருன் 'பிராதி சாக்யம்' என்னும் பெயர் இதற்கு ஏற்படலாயிற்று. இருக்கு வேதப் பிராதிசாக்கியத்தை ஆஸ்வலாயனரின் குரு எனக் கருதப்படும் 'சௌநகர்' இயற்றினுர் என்பர். இது செய்யுள் நடையில் அமைந்துள்ளது. முதலில் சூத்திரங்களால் உருவாகிப் பின் மாற்றம் பெற்று இவ்வடிவில் அமையப் பெற்றது என்று கொள்வர். இவற்றை விளக்க எழுந்த உரை நூல்கள் இவற்றைச் சூத்திரங்கள் எனக் குறிப்பிடுகின்றன. 'தைத்திரீய பிராதிசாக்ய சூத்திரம்? தைத்திரீய சங்கிதையைச் சேர்ந்தது. காத்தியாயனர், 'வாஜசநேயி பிராதிசாக்ய சூந்திரத்தின்' ஆசிரியர். இது வாஜசநேயி சங்கிதையைச் சேர்ந்தது. அதர்வ வேதத்துடன் தொடர்புடையது. 'அதர்வ வேதப் பிராதிசாக்ய சூத்திரம், இது சௌநக சாகையைச் சேர்ந்தது. சாம வேதத்தைச் சார்ந்த இவ்வகை நூல்களுள் 'சாமப் பிராதி சாக்யம்' முக்கியமானது. 'புஷ்ப சூத்திரம்' என்னும் நூல் சாமவேதத்தின் 'உத்தர கான'த்தைப் பற்றிய பிராதிசாக்யமாகும்.



பஞ்சவித சூத்திரமும் சாமம் பாடும் முறையினை விளக்கும் இவ்வகை நூல்.

இந்தியாவில் இலக்கண நூல்கள் தோன்றி வளர்ந்த வரலாற்றைக் கூறுபவர்கள் பிராதிசாக்யத்தையே முதன் முதலில் குறிப்பிடுவர். இவை இலக்கண நூல்களல்ல. எனினும் இலக்கண நூல்கள் கூறவேண்டும் விஷயங்களைக் கூறுகின்றன. இந்நூல்கள், பல இலக்கண நூலாசிரியர்களை மேற்கோள்களில் குறிப்பிடுவதில் இருந்து இலக்கணம் அக்காலத்தில் எவ்வாறு வளர்ந்து விளங்கிற்று என ஊகித்தறிய முடிகின்றது. பிராதிசாக்யங்கள் தோன்றிய காலம் முதல் இன்றுவரை சங்கிதைகள் எவ்வாருன திரிபுகளும் இன்றி அதே வடிவில் பல நூற்ருண்டுகளாக வழங்கி வந்திருக்கின்றன என்பதைப் பிராதிசாக்யங்களே அறிவுறுத்துகின்றன.

வேதாங்க சிட்சை இலக்கியத்தில், மிகப் பழைய நூல்களான இப்பிராதிசாக்யங்கள் மட்டுமல்லாமல் பிற்கால நூல்களும் பல இருக்கின்றன. இவை சொல்லியல் பற்றியவை; சிட்சை நூல்களாகவே கொள்ளப்படுபவை. பாரத்துவாசர், வியாசர், வசிஷ்டர், யாஞ்ஞுவல்கியர் என்பவர்கள் இவற்றை இயற்றியவர்கள். இவை பிராதிசாக்யம் வகுத்த வழியையே பின்பற்றுவன. இச்சிட்சை நூல்களிற் சில பழைய நூல்களாகக் கருதப்படுகின்றன. ஒவ்வொன்றும் ஏதாவதொரு பிராதிசாக்யத்துடன் தொடர்புடையது. உதாரணமாக வியாச சிட்சை தைத்திரீயபிராதி சாக்யத்தைச் சார்ந்தது.

சௌநகர், காத்தியாயனர் என்னும் இருவரும் பிராதிசாக்யங்களை இயற்றியோர் எனக் கருதப்படுவர். இவர்கள் இயற்றிய நூல்கள் வேதாங்கங்கள் எனக் கொள்ளுவது பொருத்தம். ஏனெனில் இவை வேத சங்கிதைகளைப்பற்றியவை. ஆனுல் இவற்றை வேதாங்கங்கள் என்று கூறும் மரபு கிடையாது. இவை அநுக்கிரமணிகள் என்றே இன்று வழங்கி வருகின்றன. வேத சங்கிதைகள் கூறும் பகுதிகளின் பட்டியல்

களாகவும், வரிசைப்படுத்திக் கூறும் நூல்களாகவும், குறிப்பகராதிகளாகவும் இவை அமைந்துள்ளன. சௌனகர் இருக்கு வேதப் பாடல்கள் பாடிய இருஷிகளின் வரிசை கூறும் அநுக்கிரமணியை அமைத்தனர். இருக்கு வேதப் பாடல்களின் யாப்புப் பற்றிய வரிசையும் இவர் யாத்ததே. இதே போன்று இருக்கு வேதத் தெய்வங்களின் வரிசையையும், சூக்தங்களின் வரிசையையும் இவர் தனித் தனி அமைத்துள்ளார். சர்வாநுக்கிரமணி என்னும் நூல் காத்தியாயனர் இயற்றியது. எல்லாவற்றையும் வரிசைப்படுத்திக் கூறுவது இந்நூல். இது சூத்திரங்களால் அமைந்துள்ளது. ஒவ்வொரு சூக்தத்தின் முதல் தொடக்கத்தையும், சூக்தங்களிற் காணப்படும் பாட்டுக்களின் எண்ணிக்கையையும், சூக்தங்களை இயற்றிய இருஷிகளின் பெயர்கள், கோத்திரம் முதலிய விவரங்களையும், தனித்தனி பாடல்களால் போற்றப்பட்ட தெய்வங்களின் பெயர்களையும், பாட்டுக்களை அமைக்க எடுத்தாளப்பட்ட யாப்பு முறை பற்றிய குறிப்புக்களையும் இந்நூல் எடுத்துக் கூறுகின்றது. 'பிருகத்தேவதா' என்னும் நூலையும் இருக்விதானம் என்னும் நூலையும் இயற்றியவர் சௌனகரே யாவர். இவை ஒரே சௌனகர் இயற்றியவை அல்ல. இவரின் பெயரைக் கொண்டு இவரின் வழித்தோன்றல்களான இருவர் இயற்றியிருக்கலாம் எனச் சிலர் இதை மறுத்துரைப்பர். இருக்கு வேத சூக்தங்கள் போற்றிக் கூறும் தெய்வங்களின் வரிசையை விரிவாகக் குறிப்பிடும் நூல் பிருகத்தேவதை ஒன்றே. தெய்வங்களின் வரலாறு கூறுவதன் காரணமாக இந்நூல் இந்தியக் கதை இலக்கியத்தின் வளர்ச்சிக்குப் பெரிதும் வழிகோலியது என்பர். வரலாறு கூறும் நூல்களுள் இது முதலில் வைத்து எண்ணத்தக்கது. இதிற்காணப்படும் யாப்புமுறை, திருஷ்டுப் என்னும் யாப்பைக் கையாளும் வேதத்திற்கும், சுலோகத்தையே பெரிதும் கொண்டு விளங்கும் இதிகாசத்திற்கும் இடையில் எழுந்திருக்கலாம் என்பதை உணர்த்துகின்றது. இந்நூலுக்கும் மகா பாரதத்திற்கும் சில கதைகள் பொதுவாகக் காணப்படுகின்றன. ஆனால் பாரதத்தில் இருப்பது போல கதை இங்கு விரிந்தமையவில்லை. இருக்விதானமும் இவ்வாறு வரிசைப்படுத்திக் கூறும் நூல் ஒவ்வொரு சூக்தத்தையும் தனித் தனி பாட்டையும் படிப்பதனால் ஏற்படும் மந்திர சக்தியையும் இது எடுத்துக் கூறுகின்றது. இது ஏற்கனவே கூறிய சாம விதான பிராமணத்தை நிகர்க்கும். மிகப் பழைய காலத்திலேயே வேத சங்கிதைகள் இப்பொழுது காணப்படும் இதே வடிவில் இதே பிரிவுகளை உடையனவாய், இதே யளவான பாடல்களுடன் இற்றைய உருவத்தில் விளங்கின என்பதை இவ்வநுக்கிரமணிகள் அறிவுறுத்தும்.



வேதாங்கங்களுள் ஒன்றான நிருக்தம் என்னும் பிரிவைச் சார்ந்தது யாஸ்கர் இயற்றிய நிருக்தம். இது மட்டுமே இன்று எமக்குக் கிடைத்திருக்கும் நிருக்த நூல். இதுவும் இருக்கு சங்கிதை அன்றுள்ள நிலையிலேயே இன்றும் விளங்குகின்றது என்னும் உண்மையை நன்கு வலியுறுத்துகின்றது. யாஸ்கர், நிகண்டுகளை இயற்றியவர் என்பர். இது தவறு. இவர் ஏற்கனவே வழக்கிலிருந்த நிகண்டுகளுக்கு உரைவகுத்தவர். பரம்பரையாக வழங்கி வந்த நிகண்டுகளை எளிதில் விளங்க வைக்கும் நோக்குடனேயே தாம் நூல் எழுதியதை யாஸ்கரே குறிப்பிட்டுள்ளார். சொற்களை இங்கு ஐந்து தொகுதிகளாகப் பிரித்துள்ளார். முதற் பிரிவு 'நைகண்டுக காண்டம்' என்பது. கருத்துக்களைக் கவனித்துச் சொற்கள் இங்கு தொகுக்கப்பட்டுள்ளன. இங்கு மூன்று தொகுதிகள் உண்டு. இரண்டாம் பிரிவு, நைகம காண்டம் என்பது. படிப்போர் மனதில் ஐயம் விளைவித்து மயங்கவைக்கும் வேதச் சொற்களும், அருகி வருவதால், கருத்துத் தெளிவு பெறாத சொற்களும் இங்கு இடம்பெற்றுள்ளன. மூன்றாம் பிரிவாகிய தைவத காண்டத்தில் யாஸ்கர் தெய்வங்களை மண், விண், இடைவெளி என்பவற்றுடன் தொடர்பு காட்டி மூவகைப் பிரிவுபடுத்திக் கூறுகின்றார். வேத விளக்கங் கூறும் முறைக்கு இத்தொகுதி நூல்தான் தோற்றுவாய். நிருக்தங் கூறும் முறையைப் பின்பற்றி இந்நிகண்டுகளுக்கு விளக்கங்கள் எழுந்தன. வேதங்களிலுள்ள பாடல்களில் அக்காலத்தில் தெளிவுபெறாத பாடல்கள்தாம் இச்சந்தர்ப்பத்தில் விளக்கம் பெறுகின்றன. இதை அடுத்து நாளடைவில் வேதங்கள் முழு

வதற்குமே தொடர்ச்சியான விளக்க உரைகள் தோன்றலாயின. இதில் இருந்து யாஸ்கர் காலத்துக்கு மிகவும் முன்னரே இத்துறையில் ஈடுபட்டு நூல்கள் அமைத்தனர் என்பதும் யாஸ்கருடன் இம்மரபு நின்றுவிடாதவாறு இவ்வகை நூல்கள் தொடர்ந்து எழுந்தன என்பதும் தெளிவாகின்றது.

சந்தஸ், ஜ்யோதிஷம் என்னும் இரு வேதாங்கங்களைச் சேர்ந்த நூல்கள் பல இருப்பினும் இவற்றுள் பழைய நூல்கள் எதுவும் எமக்குக் கிடைத்திலை. சாமவேதத்தைச் சார்ந்த நிதான சூத்திரம் யாப்பு முறையைக் கூறும். இது இலக்கணத் தொடர்பு கொண்டது. பதஞ்சலி இதை இயற்றியவர் என்பர். பிங்கலரால் இயற்றப்பட்ட சந்தஸ் என்னும் நூல் இரு பிரதி பேதங்களை உடையது. இப்பிரிவுகள் இருக்கு, யசுர் ஆகிய இரு வேதங்களைச் சார்ந்தன எனக் கூறுவர். எனினும் சந்தஸ் பிற்காலத்தைய நூலே என்பது பெரும்பாலோரது கொள்கை. ஏனெனில், இது சம்ஸ்கிருத இலக்கியத்தில் உள்ள பாட்டுக்களின் யாப்பு முறையை மட்டுமே கூறி நிற்கும். ஜ்யோதிஷ வேதாங்கம் செய்யுள் வடிவாக அமைந்த சிறிய நூல். இது யசுர் வேதத்துடன் தொடர்பு பெறுகின்றது. இங்கு நாற்பத்து மூன்று பாடல்கள் இருக்கின்றன. இருக்கு வேதத்தைச் சார்ந்த ஜ்யோதிஷ வேதாங்கமும் இவ்வாறு முப்பத்தாறு பாடல்களை உடையதாகக் காணப்படுகின்றது. சூரிய சந்திரர்களின் நிலைகளையே இந்நூல்கள் கூறுகின்றன. உரை நடையில் இது அமைந்திருப்பதே இதைப் பிற்காலத்து நூலாகக் காட்டும் என்று கூறுவர்.

வியாகரண வேதாங்க நூல் ஒன்றுவது நமக்கு கிடைத்திலது. வேத விளக்கங் கூறும் மரபு வரத் தொடங்கிய பொழுது இவ்வேதாங்கமும் தோற்றியிருத்தல் கூடும். ஒவ்வொரு வேத சாகையையும் வளர்க்கும் ஆற்றல் இதற்கே உண்டு. ஆரணியகங்களிலேதான் இலக்கண பரிபாஷைச் சொற்கள் முதலில் காணப்படுகின்றன. நமது கைக்கெட்டிய முழு இலக்கண நூல்களுள் பழையது பாணினீயமே. இங்கு வைதிக இலக்கணம் விரிவாகக் கூறப்படாது சிற்சில விதிகள்



மட்டும் கூறப்படுவது நோக்கற்பாலது. இந்நூல் வேத சாகைகளுள் ஒன்றுடனாவது இணைக்கப்படாதிருப்பதும் கவனிக்க வேண்டுவதே. இது எழுந்த காலம் சமயப் பற்றற்ற தனி நிலையில் நூலமையச் சூழ்நிலை பொருந்திய காலம். சமயத்துடன் தொடர்பு பெற்றுச் சமய அடிப்படையிலேயே சாஸ்திரங்கள் தோன்றின எனினும், ஆசிரியர்கள் படிப்படியாக இவ் வழியினின்றும் விலகித் தனிவழி நின்று சமயப் பற்றற்ற நூல்களை எழுதும் மரபையும் தொடங்க வைத்தனர் என்பதை இந்நூல் அமைந்திருக்கும் நிலையைக் கொண்டு ஊகிக்கலாம். ஆனால் இம்முறை நன்கு வேரூன்றவில்லை.



# பொருளகராதி



## இந்நூலிற் குறிப்பிடப்பட்டுள்ள மேனாட்டு ஆராய்ச்சியாளர்கள்





